# காமஞ்சரி

(செய்யுள்-நாடகம்)

K. Savela.
Presidency College.



புலவர் குழந்தை




பாரி நிலையம்

59, பிராட்வே, சென்னை-1.

68-2

# முன்னுரை

மக்கள் ஒருவர்க்கொருவர் தத்தம் கருத்துக்களை வெளியிடு தற் கேற்ற கருவியாக அமைந்தது மொழியாகும். உலகின்-கண் பன்னூற்றுக் கணக்கான மொழிகள் வழங்குகின்றன. அவற்றுள், தமிழ்மொழி ஒன்றாகும். தமிழ்மொழி - முதலும் முதன்மையும் பழமையும் இளமையும் இயல்பும் எளிமையும் இனிமையும் உடைய தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு தனிமொழி யாகும். பேசவும் எழுதவும் படுதல், மிகப் பழமையும் இளமை யும் உடைமை, இலக்கியப் பரப்பும் இலக்கண வரையறையும் உடைமை ஆகிய இம் முப்பண்பும் உடைய மொழி - உயர் தனிச் செம்மொழி எனப்படும். இன்று உலகில் உள்ள உயர் தனிச் செம்மொழி தமிழ்மொழி ஒன்றே யாகும்.

இயல், இசை, நாடகம் எனத் தமிழ் மூன்று வகையினை உடையது. அதனால் தமிழ் முத்தமிழ் என்னும் சிறப்புப் பெயர் பெறலானது. பிறமொழிகளிலும் இம் முப்பிரிவும் உண் டெனினும், தமிழ்போல முத்தமிழ் என,வகையின் தொகை யாற் பெயர்பெற்று விளங்கும் அத்தகு சிறப்புடைமை வேறு எம்மொழிக்கும் வாய்க்கவில்லை. பயிற்சி வகையால் ஏற்பட்ட இம் முத்தமிழினுள், செய்யுளும் உரைநடையும் - இயற்றமிழ் எனப்படும். செய்யுள் அல்லது பாட்டினை இசையோடு பாடு தல்-இசைத்தமிழ் எனப்படும். பாட்டை இசையோடு பாடிக் கொண்டு, கேட்போர்க்குப் பாட்டின் பொருள் எளிதில் விளங் குதற் பொருட்டு, கண் முகம் முதலிய உறுப்புக்களின் வாயி லாய்ப் பாட்டின் கருத்து மெய்ப்பாட்டுக் குறிப்பாக வெளிப் படுமாறு நடித்தல்-நாடகத் தமிழ் எனப்படும். இதுவே முத் தமிழின் பொதுவிலக்கணமாகும்.

இயற்றமிழுக்குத் துணையாக இயன்றவையே இசையும் நாடகமும் எனினும், இசை கேட்போர்க்கு இன்பம் பயத்த லானும், நாடகம் கேள்வி யின்பத்தோடு காட்சியின்பமும் தருதலானும்,இயற்றமிழைவிட இசைநாடகத் தமிழை மக்கள்

பெரிதும் விரும்புவராயினர். இயற்றமிழ்ப் பாட்டுக்களை இசையுடன்பாடி, அப் பாட்டுக்களின் பொருள் எளிதில் புலனாகும்படி நடிப்பதே நாடகம் ஆகலான், நாடகத்தமிழ் ஏனையிரண்டையும் உறுப்பாகக் கொண்ட தொன்றாகும். பண்டு இயற்றமிழ்ப் புலவர்கள் போலவே, பாணர், பொருநர், கூத்தர், விறலி என்னும் இசை நாடகத் தமிழ்ப் புலவர்களும் இருந்து முத்தமிழையும் முறையாக வளர்த்து வந்தனர். நன்கு பேசத் தெரியாத இளங்குழந்தைகளும் என்னவோ வாய்க்கு வந்தவற்றை இசைபட உளறிக்கொண்டு தலையையும் கைகளையும் ஆட்டி, முகத்தைக் கோட்டி அசைந்தாடுவதே நாடகத் தமிழின் சிறப்புடைமைக்குச் சான்றாகும்.

பாட்டின் பொருள் புலப்பாட்டின் பொருட்டு மெய்ப்பாடு தோன்றநடிப்பதே பழந்தமிழ்நாடகத்தின் இலக்கணமாகும். பிற்காலத்தே கதை தழுவிய நாடகவகை தோன்றலானது. பொருநர், கூத்தர் என்னும் பெயர்களாலும், 'கூத்தாட்டவைக் குழாம்' என்னும் வள்ளுவர் கூற்றாலும், சங்க காலத்தேயே கதை தழுவிய நாடக வகை ஏற்பட்டிருந்ததென்பது ஒருவாறு புலனாகிறது.

இனி, இருவர் உரையாடற் பகுதியை இடையிடையே உடைய பொருட்டொடர்நிலைச் செய்யுளும் நாடகம் எனப்படும் என்பது, சிலப்பதிகாரத்தாற் பெறப்படுகிறது.

பிற்காலத்தே தோன்றிய கதை தழுவிய நாடக நூல்கள் விருத்தம், உரைநடை, இசைப்பாடல் என்னும் மூன்றுறுப்புக்களும் முறையே தொடர்ந்து வரப்பெறுவனவாகும். அரிச்சந்திர நாடகம்முதலிய நாடகநூல்கள் இவ்வகைக்கு எடுத்துக் காட்டாகும். தமிழ்நாடகநூலின் விரிவை, 'தொடையதிகாரம்' என்னும் எனது நூலில், 'நாடகம்' என்னும் தலைப்பிற் காண்க.

சென்ற நூற்றாண்டில் கதை தழுவிய தனி உரைநடையாலான நாடக நூல்கள் தோன்றலாயின. மறைமலையடிகளார், 'சாகுந்தலம்', பரிதிமாற் கலைஞர், 'ரூபாவதி' போன்றவை இவ் வகைக்கு எடுத்துக் காட்டாகும்.

இவ்வாறே கதை தழுவிய தனிச்செய்யுள் நடையாலான நாடக நூல்களுந் தோன்றின. பேராசிரியர், பி. சுந்தரம் பிள்ளை அவர்களின் மனோன்மணீயம் என்னும் நாடகநூல் இவ்வகைக்கு எடுத்துக் காட்டாகும்.

வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டு அப்படியே செய்தலன்றி, உள்ளோன் தலைவனாக இல்லது புனைந்தும், இல்லோன் தலைவனாக உள்ளது புனைந்தும் செய்தல் நாடக நூலின் மரபாகும். முன்னது வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு நிகழாத நிகழ்ச்சிகளைக் நிகழ்ந்தவையாகக் கொண்டு செய்தல்; பின்னது கற்பனையாக நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டு செய்தல்; வரலாறு, கற்பனை, மொழி பெயர்ப்பு, தழுவல் என்னும் நான்கு வகையில் நாடக நூல்கள் செய்தல் மரபாகும்.

காமஞ்சரி என்னும் இந்நாடகம், ஆங்கிலப் பெருங் கவிஞரான மத்தேயு அர்னல்டு (Mathew Arnold) என்பவரால் செய்யப்பட்ட சோராப்பும் ருஸ்தமும் (Sohrab and Rustum) என்னும் ஆங்கில நூலைத் தழுவிச் செய்யப்பட்டதாகும். அவ்வாங்கில நூல், கி.மு. ஆறுநூற்றுண்டில் நடந்த ஒரு பாரசீகக்கதையை, கி.பி. பத்தா நூற்றுண்டினரான பிர்தோசி(Firdausi) என்னும் பாரசீகக் கவிஞரால் செய்யப்பட்ட சோராபின் கதை (Story of Sohrab) நூலை மூலமாகக் கொண்டு செய்யப்பட்டதாகும்.

காமஞ்சரி என்னும் இந்நூல், அவ் வாங்கில மூலக் கதையைத் தழுவி, தமிழ் மரபுக் கேற்ப, அதைத் தமிழ் நாட்டுக் கதையாக்கிச் செய்யப்பட்டதாகும். இந் நாடகம் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு, மூலக் கதையில் வரும் இடங்களையும் நடிகர் பெயர்களையும் தமிழாக்கி, நாடக வழக்கிற் கேற்பச் செய்யப்பட்டுள்ளது. தமிழ் மரபுக்கும் நடைமுறைக்கும் ஏற்பச் சில மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளனவேயன்றிப் பெரும்பாலும் மூலக்கதையில் உள்ள நிகழ்வுகளே இந்நாடகத்தில் இடம்பெற்றுள்ளன.

# கதைச் சுருக்கம்

பழந்தமிழகத்தின் உள்நாடுகளிலொன்ருன கொங்கு நாடு,சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்த ராட்சிக் குட்படாது என்றும் தனியாட்சி நாடாகவே இருந்து வந்தது. கொங்கு வேளிர் மரபினர் பலர் அங்கங்கே இருந்து இக் கொங்கு நாட்டினை ஆண்டு வந்தனர். இவர்கள் மூவேந் தர்கட்குப் படைத்துணைக் குரியராகவும் மகட்கொடைக் குரியராகவும் இருந்து வந்தனர்.

வடக்கே கொள்ளேகால் வட்டத்திற்கும் மைசூர் நாட் டிற்கும் எல்லையாக உள்ள காவிரியாற்றையும், கிழக்கே சேலமாவட்டத்திற்கும் கோவை மாவட்டத்திற்கும் எல்லை யாக உள்ள காவிரியாற்றையும்,தெற்கே நொய்யலாற்றையும், மேற்கே நீலமலையையும் எல்லையாக உடைய கோவை மாவட்டத்தின் வடபகுதி - வடகொங்கு எனப்படும். சத்திய மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு அவ் வடகொங்கு நாட்டைக் கட்டி மரபினர் ஆண்டு வந்தனர்.

கி.பி. இரண்டா நூற்ருண்டின் பிற்பகுதியில் பல்வேற்கட்டி என்பான் அவ் வடகொங்கு நாட்டை ஆண்டு வந்தான். கொங்கு இருபத்து நான்கு நாடுகளில் ஒன்ருன ஓடுவங்க நாட்டின் உள்நாடான நறையூர் நாட்டுத் தலைவனை நரையூர்க்கிழான் என்பான் கட்டியின் பெரும்படைத் தலைவ ஞக இருந்து வந்தான். இவன் கட்டியின் அத்தை (தந்தை யின் தங்கை) கணவனுவன்.

பல்வேற்கட்டியிடம் பாடலம் என்னும் அடங்காக் குதிரை யொன்று இருந்தது. நறையூர்க்கிழான் மைந்தனுன பழையன் என்பான், அக்குதிரையை அடக்கிக் கட்டியின் நன்மதிப்பைப் பெற்ருன்.

பல்வேற்கட்டி காலத்தே, கொங்கு நாட்டை அடுத்து, வடக்கிலுள்ள கங்க நாட்டை (மைசூர் நாட்டை) வீரகங்கன் (கி. பி. 143-168) என்னும் கங்கமன்னன் ஆண்டு வந்தான்.

அவன் கொங்கு நாட்டைக் கைப்பற்ற எண்ணித் தன் படைத் தலைவனான தெற்காணம்பி என்பானைக் கொங்கு நாட்டின் மேற் படையெடுக்கும்படி செய்தான். இதை ஒற்றரால் அறிந்த பல்வேற் கட்டி, பழையன் தலைமையிற் பெரும்படை யொன்றை அனுப்பினான். பழையன் கங்கரைப் புறங்காட்டி ஓடும்படி செய்து மீண்டான். கட்டியின் அவைப் புலவரும், அமைச்சருமான சாத்தந்தையார் என்பாரின் கருத்துப்படி, வடகொங்கின் வடக்கெல்லையான காவிரியின் தென்கரையில் பழையன் தலைமையிற் காவற்படை யொன்றை வைத்தான் கட்டி.

காவிரிக்கரைக் காவற்பாசறையி லிருந்த பழையன் ஒரு நாள் தனியாகப் பாடலம் என்னும் தன் குதிரைமேலேறிக் கொண்டு, இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிக்க மேற்கு நோக்கிச் சென்றான். சென்றவன், கொள்ளேகால் வட்டத்தின் மேற்கிலுள்ள கங்கநாட்டைச் சேர்ந்த மலைச்சாரலை யடைந்தான்.

கங்க நாட்டின் உள்நாடான தென்பாலி நாடு என்னும் அப்பகுதி மலையன் என்னும் மன்னனுடையது. அவன் வீரகங்கன் கீழ்ச் சிற்றரசன். மலையனுக்குக் காமஞ்சரி என்ற ஒரே மகள். அவள் தன்தோழி மாலதி என்பாளுடன் நகர்ப்புற மலைச் சாரலை யடைந்து இருவரும் பூக்கொய்துகொண்டு விளையாடினர்; பின் ஒரு தாழைவீழ் ஊசலில் ஆடிக்கொண்டிருந்த போது, வெறிக்களிறொன்று அவர்களை நோக்கி வரக்கண்டு அஞ்சி யலறினர். அவ் வழியாகச் சென்ற பழையன் அக் களிற்றைக் கொன்று, காமஞ்சரி என்னும் அவள் பெயரை மட்டும் கேட்டறிந்ததோடு அங்கு நின்றும் சென்றனன். அக் காட்சியால் இருவர்க்கும் காதலுணர்ச்சி ஏற்பட்டது.

அன்று இரவு ஓரிடத்தில் தங்கியிருந்தபோது பழையன் குதிரை களவுபோய்விட்டது. குதிரையை யிழந்த பழையன் மிகவும் வருந்தி அதைத் தேடிக்கொண்டு பலபக்கமும்

அலைந்து திரிந்தான். வழியிற் கண்ட ஒருவன், பக்கத்தில் தென்பாலி நகர் உள்ளது, அங்கு சென்று இந்நாட்டின் தலைவனான மலையனிடம் கூறினால், குதிரையைக் கண்டு பிடித்துத் தருவான் எனவே, பழையன் அவ்வாறே தென்பாலி நகர்க்குச் சென்றான். அரண்மனைத் தெருவிடைச் செல்லும்போது மாடிமேலிருந்த காமஞ்சரியைப் பழையனும் பழையனைக் காமஞ்சரியும் கண்டு காதல் கொண்டனர்.

பழையன் அரண்மனைக்குச் செல்ல, மலையன் அவனை அன்புடன் வரவேற்றுக் குதிரையைக் கண்டுபிடித்துத் தருவதாயும், அதுகாறும் அரண்மனை விருந்தினனாக இருந்துவருமாறும் கூற, பழையன் அவ்வாறே இருந்து வந்தான்.

பழையனும் காமஞ்சரியும் ஒருநாள் அரண்மனைப் பூங் காவில் தனியாக எதிர்ப்பட்டுக் காதல் முதிர்ந்து மணஞ் செய்து கொள்ள முடிவு செய்தனர். நற்றாய் வாயிலாய் இதையறிந்த மலையன் அதற்கு உடன்பட்டான். இந்நிலை யில் களவுபோன குதிரை கிடைக்கப்பெறவே பழையன் மிகவும் மகிழ்ந்தான். காமஞ்சரிக்கும் பழையனுக்கும் திருமணம் நடந்தது. பழையன் சிலமாதங்கள் அங்கேயே இருந்து வந்தான். காமஞ்சரி கருவுற்றாள்.

தன் தந்தைக்கு உடல்நலமில்லையெனக் கேள்வியுற்ற பழையன், பகைவர் நாட்டுப் பெண்ணாகிய காமஞ்சரியை உடனழைத்துச் செல்ல விரும்பாமல், அவளை அங்கேயே இருக்க உடன்படச் செய்து, உனக்கு ஆண்குழந்தை பிறந்தால், நான் என் மகன் என அடையாளந் தெரிந்து கொள்வதற்காக இக் குளிசத்தை அதன் கையில் கட்டி அங்கு அனுப்பு, பெண்குழந்தை பிறந்தால் இங்கேயே இருக்கட்டும் எனக் கூறிச் சென்றான்.

காமஞ்சரிக்கு ஆண்குழந்தை பிறந்தது. ஆனால், அதைப் பிரிய மனமில்லாத அவள், பெண்குழந்தை பிறந்துள்ளதாகப் பழையனுக்குச் சொல்லி அனுப்பிவிட்டாள்.

பல்வேற்கட்டி தன் முதுமையின் பொருட்டும், தன் மகன் மிக்க இளவலாயிருந்ததனுலும், ஆட்சிப் பொறுப்பைப் பழையனிடம் ஒப்படைத்தான். ஆட்சிப் பொறுப்பேற்ற பழையன் காமஞ்சரியை மறந்து, அங்கு செல்லாமலே இருந்து விட்டான்.

காமஞ்சரி அவ் வாண்மகனுக்குக் கொங்குவேள் என்று பெயர் வைத்து அன்புடன் வளர்த்து வந்தாள். கொங்கு வேள் அறிவுவரப்பெற்றதும் தன் தந்தை எங்கே என்று கேட்ட போதெல்லாம், எங்கெங்கோ சென்றுள்ளா ரெனப் பொய் கூறிவந்த காமஞ்சரி, ஒருநாள் உண்மையைக் கூறி வருந்தினுள். பழையன் தன் தந்தையெனக் கேட்ட கொங்குவேள் அகமிக மகிழ்ந்து, "வீரகங்கன் கொங்கு நாட்டின்மேற் படையெடுக்கத் தன் படையைப் பெருக்கி வருகிருன். நான் தலைக்காடு சென்று வீரகங்கன் படையிற் சேர்ந்து பயின்று பெருவீரனுகி அவன் கொங்கு நாட்டின்மேற் படையெடுத்தால், அபபோது என் தந்தையைக் கண்டு களிப்பேன்" என்ருன். "அறிமுகமில்லாத நீ அவரை எப்படிக் கண்டு களிப்பாய்? கொங்கு நாடு போகும்போது இங்கு வா, உந்தையைக் காண ஒரு வழி சொல்கிறேன்" என்ருள் காமஞ்சரி. அவ்வாறே கொங்குவேள் தலைக்காடு சென்று, கங்கப் படையிற் சேர்ந்து பயின்று. வீரகங்கன் பாராட்டும் அத்தகு சிறந்த வீரனுக விளங்கினுன்.

இங்ஙன மிருக்க, பல்வேற்கட்டியின் புதிய படைத்தலைவனுன மழவன் என்பான் பழையனது பெருமை கண்டு பொருமை கொண்டு, "பழையனை நாட்டு மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். இப்படியே விட்டிருந்தால் அவனே நிலையான அரசனுகி விடுவான். அப்புறம் இளவரசன் அரசற்றவனுகி விடுவான்" எனக் கட்டியின் மனத்தைக் கலைத்துப் பழையனை ஆட்சிப் பொறுப்பினின்று நீக்கும்படி செய்தான். ஆட்சிப் பொறுப்பினின்று நீக்கப்பட்ட பழையன், நறையூர் சென்று அமைதியாக இருந்து வந்தான்.

பல்லாண்டுகளாகப் படையைப் பெருக்கிக் கொண்டு காலம் பார்த்திருந்த வீரகங்கன், இதை யறிந்ததும், கொங்கு வேளைத் துணைப் படைத்தலைவனுக்கித் தெற்காணம்பியைக் கொங்கு நாட்டின்மேற் படை யெடுக்கும்படி செய்தான். படை புறப்படுமுன் கொங்குவேள் தென்பாலி சென்று, தன் தாய் கொடுத்த தந்தையின் குளிசத்தைப் பெற்றுச்சென்றான்.

கங்கன் படையெடுத்துள்ளதை அறிந்த கட்டி, மழவன் தலைமையில் பெரும்படை யொன்றை அனுப்பினான். இரு படையும் கங்கநாட்டுக்கும் கொங்கு நாட்டுக்கும் எல்லையாக உள்ள காவிரியின் இருகரையிலும் கூடாரம் அடித்துத் தங்கின.

அன்று இரவில், கொங்குவேள் 'விடிந்தால் போர் தொடங்கும். தந்தையையோ எனக்கு அடையாளந் தெரி யாது. என்னை அவர் பார்த்ததேயில்லை. அவருக்கு நான் பிறந்திருப்பதே தெரியாது. எப்படி என்னை அவர் மகனென்று நம்புவார்' என்று பலவாறு எண்ணிய வண்ணம் கண்ணுறங்கா திருந்து, முடிவில். தன்னுடன் தனிப்போர் செய்ய ஒரு வீரனை அனுப்பும்படி கொங்குப்படைத் தலைவனுக்கு அறைகூவல் விடுத்தால், தன் தந்தையைத் தவிரத் தன்னை எதிர்க்கத்தக்க வீரன் அங்கு இல்லையாகையால், தன் தந்தையே தன்னுடன் தனிப் போர் புரிய வருவார், அப்போது இக்குளிசத்தை காட்டித் தன்னை அறிமுகம் செய்து கொள்ளலாம் என்று முடிவு செய்து கொண்டு, அந் நள்ளிரவிலேயே கங்கர் படைத் தலைவனான தெற்காணம்பியிடம் சென்று தன் கருத்தைக் கூறினான். அவன் எவ்வளவோ மறுத்தும் கேட்காமல், தனிப் போர் செய்யவே விரும்ப, அவன் பழையன் ஆட்சிப்பொறுப்பி னின்று நீக்கப்பட்டு அரசியலினின்று ஒதுங்கியிருக்கிறான் என, தாய்நாட்டின்மீது பகைவர் படையெடுத்துள்ளபோது நாட்டுப் பற்றுள்ள அவன் வாளா ஊரில் இரான்; கட்டாயம் இங்கு வந்திருப்பான் என, படைத்தலைவன் கொங்குவேளின் விருப்பப்படியே தனிப்போர்க்கு உடன்பட்டான்.

விடிந்ததும், ஒரு தூதனைக் கொங்குப் படைத்தலைவனிடம் அனுப்பினான் நம்பி. கொங்குப் படைத்தலைவனை மழவன் அவ்வாறே அனுப்புவதாகக் கூறித் தூதனை அனுப்பி விட்டு, கொங்குவேளுடன் தனிப்போர் செய்ய நம்மில் யாருளாரென வருந்த, குமரன் என்னும் பேரணித் தலைவன் 'நாட்டுப் பற்றுள்ள பழையன் அரசன் அழைக்காவிடினும் பகைவர் படையெடுத்து வந்துள்ளதை அறிந்து வாளா நறையூரில் இருக்கவில்லை; இரவில் வந்து அதோ தனியாக அங்கே கூடாரமடித்துத் தங்கியுள்ளான். நான் சென்று அவனைக் கொங்குவேளுடன் தனிப்போர் செய்யும்படி உடன்பாடு பெற்று வருகிறேன்' எனக் கூறிச் சென்று பழையனிடம் கூறப் பழையன் அதற் குடன்பட்டான். ஆனால், தான் பழையன் என்பது பகைவர்க்குத் தெரியக் கூடாது என்று கட்டளை யிட்டான்.

பின்னர், இருபடை வீரரும் எதிரெதிர் அமைதியாக அமர்ந்திருக்க, பழையனும் கொங்குவேளும் தனிப்போர் புரியக் களத்தை நோக்கி வந்தனர். ஒருவரையொருவர் கண்டதும் இருவர்க்கும் பகையுணர்ச்சி மாறித் தந்தை மைந்தன் போன்ற அன்புணர்ச்சி உண்டானது.

பழையன், கொங்குவேளை அருகழைத்து, 'குழந்தாய்! நீ யேன் என்னோடு தனிப்போர் புரிந்து சாகத் துணிந்தனை? என்னுடன் கொங்கு நாட்டுக்கு வந்துவிடு. என் மகனாக இரு. உன்னைக் கண்டதும் உன்னைப் பகைவனாக எண்ண என்மனம் ஏனோ இடந்தரவில்லை' என்றான். கொங்குவேளும் தனக்கும் அவ்வாறே தோன்றுகிறது. தாங்கள் பழையன் என்பவரல்லவா?' என்றான். 'ஏன், நான் யாராயிருந்தால் என்ன? ஏன் உனக்குப் பழையனோடு பொர விருப்பமில்லையா?' என்றான் பழையன். 'விருப்ப மில்லாமலில்லை. தாங்கள் யாரென அறிந்துகொள்ளக் கேட்டேன்' என்றான் கொங்கு வேள்.

"நீ அவனிடம் உடன்பாடு செய்து கொண்டு போய், நான் தனிப்போர் புரிய அறைகூவல் விடுத்தேன், பழையன்

என்பவன் முன்வந்தான். ஆனால், அவன் என்னிடம் பரிசு பெற்றுக் கொண்டு என்னோடு உடன்பாடு செய்து கொண்டான்' என்று கொங்கரைப் பழித்துக் கங்கர் பாராட்டுதலைப் பெறப்பார்க்கிறாயா? நான் உன் அறைகூவலை ஏற்று வந்துள்ளேன். என்னோடு பொர வா'' என்றான். மீண்டும் நீ பழையன் அல்லவா என்றான் கொங்குவேள். 'இல்லை என்னிடம் அடைக்கலம் புகுந்துவிடு. இல்லையேல் உன் எலும்புகள் நொறுக்கப்பட்டுத் தூள்தூளாகிக் காவிரி மணலிற் கலந்து வெள்ளத்தில் சென்று விடும்' என்றான் பழையன். கொங்குவேள், 'என்னை அத்துணை எளியவனாக எண்ணாதே' என்று வெகுண்டான். முதலில் இருவரும் மற்போர் செய்தனர். பின்னர் வாள் வேற்போர் செய்தனர்.

மீண்டும் கொங்குவேள், 'எனக்கு ஏனோ உன்பால் இரக்கம் உண்டாகிறது. போரை நிறுத்தி இருவரும் இவ்வாற்று மணலில் இருந்து அன்புரை யாடுவோம். பழையன் பெருமையைச் சொல். நான் கேட்டின்புறுகிறேன்' என்றான். பழையன் வெகுண்டு, உன்பாற் காட்டிய அன்பு ஓட்டம் பிடித்தது என, வேலால் எறிந்தான். அதைக் கொங்குவேள் கேடயத்தால் தடுத்தான். கொங்குவேள் வாளால் ஓங்கி வெட்டினான். கொங்குவேள் தலையுறை (தலைக்கவசம்) பொடி படலானது. பழையன் ஒரு தண்டினால் ஓங்கி எறிந்தான், அவ்விசையைப் பொருது பழையன் கீழே விழுந்துவிட்டான். ஆனால், கொங்குவேள் அவனை ஒன்றும் செய்யாமற் பார்த்துக்கொண்டே நின்றான்.

பழையன் வெகுண்டெழுந்து, 'ஆஅ! நான் பழையனா !' என இடியென முழங்கினான். பழையன் என்ற அப்பெயரைக் கேட்ட கொங்குவேள் உணர்ச்சியற்றான். அவன் கையிலிருந்த கேடயம் நழுவிக் கீழே விழுந்து விட்டது. பழையன் ஈட்டியால் மார்பில் குத்தினான். கொங்குவேள் அடியற்ற மரம்போல் தரையில் விழுந்தான்.

தரையில் விழுந்த கொங்குவேள், இதையறிந்தால் என் தந்தை பழையன் உன்னைப் பழிவாங்காதிரார் என்றான்.

பழையனுக்கு ஆண்பிள்ளை இல்லை என்ருன் பழையன். ‘இல்லை, ஆண்பிள்ளை உண்டு. நான்தான் அப்பிள்ளை’ என்று தன்கையில் கட்டியிருந்த குளிசத்தைக் காட்டித் தன் வரலாற்றைக் கூறினுன் கொங்குவேள். கொங்குவேள் தன் மகனெனஅறிந்ததும், பழையன் பலவாறு புலம்பியழுது, ‘மகனே! நீ பலமுறை, ‘நீர் பழையனு பழையனு’ என்று கேட்டும், ‘ஆம்’ எனக் கூருது உன்னைக் கொன்றுவிட்டேன். இதோ உனக்கு முன் என் உயிரை மாய்த்துக் கொள்கிறேன்’ என உடைவாளை உருவினுன். கொங்குவேள் தடுத்து, அறியாமல் நேர்ந்ததற்காக வருந்தாதீர்கள் என்று தேற்றினுன்.

அதுபோது, கொங்குவேள் தனிப்போர் புரிகிருன் எனக் கேள்விப்பட்ட காமஞ்சரி, அவனுடன் அவன் தந்தைதான் எதிர்த்துப் பொருவார்; என்ன நேருமோ என்று குதிரையிலேறிப் போர்க்களம் நோக்கி விரைந்து வந்தாள். அவ்வாறே நிகழ்ந்தது கண்டு அழுது புலம்பி, தான் பொய்கூறியதால் விளைந்த விளைவைக் கூறி வருந்தினுள். கொங்குவேள், ‘என் சாவு நெடுநாட் பிரிந்திருந்த உங்களை ஒன்று கூட்டியது. நான் போர்க்களத்தில் என் தந்தையைக் கண்டு களித்தேன். எனக்கொரு குறையும் இல்லை. என் பிறப்பின் பயனை அடைந்தேன். தாங்கள் ஒன்றுகூடி வாழுங்கள்’ எனப் பெற்ருேரைத் தேற்றி, ‘நான் வருகிறேன்’ என்று கூறி மார்பில் தைத்திருந்த வேலைப் பிடுங்கி உயிர் விட்டான். தாயும் தந்தையும் ‘ஐயோ மகனே’ என்று அவன்மேல் விழுந்து அழுதனர். இருபடை வீரரும் கண்கலங்கிக் கண்ணீர் விட்டனர்.

### விளக்கம்

இந் நாடகத்தில் வரும் வடகொங்கு மன்னனுன பல்வேம் கட்டியும், கங்க மன்னனுன வீரகங்கனும் வரலாற்றுக் குட்பட்டவராவர். வீரகங்கன் (வீரராயன்) கி. பி. 143 முதல் 168 வரை தலைக்காட்டிலிருந்து கங்கநாட்டை ஆண்டு வந்தான். அவன், பலமுறை கொங்குநாட்டின்மேற் படையெடுத்து, இறுதிக் காலத்தே வடகொங்குநாட்டின் மலைச்சாரற்கோட்

டையான காந்தபுரம் என்பதைக் கைப்பற்றினன். அது பிற் காலத்தே தணுயக்கன் கோட்டை எனப்பெயர் பெற்று,இன்று கீழ்பவானி அணைத்தேக்கத்துள் மூழ்கிவிட்டது. அப்போது பல்வேற்கட்டி இறந்து அரசு சீர்குலைந்த நிலையை அடைந் திருக்கலாம். வீரகங்கன் தன்பெயரால் ஒரு பொன் நாணயம் வெளியிட்டான். அது, வீரராயன் பணம் என வழங்கிற்று. கொங்கு நாட்டில் அப்பணம் இந்நூற்ருண்டின் தொடக்கம் வரை கிடைத்து வந்தது. 'கெண்டி வீரராயன் கேசரி சக்கரம்' என்பது, கொங்குவேளாளர் மங்கல வாழ்த்துப் பாடல். பின் வந்தோர் சத்தியமங்கலத்தைக் கைப்பற்றிக் கொள்ள, கட்டி மரபினர்,சேலமாவட்டத்து ஓமலூர் வட்டத்திலுள்ள தாரமங் கலத்தைக் கைப்பற்றிக் கொண்டு, கி.பி. 1672வரை அப்பகு தியை ஆண்டு வந்தனர். கங்க மன்னர்கள் 31 பேர், கி. பி. 1024 வரை அந்தியூர்க்கு மேற்கில் வானியாற்றிற்கு வடக்கி லுள்ள வடகொங்கு நாட்டுப்பகுதியை ஆண்டு வந்தனர். இதன் விரிவை, எனது 'கொங்கு நாடு' என்னும் நூலிற் காண்க.

### கங்கரும் கட்டியரும்

" முல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேயத்த ராயினும் " (குறுந்-11, மாமூலர்)

" நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி " (அகம்-265. பரணர்)

" பாடின் தென்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய ஆர்ப்பினும் பெரிதே ! " (அகம் - 44)

" கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர் " (சிலப்- 25: 156 - 7)

சத்திய மங்கலம்: இது சத்தி என்பவன் பெயரால் ஏற் பட்ட ஊராகும். சக்தி என்பதன் தற்பவ மன்று சத்தி என்பது; அத்தி என்பது போன்ற தமிழ்ப்பெயரே யாகும்.

பொதினியை (பழனி) ஆண்ட ஆவி மரபினர் ஆவியர் எனப் படுதல் போலச் சத்தி மரபினர் சத்தியர் எனப்பட்டனர். அசோகன் (கி.மு. 273-232). கல்வெட்டில் குறிக்கப்பெறும் 'சத்தியபுத்திரர்' என்பார் இம் மரபினரே யாவர். புத்திரர்-அரசர். தமிழகத்துக்கு வந்த மோரியர் முதலில் சத்திய மங்கலத்தைத்தான் கண்டிருப்பர். ஆகையால் அதைக் கோங்கு நாட்டின் அரசநகரெனக் கொண்டனர். சத்திய மங்கலம், கொங்கு நாட்டிலிருந்து மைசூர் செல்லும் வழியில் வானியாற்றங்கரையில் உள்ளது.

நறையூர்நாடு-வடகொங்கு நாட்டின் உள்நாடுகளில் ஒன்ருன ஒடுவங்க நாட்டின் உள்நாடு. நறையூர்-சத்தியமங் கலத்தை அடுத்து வானியாற்றங் கரையில் இருந்தது. தலைக்காடு-கங்க நாட்டின் தலைநகர். இது மைசூர் நாட்டின் தென்பகுதியில் உள்ளது. மைசூர் நாடே பழைய கங்க நாடாகும். தென்பாலிநாடு-இது கங்க நாட்டின் உள்நாடு. தென்பாலிநாடு என்பது கற்பனைப் பெயர். இது, கொள்ளே கால் வட்டத்தை அடுத்து மேற்கில் உள்ள கங்க நாட்டின் உள்நாடு.

பல்வேற்கட்டியும் வீரகங்கனும் வரலாற்றுக் குட்பட்டவர். மற்றவர் மூலக்கதையில் உள்ள பெயர்களின் தமிழ்ப் பெயர். சாத்தந்தையார் -மூலக்கதையில் இல்லாத பெயர். அவை யோன்-புதியபடைப்பு; சிறந்த அறிவுள்ளவன். காமஞ்சரி போர்க்களம் வருதல் மூலக்கதையில் இல்லை.

பெயர்: நாடகத் தலைவியாகிய காமஞ்சரியே இந்நாடகக் கதை நிகழ்ச்சிக்குப் பெரும்பாலும் காரணமாகையால், அவள் பெயரையே இந் நாடகத்திற்குப் பெயராகச் சூட்டப்பட்டது.

இந் நாடகத்தில் தமிழர் வாழ்க்கை முறையான அகப் பொருளும் புறப்பொருளும் ஒருவாறு முறையாக அமைந்துள் ளன. கதை நிகழ்ச்சி, கி.பி.இரண்டாம் நூற்ருண்டின தாகை யால் அக்காலக் கண்கொண்டே இதனை நோக்க வேண்டும்.

இந் நாடகம் படித்தற்கே யன்றி, அப்படியே செய்யுள் நடையி லேயே நடித்தற்கும் ஏற்றவாறு, ஒரு காட்சியில் வரும் நடிகர்கள் அடுத்த காட்சியில் இடம்பெறாமல் காட்சிகள் அமைக் கப்பட்டுள்ளன. ஒரே காட்சியில் பல இடங்களில் நடைபெறும் நிகழ்ச்சியைத் திரை எனக்காட்சியின் உறுப்பாகக் கொள்ளப் பட்டுள்ளது. கண்டோர் கூற்றுக்களால் கதைத்தொடர்பு இடையறாது நிகழுமாறு அமைக்கப்பட்டுள்ளது.

உரையாடற்கு எடுப்பாக இருத்தற்பொருட்டுஆசிரிய அடி கள் பெரும்பாலும் பொழிப்பெதுகைத் தொடையமைய இயன் றுள்ளன. இந் நாடகத்துள் ஆசிரியப்பாவே யன்றி,வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, ஆசிரியத்தாழிசை, கலித் தாழிசை,வஞ்சித்தாழிசை,குறள்வெண்செந்துறை, தாழிசை, சிந்து முதலிய பாக்களும் பாவினங்களும் ஒருசில விரவி வந் துள்ளன. பாக்கள் தனித்தமிழில் செவ்விய சீரிய நடை யில் இலக்கியச் சுவைபட அமைந்துள்ளமையைச் சுவைத் தின்புறுக.

தமிழன்னையின் புத்தணியாகிய இந்நாடகத்தைத் தமிழ் மக்களின் உடைமை யாக்குகின்றனன்.

பவானி
6-3-'68

அன்புள்ள,
குழந்தை.

## உள்ளுறை

## நாடக நடிகர்கள்

| | | |
|---|---|---|
| பல்வேற்கட்டி | — | வடகொங்கு மன்னன். |
| நறையூர்க்கிழான் | — | நறையூர் நாட்டுத் தலைவன், கட்டியின் படைத் தலைவன் |
| பழையன் | — | நறையூர்க்கிழான் மகன். |
| கொங்குவேள் | — | பழையன்—காமஞ்சரி மகன். |
| சாத்தந்தையார் | — | கட்டியின் அவைப்புலவரும், அமைச்சருமாவர். |
| மழவன் | — | கட்டியின் புதிய படைத் தலைவன். |
| குமரன் | — | கொங்குப் படையின் பேரணித் தலைவன். |
| வீரகங்கன் | — | கங்கநாட்டு மன்னன். |
| தெற்காணம்பி | — | கங்கன் படைத்தலைவன். |
| மலையன் | — | தென்பாலி நாட்டுத் தலைவன். |
| காமஞ்சரி | — | மலையன் மகள். |
| மாலதி | — | காமஞ்சரியின் தோழி |
| பாடலம் | — | பழையன் குதிரை. |
| பிற நடிகர் | — | செவிலி, நற்றாய், கண்டோர், ஒற்றர், தூதுவர், அவையோன், வாயிலோர், வீரர், பாணர், உழவர், நகரமக்கள் முதலியோர். |
| நாடக நிகழிடம் | — | சத்தியமங்கலம், தலைக்காடு, தென்பாலிநகர், நறையூர் காவிரிக்கரை முதலியன. |
| காலம் | — | கி.பி. 143-168 இன் இடைப்பகுதி. |

# காமஞ்சரி

பாயிரம்

தமிழ்த்தாய் வாழ்த்து

நேரிசை வெண்பா

பூமஞ் சரிபோற் பொலிவும் பொலிதேனுங்
காமஞ் சரியினுங் கண்டுவக்க— ஏமஞ்செய்
அன்புற் றகலா அழகு தமிழ்த்தாயே !
இன்புற்றென் நாவில் இரு.

பஃருழிசைக் கொச்சகக் கலிப்பா

உலகமுதன் மக்களுளத் துணர்ச்சியினை வெளிப்படுத்தப்
பலபொருளின் அவையியலப் பலவினையின் அறிகுறியா
வலிதினுயிர் முயற்சியினுல் வருந்தாமல் வாய்மலர்ந்து
சொலவெளிதாச் செவிநுகருஞ் சுவையினிதாத் தொகைநிரம்பி
இலகுமொலி வரிவடிவா இனிமையியல் பெளிமையொடு
நிலவுமுதன் மொழிபயிலும் நீடுபுகழ்த் தமிழணங்கே. 1
பின்னெழுந்த மொழிபலவும் பின்னடைந்து பெயரளவில்
தன்னெழுந்த நிலைகுறித்துத் தன்னளவிற் ருனிருப்ப
மின்னெழுந்த சுடர்ப்பொறியின் மிடைந்தெழுந்த இவ்வுலகில்
முன்னெழுந்த பெருமையொடு மூத்திளையா இளமையுடன்
என்னெழுந்த மொழிபலவா நிலவிடுநின் இயல்பறிந்தே
நின்னெழுந்த வேட்கையினுல் இனிதுவந்து வாழ்த்துதுமே. 2

—இவை இரண்டும் ஆறடித்தரவு

பஃறுளியாற் றங்கரையிற் பாண்டியர்தொன் மதுரையின்கண்
வெஃகிடவே புத்துலகம் மிகவாய்ந்து விளங்கினையே. 1
மற்றுவண்கு மரிக்கரையில் வழுதியர்தென் மதுரையின்வாய்க்
கற்றவெலா நன்காய்ந்து கவிச்சுவையாக் கவின்றனையே. 2
தீம்புனல்வை யைக்கரையிற் றென்னவர்தம் மதுரையின்பால்
ஆம்பொருள்களத்தனையும் ஆய்ந்துநலம் பெற்றனையே. 3
நாவலர்தம் பாவளத்தால் நடைபிறழா முடியுடைய
மூவர்கள்செங் கோல்வளத்தால் முறையாக வளர்ந்தனையே. 4

பல்காப்பி யம்பயின்ற பாவலர்கள் பாராட்டத்
தொல்காப்பி யக்கடலிற் றோய்ந்துவிளை யாடினையே. 5

வள்ளுவர்செய் திருக்குறளால் வாழ்வியலின் றிறமனைத்தும்
உள்ளுறையாக் கொண்டுலகம் ஒருநிகரா உயர்ந்தனையே. 6

பத்துப்பாட் டெட்டொகையால் பழந்தமிழர் வாழ்வியலை
ஓத்துப்பார்த் தெம்மனையோர் உயர்ந்திடச்செய் துவந்தனையே. 7

இளங்கோவின் செஞ்சிலம்பை இனிதணிந்து தமிழுலகின்
வளங்காணக் கலகலென மகிழ்ந்துலவி வந்தனையே. 8

அகம்புறமென் றேவகுத்த அப்பொருளி னிலக்கணத்தால்
உகந்துயர்ந்திவ் வுலகினரை ஊமையராச் செய்தனையே. 9

எத்திசையி னத்தவர்க்கும் இல்லாத இயற்பெயரா
முத்தமிழென் றுலகேத்த முகமலர்ந்து விளங்குனையே. 10

இனிமையெனும் பொருட்பொலிவா லியன்றதனை அறியாதார்
எனவெனவோ ஏதுவெடுத் தியம்புமியற் பெயரினையே. 11

கருத்திலுறு பொருளனைத்துங் கருதியவா றெடுத்தியம்ப
ஒருத்தியுளே னெனப்புகலு முயர்தனிச்செம் மொழியினையே. 12

—இவை பன்னிரண்டும் இரண்டடித் தாழிசை.

எனவாங்கு

—இது தனிச்சொல்.

இத்தகவாய முத்தமி ழன்னாய்!
நின்பெற் றியெலாம் என்சிற் றறிவால்
முற்றிலு மிசைத்திடப் பெற்றிலே னெனினும்,
என்னா லியன்றதை என்னா வலினால்
ஒருவா றிசைத்திட ஒருவா தென்னுளத்
தமைந்த முயற்சியாற் சமைந்தவிந் நாடகம்
கொண்டுநீ யணிந்திடக் கண்டுநின் னுள்ளமு
வந்திட நன்கமைந்ததன் றெனினும்
என்பெரு முயற்சிக் கேற்ப
அன்புட னினிதேற் றணிந்தில குவையே.

—இது ஆசிரியச் சுரிதகம்

# காமஞ்சரி

முதற்களம் முதற்காட்சி

இடம்: பல்வேற்கட்டி அரசவை காலம்: காலை

நடிகர்: பல்வேற்கட்டி, சாத்தந்தையார், அவையோன், வாயிலோர்.

### இறைமாட்சி

(நேரிசை யாசிரியப்பா)

அ-ன்: மங்கலம் பொருந்தக் கொங்கர்கோ மக்கள்
வான்றமி ழரசு தோன்றிய முதலா
முடியுடை மூவர் நெடுநில வரைப்பிற்
கொடைமலி செல்வக் குடிமலி கொங்கை
ஒருதனி யாண்டு வருகுநர். அவருள்,
மேன்மலைத் தோன்றித் தான்வரு வானிப்
புடைமலி பழன வடகொங் குடையோர்
மென்கலை மதிக்கீழ் நன்குவீற் றிருந்தே
அமிழ்தினு மினிய தமிழ்மொழி முழுதும்
கற்றுமேம் பட்டுச் சொற்றிறம் பாத
புலவர் நாளவை பொலிதந் தன்னார்
சொற்பொருள் தேர்ந்து நற்பொருள் வாய்ந்தே
அறம்பொரு ளின்பம் முற்றித் திறம்படப்
பகைக்களை களைந்து தகைக்கிளை பொலிந்து
காலை முரசங் கறங்கவக் காலை
மெய்ப்பாட் டியலின் உய்ப்பா டறிந்து
குழலும் யாழும் முழவும் பொருந்த
ஆடலும் பாடலுங் கூடுறத் தந்த
யாழிசைப் பாணரும் ஏழிசைப் பாட்டியும்
பொருநருங் கூத்தரும் திருநுதல் விறலியும்
வெறுக்க வெறுக்கப் பொறுக்கென வரையாது
மணியொடு பொன்னும் அணியொடு பிறவும்

மாரியும் வெள்க வாரி வழங்கி
வித்திய பயிரின் முத்தமிழ் வளர்த்து
வெங்கோல் விடுத்துச் செங்கோல் பிடித்து
வன்சொல் ஒரீஇ இன்சொன் மரீஇ
அருளெனு மன்பீன் பொருளினை வளர்த்துத்
தேர்ந்தற நாடி ஓர்ந்துகண் ணோடிக்
காட்சிக் கெளிய ராகி மாட்சியின்
தன்னுயிர் போல மன்னுயி ரோம்பும்
இவ்வரி யணையின் ஏற்றமே
எவ்வகை யுயிரின் ஏற்றம தாமே.
வாயிலீர் ஈங்கண் மேயிலீர் !
வா-ர்: ஈதோ !
அ-ன்: மன்னுறு காலை துன்னிய தாக,
வாளோ ரேத்துமிந் நாளோ லக்கத்
தோவியக் கொட்டிலின் மேவுமேற் கட்டினிற்
றுன்னுறு பன்மணி மின்னுறச் செய்ம்மின் !
மதிக்குடை யுயர்த்துமின் புதுக்குட நிரப்புமின்!
மாற்றுமின் மேலை ஞாற்றுமின் மாலை,
தனிமலர் தூவுமின் பனிநீர் தெளிமின்!
பற்பல கனிவகை பொற்புற வைமின்!
நறும்புகை யூட்டுமின் உறும்பொருள் கூட்டுமின்!
சுண்ணமும் சாந்தும் வண்ணமும் பிறவும்
மண்ணுறு பொற்கலக் கண்ணுற வைமின்!
கறங்குபொற் கவரி பிறங்கிடப் பண்ணுமின்!
மற்றுமிம் மன்னவை முற்றுறச் செய்ம்மின்!
வா-ர்: பாங்கொடு தக்காங் காங்கனம் அமைத்தனம்.
அ-ன், செவ்விது செவ்விதீங் கொவ்வுநுங் கைத்திறம்.
நன்னரீங் கமைந்த மன்னவை காண்பான்
வானின் றிழிந்து மதிதன் கிளையொடு
தானிவண் வந்து சார்ந்தது. சார்தரும்
மன்னொடு போதரும் மின்னிழை யார்தம்
முகமதி தனக்குமிப் புகுமதி தனக்கும்
நீக்கரும் பூசலுண் டாக்கினிர்.
வா-ர்: என்னது ?

எங்கே அம்மதி!
அ-ன்: இங்கே காண்மதி!
முகங்குடைக் குவமை நகுமதி யன்றே!
வா-ன்: வருகிறர் மன்னர்.
அ-ன்: ஒருபுறம் ஒதுங் குமின்!
அற்றமும் நன்கனம் அமைந்தது முற்றுற,
வெற்றி வெற்றியெங் கொற்றவ வெற்றி!
ப-க: அவையோய்! என்நகைச் சுவைபட!
அ-ன் ஒன்றும்
இலையெம் இறைவ! மலைநிகர் கோயிலின்
விண்ணுயர் அம்மலைக் கண்ணெரு பாங்கர்
மஞ்சுகண் துஞ்சும் வஞ்சியர் கொஞ்சும்
கிள்ளையும் பூவையுங் கள்ளுணுஞ் சுரும்பரும்
இன்றமிழ் பாடும் தென்றலி னுடும்
சினைபொலி மலர்தம் இனமென மீனினம்
அத்தலை யடைதரும், தத்தம ரென்று
வெண்மதி தவழுந் தண்மலர்க் காவின்
இயற்கைய தென்னச் செயற்கையி னமைந்த
இக்கொலு விருக்கையின் இயல்பினைச்
சிக்கறப் பேசினேம்.
ப-க: ஒக்குமவ் வுரையே. 2
உவமையும் பொருளும் சுவைபட அமைந்துள.
வா-ன்: கொற்றவ! ஈதோ உற்றனர் புலவர்
பெருமான்.
ப-க: வருக வருக பெரியீர்!
வணங்குதும் மலர்திரு வடிக்கண் மணங்கமழ்
தூமலர் தூஉய், மாமல ரிருக்கையின்
இருந்தருள் குரவ!
சாத்: திருந்தலர் வெருவுற
வெல்வே லுயர்த்த பல்வேற் கட்டி!
வாழ்கநின் கொற்றம்! வாழ்கநின் சுற்றம்!
நன்கடம் பூண்ட நின்குடி மக்கள்
குறையொன் றிலரே! முறையொடு வாழ்க!
பேரர்மலி பழனம் போலச்
சீர்மலி செல்வச் செருக்குற் றினிதே. 3

ப-க: என்குறை யெமக்கு முன்குற வறிந்தே
இடித்துரைத் ததர்ப்பட நடத்திடும் நுந்தம்
அன்பும் அருளும் என்பா லிருத்தலின்.
நற்றமிழ் முற்றுந் தெற்றெனக் கற்றுங்
கான்றவிந் தடங்கிய சான்ருேய் ! ஒன்னலர்
வேல்கண் டஞ்சா வீரரும் நூல்கண்
டொல்லுவ கூறுநும் சொல்லெனுந் தாற்றுக்
கோல்கண் டஞ்சுவ ரன்றே ! பால்கொண்
டூட்டிடுந் தாய்போல் வேட்டெழு மன்பால்
பயக்குநுங் கயப்புரை நயக்குவன். பெரியீர் !
நும்மோ ரனையோர் தம்மா லன்ருே
இற்றென வறியா அற்றைநாள் முதலாப்
போக்கறத் தமிழகங் காக்குமூ வரசும்
இடையரு தின்றும் நடைபெறு கின்றன?
ஆதலால் ஐய ! மூதுல கதனில்
புலவர்தம் பெருமை சொலுமள வினதோ !
சாத்: என்பால் மிக்குள அன்பால் இவ்வுரை.
ப-க: இலையிலை உண்மை மலையினு முயர்ந்தோய்
புனக்குலை வாழைபோல் தனக்கென வாழாப்
பிறர்க்குரி யாளராய்ப் பெறப்படும் பயனென்
றின்றியே மக்கட் கொன்றுவ செய்யுநும்
தொண்டினுக் கொருசான் றுண்டிதோ, நாளும்
சாத்தந்தை யாரெம் மாத்தந்தை யாரென
ஏத்துநர் மக்கள்தம் நாத்தழும் பேற;
ஈதுபோ தாதோ மாதகு பெரியீர் !
மகவாற் பொலிவர் மகளிர், மகளிர்
தகவாற் பொலிவர் தந்துணை யாடவர்.
பூவாற் பொலியும் பொய்கையப் பொய்கை
ஈவாற் பொலியும் ஏர்வளம் ஆங்குநாற்
பாவாற் பொலியும் பைந்தமிழ் பைந்தமிழ்
நாவாற் பொலியும் நாளவை என்பர்.
அத்தகு நாளவை ஒத்தமைந் துளதால்,
என்குறை பெரியீர் எமக்கு !
பொன்குறை யுண்டோ பொலம்படு நிலக்கே. 4

(நிலைமண்டில ஆசிரியப்பா)

சாத்: குறைதவிர்த் தாள்வதே முறையெனும் அறநூல்.
அத்தக அறநூற் கொத்தர சாளுநின்
போன்றோர் மேனாள் ஈன்றோர் மான
பேணிவந் தனரச் சாணிபோல் மக்களை
உலகெனும் வயலிற் பலபட வமைந்த
பாத்திபோன்ம் நாடுகள். பாத்திக ளொன்றிற்
பூத்த மலர்மணம் பாத்திபோல் மக்களும்
மொழியும் நாடும் வழிவழி யமைதலின்,
மனமொழி மெய்போன் றினமொழி நாட்டினைத்
திறப்படப் போற்றுதல் மறப்படை மன்னர்தம்
கடனென மொழிப இடனறி புலவர்.
வயமிகு சேர சோழபாண் டியரெனும்
முடியுடை மூவரும் கொடைமடம் பட்ட
வேளிரு மரச கேளிரா யமைந்து
நாற்படு பெரும்படை பாற்பட நடத்தி
வானுற ஓங்கிய வடவரை நெற்றியில்
மீனும் புலியும் வில்லும் பொறித்ததை
இலகுவேற் கட்டியிவ் வுலகம் அறியும்.
வடதிசை வெற்றியைக் குடகுண திசைகேட்
டஞ்சி யலறித் துஞ்சாக் கண்ணராய்த்
தமிழ்த்திசை நோக்கி இமைத்தில ராகி
அடங்கி யொடுங்கி முடங்கிக் கிடப்ப
அமைதியாய் வாழ்ந்தனர் தமிழக மக்கள்.
கொங்கர் கோமக! சங்க நிறீஇ
முத்தமிழ் வளர்த்ததோ டத்தமிழ்ப் புலவர்
பாடும் புகழுடை யோராய்ப் பீடுடன்
விளங்கினர் முடியுடை மூவரும்; வளங்கெழு
மாரி யன்ன வரையா வீகைப்
பாரி நள்ளி பண்ணன் ஆஅய்
காரி அதியன் ஓரி பேகன்
எழினி அத்தி பழுநிய வண்கை
எவ்வி முதலா எண்ணிலார் உள்ளூர்

செவ்விதிற் பழுத்த செழுமரம் போல
முத்தமிழ்ப் புலவர் சொத்தென விருந்து
நல்வித்தி னீட்டிய செல்வத்துப் பயனே
ஈதல் இசைபட வாழ்தல் என்னும்
கடப்பா டுணர்ந்து குடப்பாற் கறவையின்
அள்ளி வீசி அருந்தமிழ் வளர்த்து
வள்ளல் என்னும் வான்புகழ் பெற்றனர்.
பாடிய புலவர்கள் நாடிய வந்த
பரிசிஃப் பெற்றுப் பரிசெனத் தந்த
செழுந்தொடை யாயவப் பழந்தமிழ்ப் பாடலால்
அன்ஞர் பெருமையை இன்ஞே ரன்னென
அறிந்தின் புறுகுந மன்ரே? நிறம்புகு
நண்ஞர் மகளிர் கண்ணீ ராற்கழூஉம்
பல்வேற் கட்டி ! வெல்வேற் கொங்கர்
ஆயமேல் வந்தோர் கூயழ வெகுளும்
தகடூர் அதியனும், பகடூர் வல்வில்
கொல்லி ஓரியும், ஒல்லார்ப் புறங்காண்
மோகூர்ப் பழையனும், போகாப் பெருந்திறல்
பொதினி ஆவியும் முதலா மரபிஞேர்
வழிவழி யாக மொழிகுறை யின்றி
ஏஃனய பகுதியைத் தானெனக் காக்க,
அடைதர வேயிவ் வடபெருங் கொங்கிஃன
உறுபகை யின்றித் திறலொடு காத்துத்
தன்னின் முயன்று முன்னிய பொருளா
அடைதரப பெற்ற கடனறி செல்வ!
கொடைமடம் பட்ட கொங்கரை நாடி
விழவரு ஊரின் விருந்தென நாளும்
பழுமர நாடிப் படர்தரு புள்ளினம்
போன்முப் புலவரும் வான்முப் பொருளென
வரக்கண் டுவந்து கருக்கொண் டலென
வாரி வழங்கிச் சீருற வளர்த்த
தன்னே ரிலாத தமிழைஅம் முன்ஞேர்
போன்றுமே வளர்த்தல் ஆன்றநின் கடனே. 5

(நேரிசை யாசிரியப்பா)

ப-க: ஈதென் கடமை போதவிழ் புதுமலர்
இடைப்படிற் சுரும்பர் கடப்பதும் செய்மோ !
முன்னோர் பெருமையே இன்னோர் வாழ்வினை
மேம்படச் செய்யுங் கூம்பறு கருவியாம்;
அன்னோர் வீரமும் கொடையும் இன்னோர்
கடைப்பிடித் தொழுகத் திடப்படுத் திடுமே.
முன்னோர் பெருமையை முறையுட னறிந்து
பின்னோ ரெய்தப் பெருந்துணை யாய
தன்னே ரிலாவத் தாய்மொழி
பொன்னே போலப் போற்றுதற் குரித்தே. 6
சாத்: ஆமதற் கென்தடை நாமவேற் கட்டி !
உலக முதன்மக்க ளாக இலகுறும்
தமிழர் வீரந் தன்னிக ரற்றது !
தமிழர் கொடைத்திறந் தன்னே ரிலாதது !
தமிழினம் தன்னிக ரற்றதோர் தனியினம் !
உலக முதன்மொழி உயர்தனிச் செம்மொழி !
அலகில் சொற்பொருள் அமைதரு பெருமொழி !
இயல்பும் இனிமையும் எளிமையும் உடைமொழி !
பயில்பொரு ளிலக்கணம் செயல்படு தனிமொழி !
எனப்பிறர் போற்றும் அனைத்துநந் தாய்மொழி !
ப.க: உண்மை உண்மை முற்றிலும் உண்மை.
இத்தகு பெருமையுஞ் சிறப்பும் ஒத்துள
தமிழனாப் பிறந்ததற் காகத் தமிழென
இன்புறு கின்றேன் அன்பரு ளுடையீர் !
சாத்: தமிழரைக் காக்குந் தனிக்குடிப் பிறந்த
தமிழ ! விண்ணுயர் தண்பொழில் சூழ்ந்த
கொங்கின் குடவரை தங்கிய நெடுவரை
நீல மலையெனும் வாலிழை பயந்த
வானி யென்னும் ஆனுக் குலக்கொடி
இருகரை மருங்கும் பெருவள நல்கும்
தெங்குசூழ் தருவட கொங்கின. வானி
நீர்முற்றி மதில்பொருஉம் பகையலால் நேரார்
போர்முற் றறியாப் புரிசைசூழ் திருநகர்,

பகைவலங் கடந்த தகைமிகு பெருந்திறல்
கைத்தனிப் பல்வேற் சத்தி என்னும்
நின்குல முதல்வன் நன்கனம் அமைத்த
மாறுகோ ளறியா வான்பொரு மாட
ஆறென வகன்ற அழகிய தெருத்தொறும்
முத்தமிழ் முழங்கும் சத்திய மங்கலம்
எனும்பழம் பதியின் இனமணி குயின்ற
வழிவழி நின்முனோர் மொழிகுறை யின்றி
இனிதிருந் தாண்ட தனைநிகர் தருமிவ்
அரசு கட்டிலின் வரிசையி னமர்ந்து
புறந்தரு செல்வம் பொருந்தி
அறந்திறம் பாமல் ஆளுக இனிதே.

—o—

## முதற்களம் இரண்டாங்காட்சி (2)

இடம்: நறையூர் அரண்மனை காலம்: காலை

நடிகர்: நறையூர்க்கிழான், பழையன்.

### அடங்காக் குதிரையை அடக்கப் பழையன் தந்தையிடம் உடன்பாடு பெறுதல்

(நேரிசை யாசிரியப்பா)

பழை: அன்புயர் தந்தையே அடியேன் வணக்கம்.
என்பெரு வாழ்வின் இலக்கண மானோய்!
தம்பொருள் என்பதம் மக்கள், நும்பொருள்
உடைமை யல்லனோ கடனறி எந்தையே!

நறை: உடைமையும் பொருளும் குடிவழிச் செல்வமும்
நீயே எனக்கு வாயே. அறிவும்
ஆற்றலும் வீரமும் ஏற்றமும் தகவும்
ஒருங்கமைந் தேயென் பெருங்குடி விளக்கும்
என்னரும் புதல்வ! தன்னிக ரில்லா
வெற்றிவேற் பழைய !

பழை: பெற்றெனை யன்பாய்

நற்றமிழ்ச் செல்வம் முற்றுற வளர்த்துச்
சான்ருேருக்குதல் தந்தைக்குக் கடனெனும்
ஆன்ருேர் மொழிப்படி அடங்கார் வெருக்கொளப்
புணமலர் வாகைப் புரவலன் தருக்குற
முனைமுகத் தென்னை முன்னணி வீரன்
ஆக்கியே பயந்த மாக்கட னிறுத்த
எந்தாய் ! நான்செய வந்தநன் றென்னைகொல் !

நறை: மற்றுமென் செய்ய, முற்றெரி முன்னர்ப்
படுமர மென்ன நடைமெலித் துன்னெதிர்
நிற்கமாட் டாமற் புற்கென ஒன்னர்
யார்பெற் றனர்கொல் போர்பெற் றுயர்ந்த
சினக்களி றனையனை எனப்பா ராட்ட
என்பெயர் நிறுத்த மன்பெயர்க் குரிசில் !

பழை: அன்புகூர் எந்தாய் ! முன்புகூ றுவதொன்
றுள்ளதா லடைந்தேன்.

நறை: விள்ளுக அஃதென் ?

பழை: மடங்காப் பொருபடை மன்னவன் தன்பால்
அடங்காக் குதிரையொன் றுள்ளதே.

நறை: அதற்கென் ?

பழை: இலயதற் கொன்றும் வலிதொலைத் ததனை
அடக்கிட என்னுளம் துடிக்கிறது.

நறை: அதுவா !
குதிரை யன்று; குதிரையி னுருவாய்த்
தோன்றிய கொடும்புலி ! ஈன்றதாய் வயிற்றில்
படுபழி நிரப்பிய அடலரி யேறு !
வன்கொலைக் கஞ்சாப் புன்கொலைக் களிறு !
துடித்துயிர் மடியக் கடித்திடு நச்சரா !
சினமிகு முரட்டுத் தனமெலாந் திரண்டோ
ருருவெடுத் தாற்போல் வருகொடு விலங்கு !
முன்செலிற் பின்செலும் பின்செலின் முன்செலும்
மருங்குறிற் கறங்கென வருங்கொடு முயிர்மெய் !
கய்படிற் றுள்ளி ஒய்யெனக் குதித்துப்

பொய்பட வாங்கே புறம்படுங் காண்டி.
கைப்பிடித் தேறின் குப்புற மண்கொளத்
தொப்பென வீழ்த்தி அப்புறப் படுக்கும்.
புகத்தான் பெறின்ம ரகத்தாற் றறுக்கும்
கல்லாப் பாய்மா பொல்லாப் புரவி
அறுக்கும் அரிகுழி பறிக்கும் பரியிதழ்ப்
பால்கொள் கிள்ளை கால்கொள் பாடலம்
உடலுயிர் வாசி அடர்தரு தூசி
காய்தரு வடுமா மாய்தரு மிவுளி
மடைவாய்க் கொக்கு படைவாய்க் குந்தம்
மெய்யுளைப் படுக்கும் கொய்யுளை வெம்பி
வாடவே வீசும் கோடை, அதனுல்
மண்ணிடைப் பட்டார் எண்ணிலர் எண்ணிலர்
படுதுயர் விளைக்கும் விடுவிடிவ் வெண்ணம்.

பழை: செயற்கரும் பெருஞ்செயல் செய்தலே சிறப்பொடு
நயத்தகு பெருமை நண்ணிடு மாதலான்
அக்கொடும் பரியைய டக்கியே பெருஞ்சிறப்
பெய்துவன் அன்றிப் பெய்தூண் வயிற்றை
நிரப்பியே இவ்வுடல் புரப்பதற் கோயான்
வெறியார் பழன நறையூர்க் கிழாஅன்
மகனுய்ப் பிறந்து வளர்ந்தது !

நறை: நகுவேற்
பழைய ! சரிநீ விழைகுறு படியே
அக்கொடும் பரியை அடக்கி
மிக்கவ ளுக விளங்குவை யினிதே.

—:0:—

## முதற்களம் மூன்ருங்காட்சி (3)

இடம்: நகர்ப்புற வெளி காலம்: முற்பகல்
நடிகர்: பழையன், பாடலம் (குதிரை), நகரமக்கள் (ஒருவன், மற்ருெருவன்)

பழையன் குதிரையை அடக்கல்

(நேரிசை யாசிரியப்பா)

ஒரு: கிறுக்கொடு பட்ட வெறிக்களி றென்னப்
பேதுற் றயரா மோதுற் றலையும்
இக்கொடும் பரியின் மிக்கிடு கொட்டம்
அடக்கிட வல்லனோ பழையன்!

மற்: கடக்கரும்
பகைக்கடல் கடந்து மிகைக்கரை யேறிச்
செருமேம் பட்ட அருமுர ணவனுக்
கப்பெருங் கடற்றுரும் பன்றோ இப்பரி ?

ஒரு: இத்தனை நாளா எத்தனை வீரர்
மண்பட நிமிர்ந்த திண்படு மிப்பரி
இன்றுடன் அடங்கி ஒடுங்கி நன்றதோர்
குதிரை யாக மதிதரத் திகழுறும்
என்பதி லையம் இலையினி மன்பதை
காக்குமன் னவனும் போக்குவன் கவலை.

மற்: பழையன் பெருமை எழுமிளங் கதிரின்
ஒளியென உலகிடை மிளிரும் இனி.

ஒரு: அதற்
கென்னினி ஐயம்!

மற்: துன்னும் பொழிலின்
அதரிடைத் தனியா முதன்முத லொருவன்
எதிர்ப்படு காலை விதிர்ப்படும் ஒருத்தியின்
கண்ணெனப் பிறழுங் காட்சித் தாகி
வண்ணமும் வடிவும் வனப்புற வமையப்
பொள்ளென விளர்த்த வெள்ளிக் குன்றன
தோற்றமுங் கண்கவர் ஏற்றமும் வாய்ப்ப,
விரியா வாழைப் பூவென விரிந்த
தலையும், அதன்றலை இலகுமப் பூவின்
ஈரித ழென்ன வாரிய காதும்,
நுனிப்பூப் போலப் பனித்தொளிர் கண்ணும்,
அப்புற விதழின் அகத்தே தப்பற
மலரக மலரென அலர்தரு மூக்கும்,
ஈரித ழிணைந்தபோற் பேரிய வாயும்,

முதிரிதழ் குலைவிட் டுதிர்பூம் பிஞ்சுச்
சீப்பிணைப் போல யாப்புறு பல்லும்,
வாய்ந்தவப் பூமேற் சாய்ந்த கண்ணாடி
இலையென வெழிலோ டிலகுநற் சுட்டியும்,
பூவினு ளிருக்கும் பூஞ்சிப் பென்னத்
தாவலை போலத் தவழ்ந்துகண் கவர
ஒன்றிய எழிலுடை முன்றலை மயிரும்,
விரிதரக் கிழிந்த ஒருசா ரிலையெனச்
சரிந்தகொய் யுளையும், அரிந்தஅவ் வாழைத்
தண்டென நுனிதி ரண்டநீள் காலும்,
உரித்தவத் தண்டிற் பருத்தமை கிழங்கெனப்
பொருந்துசி றடியும், திருந்தவே வளைந்த அவ்
அரம்பையின் காயென உரம்பெறு குளம்பும்,
பெருத்தவத் தண்டின் உரித்தமேம் பட்டையிற்
கோலுபூ நாரென ஞாலுபூ வாலும்,
விரித்திடா வாழைக் குருத்தெனச் சிறிதும்
களங்கம தின்றி விளங்குபால் மேனியும்
உடையவிக் குதிரை நடைமுறைக் கெதிரா
அழகுற விளங்கும் குழைமலி வேப்பங்
காயென விழிகுண மேயதோ புதுமை!

ஒரு: ஏழையிப் பரிக்கு வாழையை யேவடி
வுவமை யாக்கிய தவநனி கழிசூர்
அறிவே அறிவு! வறிதே புதுமை!
பரீஇயுயிர் செருக்கும் பாம்பும் மரீஇய
எழிலுடைத் தன்றோ? அழகுடைத் தெல்லாம்
நல்லன வென்னல் ஒல்லுமோ? உலகில்
காண்போர் கண்ணைக் கவர்தரு வடிவும்
ஆண்பா லோரும் அவாவுறு மெழிலும்
தேனெனுஞ் சொல்லும் வானெனுங் கொடையும்
உடையோ ரொருசிலர் நடைமுறை யதனில்
கெட்ட குணமெலாங் கொட்டிவைத் திட்ட
பெட்டகம் போலவு டற்றுந ரல்லரோ?
உள்ளும் புறமும் ஒருவழிப் படாஅ

கள்ளுங் காயுங் கொள்ளுமோ வொன்ரு?
தோற்றமும் செய்கையும் வேற்றுமைப் பாலவே,
மற்: உண்மையே. வீரமும் திண்மையும் வேறே.
ஒரு: மன்னனும் அஃதோ மாடிமேல். இன்னமும்
ஏனோ பழையன் வரவிலே? மீனினம்
பூத்தவான் போலெதிர் பார்த்துநிற் கின்றனம்.
மற்: பார்த்திலே மதியைக் காத்துநிற் கின்றனம்.
ஒரு: ஆமாம் பகல்வரப் போமே மதிஅதோ
வந்தனன் பழையன்.
மற்: இந்தமா கூட்டம்
வருக வருக வருகெனும் ஆர்ப்பும்
ஒருகையோ டொருகை பொருகையின் ஆர்ப்பும்,
பாற்பட மூவரும் நாற்படை நடத்திப்
பகைப்புலம் சென்று வகைப்பட வென்று
வாகை சூடி ஓகையின் மீள
உளங்கெழு முவகை உள்ளுறக் கிள்ள
வளங்கெழு மதுரையும் வஞ்சியும் உறந்தையும்
கண்டுமே மனமகிழ் கொண்டுமே ஆர்த்தஅம்
முப்பெரும் ஆர்ப்பும் ஒப்புற உட்பகை
அச்சுற் றதுபோல் அச்சுற் றிப்பரி
நடுங்கியார்ப் பாட்டம் ஒடுங்குதல் காண்மோ!
ஒரு: கரிமேற் பாய அரிமாச் செலல்போல்
நடக்குநன் பழையன் மிடுக்குடன் அதன்பால்
மற்: பற்றினன் பிடரி.
ஒரு: மற்றது குதிப்பதைப்
பார்பார்.
மற்: பழையனைப் பார்பார் பாய்ந்தே
ஏறினன் அதன்மேல்.
ஒரு: ஏறினன் ஆஆ!
மற்: அடடா! குதிக்கிற தடடா! ஐயோ!
ஒரு: விழுந்தான்.
மற்: இல்லை,
ஒரு: விழுந்தான் விழுந்தான்!

மற்: இல்லை இல்லை, இதன்கை வரிசை
செல்லுமோ அவனிடம் ?
ஒரு: வல்லவன் வல்லவன் !
மற்: கறங்கெனச் சுழலு கின்றதே !
ஒரு: புறங்கொடுத்
திடுவனோ களத்திற் படுவனோ பாவம் !
மற்: காற்றெனப் பறந்தது.
ஒரு: மாற்றுகிற் பான்கொல் !
மற்: மாற்றினன் அஃதவன் ஆற்றலுட் பட்டது.
ஒரு: கொட்டம் அடங்கி விட்டது முற்றிலும்.
மற்: அடங்கிலை அடக்கினன் மடங்கலே றனையான்.
ஒரு: பாரதோ பாரிட சாரி வாரதை.
மற்: இலையிட சாரி வலசா ரியதே.
ஒரு: பார்பார் பாரதோ ஊர்கோள் போன்று
விள்ளறச் சுற்றுங் கொள்ளி வட்டமாக்
காலினுங் கடுகி ஏலவே சத்திய
மங்கல மென்னும் மங்கைதன் செங்கைக்
கோற்றெடி போலத் தோற்றிடுங் காட்சியை !
மற்: மாயமோ காண்நிலை யாயொரு பரியே
சுற்றுற வட்டமா நிற்றல்போல் தோற்றுதும்.
ஒரு: ஆட்டிட ஆடும் பூட்டுநாண் பாவைபோல்
அன்னவன் குறிப்பறிந் தென்னவே நிலத்தில்
அடித்திடு பந்துபோல் எடுத்தடி வைத்து
மல்லொடு மஞ்ஞை வல்லியங் கானை
குரங்கெனு மைந்தும் ஒருங்குற நடந்து
மாட்சியிற் செல்லுங் காட்சியைக் காணாய் !
மற்: ஓய்ந்தது வாகை வேய்ந்தனன் பழையன் !
ஒரு: பண்ணி வைத்த பாவைபோல் துண்ணென
நிறுத்தினன் நின்றது நிறுத்திய படியே.
கூட்டம்: வெற்றி வெற்றி வெற்றிவேற் பழையன் !
ஒரு: சாதலை யுவர்த்துக் காதலி வளர்த்த
கொல்லேறு தழீஇய வல்லோன் போல
இடக்கறுத் துறுவலி படக்கடைஇ வடுக்கெட

அடக்கியே மிடுக்குடன் அடங்காக் குதிரையை
நிற்பதைப் பாரதோ பொற்புடன் அதன்மேல்!
மற்: எள்ளிற் கோளரி வெள்ளிக் குன்றினின்
றிறங்குதல் போல இறங்கினன் பழையன்.
ஒரு: வெண்பனி யமன்ற தண்பெருங் குன்றம்
ஒண்புகை மூய்தர உருகி யப்பனி
முத்துமுத் தாகவி திர்ப்பது போல
வேர்வை சொட்ட ஏர்புறங் கொடுப்ப
ஆந்திறல் முற்றும் அடங்கி யொடுங்கி
மாந்தளி ரன்ன ஏந்தெழில் நெடுநாச்
சட்டுவ மாவாய்ச் சட்டியி னின்று
வெள்ளென இழுதைத் தள்ளுதல் போலச்
சாலவே வெண்ணுரை காலவே சங்கென
மாதுயர் தாங்கா தூதுலைக் குருகின்
ஒருமூச் சாகப் பெருமூச் செறிந்து
நாடி தளர்ந்தே ஆடி ஓய்ந்த
பம்பரம் போன்றிவ் வம்பலம் ஆர்ப்ப
இற்றென அப்பரி நிற்றலைக் காண்மோ!
மற்: காடுறு கரும்பை நாடுறச் செய்த
முதுபுகழ்த் தகடூர் அதியன் போலப்
பயன்படா இதனைப் பயன்படச் செய்து
மன்னவ னுவப்ப மன்னினன் பழையன்.
ஒரு: வாழ்க பழையன் வண்புகழ்!
மற்: வாழ்க வாழ்க மாநிலத் தினிதே!

—:o:—

முதற்களம் நான்காங்காட்சி (4)

இடம்: கட்டி அரண்மனை காலம்: மாலை

நடிகர்: பல்வேற்கட்டி, சாத்தந்தையார், நறையூர்க்கிழான்.

கட்டி பழையனைப் பாராட்டலும் குதிரை யிலக்கணமும்

(நேரிசை யாசிரியப்பா)

ப-க: நேற்றெடு நெஞ்சின் மாற்றரு பெருங்கவல்
கதிர்காண் பனிபோல் விதிர்விதிர்ப் பெய்தி
ஒழிந்ததோ டன்னதன் மாசும் ஒழிந்து

தண்பெயல் தலைஇய மண்படு பசும்புல்
துளிர்த்தாங் குறுபுகழ் களித்திட நம்மகம்
மேவிய தன்றே நாவலர் பெருமான்!
ஒருமையில் மூன்று பெரும்பயன் எய்தினம் !
சாத்: மூன்றல நான்காம் ஆன்றவப் பெரும்பயன்!
பு-க: எய்தவ னிருக்கச் செய்தொழிற் படல்போல்
கழைமலி நறையூர்ப் பழையனை விட்டனன்.
சாத்: எப்படிப் பழையன் உய்ப்பரு பெருந்திறம்!
குன்றிடைப் பாயும் வென்றி வேங்கைபோல்
அடங்கா வதன்பால் மடங்கா வுளத்தோ
டிவ்வெனத் தாவி அவ்வென அன்னதன்
புறத்தினில் அகத்தினுட் சிறப்புட னிருக்கையில்
இருப்பான் போலப் பொருக்கென விருந்து
கண்ணிமை முயலா எண்ண வியலா
அத்துணைப் பொழுதில் இத்துணை யென்னக்
காற்றினுங் கடுகி ஏற்றினம் வெருவக்
கணியாத் தொலையை அணையா நின்றதை
மடுத்துப் பிடித்து நொடித்துத் தடுத்து
முடுக்கி யொடுக்கி மடக்கி யிடுக்கி
வல்லனை யடக்கும் மல்லன் போல
மிடுக்கொ டதுதன் படிக்குற அடக்கி
இடவல சாரி படவுறழ் நடைமூ
வாறெடு செலவைந் தேறிடச் செலுத்திப்
பயின்று பல்லாண் டியன்றது போல
நடத்திய திறனும், கடுத்ததன் மீது
மடையமை யேணிப் படியில வாக
அடையார் நெடுமதிற் குடுமி கொண்ட
புறத்தோன் மான மறத்தொடு நின்ற
காட்சியும் இன்னுங் கண்ணைவிட் டகலா

மாட்சிய வன்றோ வடிவேற் கட்டி!
யானுமே எண்ணலன் தானதை யிங்ஙனம்
அடக்குவ னென்றே அடுக்கிசைப் பழையன்!

ப-க: யார்தாம் எண்ணினர் நேர்தமிழ்ப் பெரியீர்!
இதனை முடிக்க இவன்தக் கானென
அதனை யவன்கண் விடுகெனு மிதனை
ஓரா தயர்ந்து நேரா திருந்தனன்.
இத்தனை நாளா எத்தனை வீரர்
அருகினிற் செல்ல வெருவின ராகி
வெள்கியே பலவா ஒள்கியே நின்றவர்!
முன்னணி வீரர் பலரைப் பின்னணி
வீரர்க ளாக்கிய காரணஞ் சொலவோ!
துறையார் வானி நறையூர்க் கிழவ!
முனமே பழையன் தனைநினை யாதவன்
அளப்பரும் பெருமை வெளிப்பட லின்றிச்
செப்பினு ளிட்ட ஒப்பரு மணிபோல்,
உறைகழி யாத கறையுறு வாள்போல்,
பயன்பா டில்லா வியன்படு பொருள்போல்
ஆம்பய னின்றிப் போம்படி செய்தனன்.
எதிர்தரு பெரும்படை அதரிடைப் பட்டபோல்
குதிரையுங் கொட்டிலிற் பதரெனப் பட்டது.

நறை: கங்கர்கண் டஞ்சுங் கொங்கர் கோமான்!
நென்னல் மாலைதான் என்னிடம் பழையன்
வலிய வந்ததன் வலியடக் குவனெனக்
கேட்டனன் அதன்கொடும் பாட்டினைக் கூறியான்
செய்தக்க வல்ல செய்தலாற் கெடுமெனும்
அறவுரை யதனைத் திறமுடன் தெளிகென
மறுத்தனன் அவன்வற் புறுத்ததன் பேரில்
ஒருவா றிசைந்தனன். பெருகொளி வேலோய்!
தாங்களவ் வாறெணல் யாங்ஙனங் கூடும்!

ப-க: உண்மையே முன்னையோர் வண்மையே போலத்
தானுப் பட்டதிவ் வானுப் பெரும்பயன்!
நாத்தந்த பல்புகழ்ச் சாத்தந்தைப் பெரியீர்!

யவனர் தந்தவிக் கவன வாம்பரி
கலைமதிப் பென்ன விலைமதிப் பற்றது,
கண்ணையுங் கருத்தையும் உண்ணுந் தகையது,
வண்ணம் படமனத் தெண்ணம் படவரை
ஓவியன் கைபடாப் பாவை போன்றது,
பற்றலர் அஞ்சுங் கொற்றம் வாய்ந்தது,
களவு கொண்ட கள்வனைப் போல
உளபய னின்றிக் களர்படு நீர்போல்
மடுத்துவான் சிறையில் அடைத்துக் கிடக்கவோ
கொண்டன மென்று தண்டமிழ்ப் பெரியீர்!
எண்ணி யெண்ணிப் புண்ணு நெஞ்சம்
உழந்தது நேற்ரே டொழிந்தது பழையனுல்.
தாங்களும் இதனையே வாங்குக என்றதால்
பாரிய எழிலுடைக் காரி சிவலை
பொன்மை யென்னுந் தன்மைய வாய
மற்றவை விடுத்துத் தெற்றென விதனைப்
பல்வகை யுணவில் நல்வகை யென்ன
இனிப்பினை யுண்ணல்போல் மனப்படத் துணிந்து
வாங்கினன் இதனின் தீங்கறி யாது.
சாத்: 8-5 வெள்ளிபால் முத்து வெண்ணிலா வெண்சங்
கெள்ளலில் வெண்பனி யெனுநிற மிவற்றுள்
ஒருநிற முடைய பரிபா டலமெனப்
படுமா துளமல ரொடுசெம் பஞ்சின்
ஒருநிற முடைய பரியது சிவலை,
கருமுகில் குயில்மை கருவண் டிவற்றுள்
ஓர் நிற மடையச் சேர்பரி காரி,

எரிநெருப் பன்ன பரியது பொன்னி,
இந்நிறம் நான்கும் துன்னுதல் மறையாம்.
எந்நிற முடைய தெனினும் அந்நிறந்
தன்னிடை வெண்மை துன்னிய பரியே
நன்னல முடைத்தெனப் பன்னிடும் பரிநூல்.
அப்பழுக் கின்றிச் செப்பிய வெள்ளை
நிறமெலா மொருங்கு முறையுட னமைந்த
தாகையால் வடிவமை வாகையின் ஓகையால்

இப்பரிக் கெப்பரி ஒப்புடைத் தெனவே
கொள்கெனக் கூறினன் ஒள்குவேற் கட்டி !

ப-க: இத்தகு நிறமும் அத்தகு வடிவும்
ஒத்தமை பரியை முத்தமிழ்ப் பெரியீர்!
தொண்டிது காறும் கண்டதே யில்லை.

சாத்: அன்றியும் பரிநூல் நன்றென விதந்து
மொழிகுறு பரியின் சுழிக ளான
செவிக்கிடைப் பின்புறம் கவிக்குமீர் தலைச்சுழி,
நெடுந்தலை மயிர்க்கீழ்ப் படுங்குடு மிச்சுழி,
உற்றிடுங் கட்குமேல் நெற்றிச் சுழியிதழ்ப்
பட்டது புல்லு வெட்டி யெனப்படும்,
மேவிடுங் கழுத்திடைத் தேவ மணியது,
முன்பின் தொடையினுள் முன்பின் பறவை,
தொந்திச் சுழிகளு டுந்திச் சுழியுறும்,
பின்கணுக் காற்புறத் தின்கணுக் காற்சுழி
அமைதரல் பரியின் சபைதரு மிலக்கணம்.
ஆமாம் இதற்கவை தாமூ வைந்தும்
உள்ள படியே தெள்ளிதின் உள்ளன.
உறுப்பினி லொன்ருச் சிறப்புறு வனவா
மிவையுள பிறவும் இவைபட வமையும்.

ப-க: கண்கவ ரெழிலுடைப் பெண்களின் முடியிடைக்
கருமுகி லனைய சுரிதரு கருங்குழல்
வஃகிரா லன்ரூே மிகுவனப் புற்றுப்
பாம்பின் படம்போல் ஆம்புனை வெய்தும் ?

சாத்: அத்தகு வினவே இத்தகு சுழியும்
தனைப்பொரு பரிக்கு வனப்புற வமையும்.
இன்னுங் கேட்டி மின்னுவேற் கட்டி !
முதலிடை கடையெனுங் குதிரையின் வகையில்
முதலிய லான குதிரையின் உயரம்
நூறு விரலெனக் கூறும் பரிநூல்.
அத்துணை யாமுய ரத்தினிற் பட்ட
பரிமுகம் ஆறறு விரலள வாகும்.
தட்டம் போன்ற வட்ட முடித்தலை
ஆறது காதடி காறுமூன் றுயரம்.

கொழுந்துவெற் றிலைபோல் எழுந்துள காது
நீளம தெட்டுக் கோளுநான் ககலம்.
கட்குஞ் செவியடி கட்கிடை யொன்பது.
குலமகள் போல நிலங்கவிழ் முகத்த
அலர்கருங் குவளை மலர்நிகர் கண்கள்
இரண்டரை யகலமீ ரிரண்டு நீளமாம்.
புருவமா றிரண்டு தருநீள மகலம்.
நெற்றிமே லிடைகீ ழுற்றிடு மகலம்
ஆறு மெட்டும் ஆறிரண் டாமதன்
நீளமோர் தாளம். நீளிய கண்முதல்
கன்னத்தி னகலந் துன்னுமீ ரெட்டாம்.
மூக்குத் தண்டின் போக்கு மகலமும்
பதினாறு மூன்றுமூக் கதுநான் ககலம்.
இரண்டுமூக் குத்துளை, திரண்டத னுட்பால்
அகலமேல் கீழ்ப்புறம் புகலாறு நான்காம்.
மேலிதழ் கனத்தொடு நாலகல் நீளம்.
மேலிதழ் மூக்கின் பாலிடை நான்காம்.
தாட்கட்டை நால்முக வாய்க்கட்டை யைந்தாம்.
வாய்முத லக்கடை வாய்வரை யேழாம்,
முடித்தலை திமிலத னிடைத்தாள நான்காம்.
தலையிடை யோரத் திலகுளை யகலம்
மூன்றுநான் கொன்றுநா மூன்றுநீள் தலைமயிர்
அடர்ந்தலை போலப் படர்ந்தசைந் திலகும்.
புகலுநெஞ் சுக்குழி யகலமூன் றதுமுதல்
தோள்வரை கழுத்து நீள்விரு தாளம்.
திமில்மார் புக்கிடை யமையுமே ழாறு.
பாம்பின் படம்போல் கூம்பிய கழுத்தமை
மாரகல் நீளமீ ராறுமூ வாறு.
தலைகீழ் வாழைத் தண்டென நிலைகால்
நீளமா றேழாம். நீளமூ வாறும்
தோள்முழங் கால்வரை. தோள்முத லிடச்சுற்
றெழுபத் தைந்திடை தழுவுமா றென்பான்.
கழுத்துக் கூடிடம் வழுத்துமை யொன்பான்.
அடியிடை நுனித்தோட் படுசுற் றுறைந்

தறுநான் கறுமூன் றுறுமஃ தேமுழங்
காற்சுற்றுங் கெண்டைக் காற்சுற்று நீளமீ
ராறுபத் தொன்பதாம். ஈறுறு குளம்புத்
தண்டாறு நாலைந் தண்டுநீள் சுற்றும்.
குதித்திடும் பந்துபோல் எதிர்த்திடுங் குளம்பும்
அவ்வள வேயாம். ஒவ்வுநீள் முதுகு
நாற்பத் தெட்டாய்ப் பாற்பட வமையும்.
முதுகுப் பின்புற மதுநான்கு தாளம்.
அதன்கீழ்ப் பாகமும் அதனக லம்மே
முன்கா லளவே பின்கா லளவும்.
திரையெனக் குளம்பு வரைவால் தொங்கும்.
முன்பா கத்தினும் பின்பா கத்தள
வதுகுறைந் திருத்தல் விதிமுறை யாகும்.
எனவுயர் தரப்பரி தனதள வாய்ந்து
கண்ணு ளாளர் கண்ணிய கணித்த
அத்தக வளவை ஒத்துள திப்பரி
ஆகையால் கட்டி ! ஓகையோ டிதையே
வாங்குக வென்று பாங்குடன் நவின்றேன்.
பரிக்குணங் காட்டு நரிக்குணங் கடுப்ப
இப்படி யிருக்குமென் றெப்படித் தெரியும்?

ப-க: நானும் பொற்சிலை மானுமிப் பரியின்
வண்ணமும் வடிவும் பண்ணுற வமைந்த
கண்கவர் வனப்பில் எண்கவர் பட்டு
விடமன மின்றி உடைமைய தாக்கினன்.
கட்டி போர்த்தப் பட்டவெங் கடுப்போல்
இப்படி யிருக்குமென் றப்பவே தெரியின்
எதற்கிதைச் சிறையிடு வதற்கெனக் கொள்குகன்?
பகற்பொரு பழையன் புகழ்க்கிலக் காக
அங்ஙனம் செய்தது போலும் !

சாத்: சங்கினம்
நிரல்பட முத்தீன் கரைபடு பழனஞ்
சேர்துறை வானி நேர்வட கொங்கின்
காப்புடைக் கட்டி ! யாப்புடை யொருபொருள்
ஆடுபயன் கொள்நரிற் பாடுபெறு மென்பது

செயற்படு மிவ்வுல கியற்பா டன்ரே?
ப-க: ஆமதி லேயமில் நாமதை நெருநல்
மண்கூடு பயனுக் கண்கூ டாகக்
கண்டன மல்லமோ தண்டமிழ்ப் பெரியீர்!
கரடு முருடா மரமெனும் பெயரொடு
காட்டிடைப் பயன்பட மாட்டா நின்ற
அம்மர மதனைக் கைம்மலி திறலோன்
வெட்டி யறுத்து முட்டற விழைத்துப்
பல்வகைப் பண்டம் நல்வகை யாக்கிப்
பயன்படச் செய்தல் போல, நயம்பட
அப்பா டலத்தின் பொய்ப்பா டகற்றி
நற்பயன் பாடத னிற்படச் செய்த
பணைமுரல் நறையூர்ப் பழையன்
இணையறு புகழோ டிலங்குக வஃதே. 1
சாத்: மாற்றலர் வெருக்கொளும் ஆற்றலிற் பட்ட
வெல்போர்த் தொல்புகழ்ப் பல்வேற் கட்டி!
இத்தக விலக்க ணத்திடைப் பட்டே
அரிதமை தருமிப் பரிகட்கி யாண்டு
நாலெட் டென்ன நூலிட் டாய்ந்த
பரிநூல் வல்லார் தெரிதர வுரைப்பர்.
அத்துணை யாண்டின் ஒத்துள பருவம்
பத்தாம் ஒன்றுக் கொத்தமூ வாண்டொடு
திங்களி ரண்டுந் தங்குமீ ராறு
நாளு மென்ப. கேளினும் பரியின்
பற்களி னியல்பி னிற்கொளு மாற்றம்
அவையினும் அகவை இவையெனக் குறிப்பர்.
பல்லி னியற்கை புல்லிய நன்னிறம்
மாறத் தொடங்கின் கூறுமைந் தாண்டென,
மற்றதன் மாற்ற முற்றிடல் மூன்ருக்
கூட்டி யுரைப்பர். காட்டிடு மந்நிறம்
புகைபொன் சிவந்த வகைபடு பலகறை
வெற்றிலை பாக்கோ டொற்றுற மென்றிடுங்
கத்தக் காம்பீ முத்துச் சிப்பி

ஆயவிந் நிறத்தொடு தூயவப் பற்களில்
துளைவிழல் அசைதல் களைவுறத் தொடங்கல்
எனுமிவை தம்மால் முனமுற அகவை
அவ்வப் போதறிந் தொவ்வப் பரியினை
அடைவுட ளேம்பல் உடையோர் கடனும்.
ஈரிரண் டாண்டினு நேருரு விப்பரி
பெருந்தகைப் பழையன் பெருமைக்
கருந்துணை யாக அமைந்தது மன்னே! 2

—:0:—

## இரண்டாங்களம் முதற்காட்சி (5)

இடம், தலைக்காட்டு அரண்மனை காலம்: காலை

நடிகர்: வீரகங்கன், தெற்காணம்பி.

### வீரகங்கன் கொங்கின்மேல் படையெடுக்கத் திட்டமிடல்.

(நேரிசை யாசிரியப்பா)

தெற்: மலர்தலை யுலகின் மல்கிரு ளகற்றி
இலகுற நாளும் இன்னுயி ரோம்பும்
அலர்கதிர் ஞாயி றுமெனத் தோன்றிக்
காவிரி பூமலி காவிரி யான்மலி
கொழுநுனி யகத்துப் பழுனிய பல்வளந்
தங்கிநன் கூட்டுங் கங்கநன் னாட்டுச்
செம்பியன் றுயர்வி சும்புறு ஞாயில்
ஆழ்தரு மகழொடு சூழ்தர நிவந்த
மலைநிகர் மதிதவழ் மாடக் கோயில்
அலைநிகர் பல்பொருள் நிலையென விளங்கும்
மலைக்கா வரண்சேர் தலைக்கா டதனில்,
மொழிகுறை யின்றி வழிவழி யாவரு
கங்கர் குலமுத லாகவி லங்குமிவ்
அரசு கட்டிலின் வரிசையி னமர்ந்து
வெங்கலி கடிந்து தங்குறை யொன்றும்

இல்லாக் குடிகளை வல்லே யோம்பும்
மங்குலே றனைய கங்கர் கோமக !
ஏனொரு வகையா? யானறி தருங்கொல் !

வீர: பகைக்கடல் கடந்து தகைப்படு வென்றிக்
கற்காண் திணிதோள் தெற்கா ணம்பி !
ஆற்றலும் வீரமும் ஏற்றமும் தோற்றமும்
சூழ்ச்சியும் போர்முறை மாட்சியும் தேர்ச்சியும்
காற்றினுங் கடுகிய ஏற்றகைத் திறனும்
ஒன்னார் வெள்கத் தன்னே ரின்றி
நாற்படை நடத்திடு பாற்படு திறனும்
ஒருங்கமைந் துளநீ பெரும்படைத் தலைவனு
இருக்கையில் எனக்கென்?

தெற்: உருக்கிளர் வேலோய் !
அடுத்தது காட்டும் ஆடிபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகமென எடுத்துச்
சாற்றிய முன்னோர் கூற்றறி யீரோ?
ஒளிக்கவோ தாய்க்குக் களிக்குமச் சூலே !
புயல்படு மதிபோல் செயல்படு நும்முகம்
உளப்படு குறையினை விளக்குறு மன்றே.
என்பால் மறைத்தற் கென்னுள வன்பால்
இம்மெனு முன்நீர் கம்மெனத் தருமென்
ஆற்றலை யறிந்தும் போற்றுதல் ஏனோ?
சாற்றுமுன் அக்குறை காற்றினுங் கடிதாப்
பறந்திடு மன்றோ நிறந்தொடு வேலோய் !

வீர: உன்னை மறைத்தீங் கென்னையென் மனக்குறை ?
கதிர்வரின் இருளும் எதிர்தர நிற்குமோ?
மற்காண் தடந்தோள் நிற்காண் என்குறை
நிற்குமோ கண்ணெதிர் சொற்குறை பிறிதில்.
நாக்கொளித் தொருசுவை வாய்க்கொள லுண்டோ?
தென்றிசை யன்றிமற் றொன்றுமுத் திசையுநம்
ஆணைக் கடங்கியா டேணையி னடங்கின.
இங்ஙன மாகக் கொங்கர்கள் மட்டும்
வகைபட நம்பாற் பகைபா ராட்டித்
தும்பவிழ் காளைபோல் வம்பினி லேனுனிக்

கொம்பினி லேறி நம்பியே தந்திறன்
குதிக்கின் ரூர்நமை மதிக்கின் ரூரிலர்.

தெற்: மனக்குறை தவிர்க மன்னவ, நுனிக்கொம்
பேறினர் அஃதிறந் தேறிட முயலின்
தொப்பெனக் கீழே குப்புற வீழ்ந்துமண்
கவ்வுவ ரென்பதில் ஐயமில். தெவ்வரின்
ஆர வாரங் கண்டதற் கஞ்சுதல்
வீரருக் கழகல. நேரலர் புறங்கண்
டண்ணல்! நின்னகந் துண்ணென மகிழ
இன்றே படைகொடு சென்றே முனையெதிர்
நின்றே பகைவரை வென்றே நன்கனம்
சூட்டுவேன் வாகை கூட்டுவேன் ஓகை.
விடைகொடுத் தருள்க தொடுகழ லோயே !

வீர: படைவலாய்! பகைவர் நடைமுறைக் காயான்
வருந்திலன் சிறிதும். வருந்தியென் தந்தை
பன்முறை கொங்கர் முன்வெரிந் காட்டி
ஓடிவந் தாரெனும் ஊரலர் என்னுளங்
கூடியே வருத்துங் கொடுமையை நினைத்தோறும்
எரியிடைப் பட்ட இழுதென என்னுளம்
உருகுகின் றதுகாண் கரைபொரு காவிரி
மாற்றினும் என்னுளம் மாற்ரு ததனை.
அப்பழி துடைத்தா லன்றி என்மனம்
ஒப்புதல் கொள்ள . அப்புறம் என்பெயர்
வீர கங்கன் என்று விளம்புதல்
சாரமற் றதுவாம். வீரமற் றதனை
அரியென லாமோ?

தெற்: எரிதவழ் வேலோய் !
ஆணையைப் பெரிதும் அவாவிநிற் கின்றனன்
கோணிய வுள்ளக் கொடுமையை விடுக.
வெற்றி வெற்றியெங் கொற்றவா நாளைப்
பற்றலர் ஓடும் பரிசினைக் காண்மோ.

வீர: நாளையே படைபுறப் படட்டும் பூளைபோல்
கங்கர் வெஞ்சினக் காற்றினிற் கொங்கர்

பறந்தோடு பரிசினைப் பார்த்துப்
பறந்தோடு மாங்கே படுமனக் குறையே.

—:ĩ:—

## இரண்டாங்களம் இரண்டாம் காட்சி (6)

**இடம்:** வடகொங்கின் வடபகுதி **காலம்:** நண்பகல்

**நடிகர்:** உழவர் இருவர்—(ஒருவன், மற்றவன்)

### போர்க்கொடுமை பற்றி இருவர் உரையாடல்

(நேரிசை யாசிரியப்பா)

ஒரு: ஏனொரு வகையா வானையும் வயலையும்
வயல்படு நெல்லையும் அயல்படு புல்லையும்
மடையையும் மடைநீர்க் கடையையும் ஏரி
குளத்தையும் நெற்பொலி களத்தையும் வருவாய்க்
காலையும் உழுபடைச் சாலையும் ஆழ்கி
ணற்றையும் முதிர்கதிர்க் கற்றையை யுங்கரும்
பாலையை யுமடர் சோலையை யும்மூ
வினத்தையும் வளர்தினைப் புனத்தையும் இப்படி
மாறி மாறி ஆறுசெல் மாக்களின்
நோக்கு கின்றனை ஏக்கமுற் றவன்போல்?
மற்: கேட்டனை யோகொல் வாட்டமும் பதனைப்
பார்த்துப் பார்த்துளம் வேர்த்து வெள்கி
வேலையும் வாளையும் வீசி யெறிந்து
காலொடு கால்படும் ஓலதை நம்மோர்
அடிபடு மொலியென நொடிபட வெருவி
பூனைகண் டோடெலித் தானை யென்ன
வலிதொலைந் துள்ள நலிவொடு முன்புறங்
காட்டியே ஓடிய ஓட்ட மதனை
எண்ணி யெண்ணிப் புண்ணுறு நெஞ்சராய்
அடங்கி யொடுங்கி முடங்கிக் கிடந்த

பகைப்புலக் கங்கர் மிகைப்புட னேபடை
எடுத்துள்ளனராம்.

ஒரு: அடுத்துவந் தனரோ !

மற்: இல்லை யில்லை வல்லே வருதற்
காவன செய்கின் றனராம்.

ஒரு: மேவலர்
கெட்டனர் முன்னர் பட்டதை மறந்து
விட்டனர் படையெடுத் திட்டனர் போலும் !

மற்: மறந்திலர் பகையிற் சிறந்தனர் அதனால்
எடுத்தனர் படைகொல் கெடுத்தனர் அமைதி.
மண்ணசை யொருசிலர் நண்ணிடிற் படையொடு
சென்றெதிர் பொருதிடும் ஒன்றத னாலும்,
வீரமும் ஆண்மையும் காரண மாகவும்
போருண் டாதலோ பாரினி லியற்கை.
போரெனில் எதிரெதிர் பொருவதோ டமையின்
பாரினிற் போரினை யாருமே வெறாஅர்.
ஆண்மையும் வீரமும் வாண்மையும் பொருளா
மறம்படு மறவர் திறம்பட ஒருவர்க்
கொருவர் எதிரெதிர் பொருதிடின் வலியோர்
வெல்லுவர் மெலியோர் புல்லுவர் தோல்வி.
இயற்கையே யிம்முறை. மயக்கறி வுடையோர்
கெட்ட வழியினிற் பட்டுமே நாட்டினைப்
பாழ்படச் செய்குவர் வாழ்முறை தவறி.
பன்முறை முன்னர் வன்முறைச் செயலால்
யானையுங் குதிரையுந் தானையுந் தேரும்
ஒன்றோ டொன்று கன்றியே பொருதி
ஆறெலாஞ் செந்நீர் ஆறா ஓடவும்
தூறெலாம் படுபிணம் நாறவும் செய்ததே
அன்றியுந் தாம்பெறு வென்றியே பொருளா
அறப்போ ரொழிந்து மறப்போர் புரிந்ததால்
ஏரியுங் குளமும் நீரில வாகவும்
ஆழ்ந்தகல் கிணறெலாந் தூர்ந்து போகவும்
விளைநில மெல்லாம் உளைநில மாகவும்
பயன்படு மரமெலாம் குயம்பட் டழியவும்

ஆடு மாடெலாங் கேடுற் றொழியவும்
வீடெலாம் பாழ்ஞ்சுடு காடுபோ லாகவும்
போர்க்கள மறியா ஊர்க்குறு மக்களும்
மெல்லிய லாரெனு நல்லியல் மகளிரும்
படுகொலைப் பட்ட கொடுமையும் பிறவும்
அன்றுகண் டழுது நின்றனன் ஆதலின்
இன்றுமாங் காகுமே என்றே அவற்றினை
நோக்கினேன்.

ஒரு: அந்தோ! மாக்கொடும் போரினை
எண்ணி னு நெஞ்சம் புண்ணு கின்றதே.
ஆகையால் இனியம் மாகடுங் கொடும்போர்
உண்டா காமற் பண்டோ யாமல்
அடிக்கடி வந்தே தொடக்கறு நோய்போல்
வெந்துய ரெய்த நத்தமிழ் மக்கள்
பேரழி வாக்கிய மோரியர் படையைச்
செருப்பாழி யெறிந்த இளஞ்சேட் சென்னிபோல்
உருப்போ டழித்திடின் ஒழியுமக் கொடும்போர்.
உழுங்கழ னியில்வேர்க் கிழங்குட னறுகைக்
களையா விடினது விளைவினைக் கெடுக்கும்.
அன்றுமுன் போல வென்று துரத்தினல்
போயச்ச மொழிய வேநச்சி வந்து
தீயெச்சம் போலத் தெறும்பகை யெச்சம்
வெட்டுவோர் கையிற் பட்டுமே வருத்துமுள்
மரத்தினை யிளம்பிலே தரித்திடு வோரொடு
பிடுங்கி யெறிவது போல நடுங்கஞர்
செய்யுமிப் பகையறச் செய்யா விடின்நம்
அச்சரு.

மற்: ஆமாம் நச்சரா வதனைக்
குற்றுயி ரோடு விட்டிடின் மற்றது
காலம்பார்த் திருந்து கடித்திடு மன்றோ ?

ஒரு: சாலவும் பொருந்தும் தமிழ்ப்பகை யதனை
எச்சமி லாதொழித் திடினே
அச்ச மற்றவாழ் வமையுமண் மீதே.

—:0:—

**இரண்டாங்களம் மூன்ருங்காட்சி (7)**

**இடம்:** கட்டி அரண்மனை **காலம்:** காலை

**நடிகர்:** பல்வேற்கட்டி, நறையூர்க்கிழான், ஒற்றன், வாயிலோன்.

## கங்கர் படையெடுப்பைக் கட்டியிடம் ஒற்றன் கூறல்

(நேரிசை யாசிரியப்பா)

வா-ன்-: கொற்றவ! வாயிலில் ஒற்றன்
ப-க: வரச்சொல்.
ஒற்: வணங்கினன் பெரும!
ப-க: அணங்குவ தொன்றும்
இன்றே!
ஒற்: அப்படி யொன்றிலை ஆனுல்,
ப-க: ஆனுல் என்ன?
ஒற்: தானேர் தலைவ!
உழுதொழில் மக்கள் கழனியை நோக்கியும்
எழுதெழில் மாடத் தேந்திழை நல்லார்
மைதவழ் மாட நோக்கியும் கைதவழ்
குழவியை நோக்கியும் அழுதன ரேங்கப்
பெரும்போ ரொன்று வரும்போல் தோன்று
கின்றது பெரும! நின்றவஃ தென்னெனில்,
முன்முறை பின்முறை பன்முறை புறங்கொடுத்
தோடியே வெள்கியுள் வாடியே நமக்கு
வெற்றியைத் தந்த வீர கங்கன்
முற்றிலாச் சிறுமியர் எற்றிய தயர்ந்து
சிற்றில் சிதைக்குறும் சிறுவர்கள் போல,
ஆற்ற விழந்துமுன் தோற்றோ டியதை
மறந்தனன் போலும் இறந்த அவ் விழிவால்
கெட்டனன் தலைக்காடு விட்டவன் பெரும்படை
தெற்கு நோக்கிவரு கின்றது.
ப-க: தெற்கு
நோக்கிய படியே நோக்கிடும் வடக்கு
கொங்கர் வலியறி யாதவக் கங்கன்

கெட்டனன் மறந்து விட்டனன் முன்னர்
மாட்டா தோடிய ஓட்ட மதனை.
புதியதோ ஓடுதல் மதியிலா அவற்கே!
இன்னு மொருமுறை முன்னையே போற்ரேற்
ரேடட்டும் நன்ரு ஓடட்டும் முன்விரைந்
தோட்டமா ஓடியவ் வோட்டத்தி லாயினும்
வெற்றி வீரனு விளங்கிமேம் படட்டும்!
மற்றினி நாம்செய லுற்றதைச் செய்வோம்.

உறை: இத்தனை நாளா எய்த்திருந் தேதன்
படையினைப் பெருக்கி அடைகுள மதகினைத்
திறந்துவிட் டாற்போல் மறந்துமுன் பட்டதை
எடுத்தனன் படைநம் படைத்தலை மறவரின்
போர்விடாய்க் கந்நீர் ஓர்புடை வருமோ!
வேந்தழல் ஊதுலைக் காய்ந்தவோ ரிரும்பிற்
படுநீர்த் துளிபோற் படுமப் படைநீர்.

ப-க: சரிசரி வரட்டும் எரியெரி முன்னர்
வருசரு கென்னக் கருகியே கெடட்டும்.
தாதுகு துறையார் மேதகு நறையூர்த்
தலைவ! இனியென்? மலைபடு கடாத்த
கரியும் பரியும் குரைகழல் மறவரும்
தேரும் பொருகளி கூரும் படிசெய்.
பாற்பட வியற்றிய நாற்படை வீரரும்
உண்டுண் டுறங்கிடக் கண்டதே யன்றியெம்
தோட்குண விலையெனு நாட்குறை யகல
வஞ்சி வேய்ந்து மறந்தலைப் பட்டு
வெஞ்சின மிக்கு மிடலுடன் சென்று
துன்பை மலைந்து வம்பலர்ப் படுத்து
வாகை சூடி ஓகையின் மீள
மேயன செய்கு வாயே.

ஈதோ

உறை: முரசறை வித்தே எரிசின மறவர்
புணைதரு பணைத்தோள் புடைப்ப
அணிவகுத் திடுவல் அயில்வே லரசே.

ப-க: ஈதொரு செய்தி யாதெனில் நந்தம்
அடங்காக் குதிரையை அடக்கிய மடங்காத்
திறல்மிகு பழையன் மறமிகு தமிழ்ப்படைத்
தலைவனுச் செல்லுதல் நலமென வேயான்
விரும்பு கின்றனன் பெரும்புக ழுறுமே.
நறை: மன்னவன் எப்படி மன்னுயி ரப்படி
எனுமுரை யதுமென் றணைவிலக் கிடுமோ?
அன்றியென் முதுமையும் அதனை
வென்றிவேல் மன்ன விரும்புதல் இயல்பே. 2

—:o:—

## இரண்டாங்களம் நான்காங்காட்சி (8)

இடம்: சத்தியமங்கல நகரும், நகர்ப்புற வெளியும். காலம்: காலை

நடிகர்: பல்வேற்கட்டி, பழையன், வீரர்கள், முரசறைவோன், மகளிர், சிறுவர் முதலியோர்.

திரை-1. நகர்த்தெரு (முரசறைதல்)

(நேரிசை யாசிரியப்பா)

மு-ன்: ஈனிய தாயின் வானி வளற்றும்
மங்குல்மேய் வயல்வட கொங்கு புறந்தரும்
கொற்றவன் வாழ்க! மற்றவன் ஆணை:
செந்தமிழ் மறவர் தந்திற மறியா
மைந்து பொருளாத் தந்திறஞ் செருக்கி
எடுத்தனர் கங்கர். படைத்திற முடையீர்!
வம்பவிழ் நறும்பூந் தும்பை சூடி
விழைதரு செருவேட் டெழுமின்! ஒன்னர்
எடுத்தவா ரேட்டம் எடுத்திடத்
தொடுத்துநீள் வாகை முடித்திடற் பொருட்டே! 1

திரை-2. நகர்ப்புற வெளி (வீரர்கள்)

(போர்க்கோலம் பூணுதல்)

வீ-ன்-1: இத்தனை நாளா முத்தமி ழகத்தில்
போரில வாகலின் ஏருழா துழவர்

கழித்திடல் போலக் கழித்தனம்
தொழூத்தையின் இவ்வுடல் சுமந்துபல் பகலே. 2

வீ-ன்-2: பயவாக் களர்போல் நயவாப் பொழுதைக்
குறையா துந்தி முறையா வெந்தசோ
றுண்டுண் டுறங்கிக் கொண்டே கழித்தனம்
மழைமருள் வண்கை மன்னவன்
எழுவுறழ் திணிதோட் கீந்திலன் உணவே. 3

(நிலைமண்டில ஆசிரியப்பா)

வீ-ன்-3: அமைதர வின்றிச் சுமையதா வொன்றித்
திமிரிய தோள்களின் தினவு தீரப்
பெற்றிலம் எதிர்பொரு பற்றல ரின்மையால்.
பெற்றனம் இன்றே நற்றினம்-நற்றினம்.
கற்றபோர்த் திறனெலாங் காட்டியே வெற்றி
பெற்றுமே யின்பம் உற்றிடு வோமே. 4

(நேரிசை யாசிரியப்பா)

வீ-ன்-4: மறமிகு தமிழர் திறமறி யாது
படைகொடு வந்தஅம் மடமிகு கங்கரை
ஆலிலை பிசைந்தவர் அன்னையர் கதறச்
சேலையைப் போர்த்தவர் தேவியர் பதற
இக்கதிர் வேலால் அக்களஞ் சேப்பக்
குன்றெனக் கொன்று குவிப்பேன்
வென்றிவேல் மன்னன் மிகக்களித் திடவே. 5

வீ-ன்-5: பெட்டியுட் பயன்படா திட்டுவைத் திட்ட
நல்பொரு ளென்னச் செல்பல பகலா
உறையினுட் கிடந்து கறைபடிந் துள்ள
வள்வாய் நெடுவாள்! விள்வாய் நின்குறை
மண்ணசை வந்த எண்ணலர் படுபிணம்
குன்றெனக் களத்தே குவியப் பொன்றுடல்
பட்டெழு செந்நீர் பாய
வெட்டி வீழ்த்து விளக்குறு வாயே. 6

(நிலைமண்டில ஆசிரியப்பா)

வீ-ன்-6: குணக்கெழு ஞாயிறு குடக்குறு முன்னர்ப்
பிணக்குவை கண்டார் துணுக்குறு வண்ணம்

படைக்கடல் நீந்திக் கடக்குறே னென்னில்
இக்கதிர் வேலையும் வாளையும் என்கை
எக்குறை நேரினும் எடுத்திடா மன்னே. 7

(நேரிசை யாசிரியப்பா)

வீ-ன்-7: இருந்துடன் பெருஞ்சோ றுண்ட பெருந்தகை
மன்னவன் கண்ணீர் மல்க
ஒன்னலர்ச் செகுத்தே உடன்மாய் குவனே. 8

---

திரை-3: நகருள்

நடிகர்: கணவன், மனைவி, ஒருதாய்,
மற்றொருதாய், இன்னொருதாய், ஒரு சிறுவன்,
மற்றொருசிறுவன், இன்னொருசிறுவன்.

(நிலைமண்டில ஆசிரியப்பா)

கணவன்: கொங்கரை மதியாக் கங்கரைப் படுத்து
வாரே தாங்கி ஓகையி னீங்கு
வாரே னென்னில் நேரார் புகல
வெளிற்றுப் பனைக்கை வெட்டுண்டு கிடக்கும்
களிற்றுக் கீழெனைக் காண்குவை மன்னே. 9

(நேரிசை யாசிரியப்பா)

மனைவி: பொன்னீர் படமெய் நன்னீ ராடேன்
புகையும் ஊட்டேன் பூவுஞ் சூட்டேன்
வகைதெரி ஐம்பால் வாரி முடியேன்
தொய்யில் வரையேன் மையு மெழுதேன்
சுண்ணமும் கலவையும் வண்ண முந் தொடேஎன்
ஒன்னலர் வெந்நிட் டோட மின்னிலை
வெள்வேல் பூசி வள்வாள் வீசித்
துளிர்த்துவரு வாகை சூடிக்
களித்துவரு நின்முகங் காணுறுங் காறே. 10

ஒருதாய்: என்னருஞ் செல்வ! இந்நறு முல்லைப்
பந்தர்க் கால்கள் அந்தநாள் ஞாட்பினுள்

உந்தையின் தோள்வலிக் காற்ரு தந்தக்
கன்னிலந் தேயக் கடிதின்
ஒன்னலர் எறிந்துவிட் டோடிய வேலே. 11

ம-தாய்: வாளொடு சென்று தோளொடு நின்று
பகைப்புல மறவர் தொகைப்பட நூறி
வான்றரு மணியுனை ஈன்ற ஞான்றினும்
நான்பெரி துவக்கத் தான்வரு வாயே;
பெற்ற வயிறு பற்றி யெரியக்
கோழையென் ருருத்தி கூறின்
வாழ கின்றிலேன் மறக்குடி மகனே. 12

இ-தாய்: இக்கா விதிப்பெய ராழி அக்கால்
முன்னுட் போரில் ஒன்னலர்க் கடந்து
மன்னுற் றரப்பட் டதுகாண்; பின்னுள்
மைந்துறு களிற்ருெடு மாய்ந்த
உந்தையின் கற்காண் மைந்தவீங் கிதுவே. 13

ஒ-சி: நானுந் தான்வரு வேனென் தந்தாய்!
ஏற்றுறழ் நுங்கள் மாற்றருந் துப்பின்
முன்னிற்க மாட்டாது வெந்நுற்று வெருவி
புலிகண் டோடும் புல்வாய்க் குழாம்போல்
வலிகொண் டோடும் வம்பலர் முதுகினை
உண்ணறு வண்மை யுண்ட
கண்ணுறக் கண்டு களித்திடத் தானே. 14

ம-சி: எங்கே அம்மா! எனக்கொரு வாள்தா
கங்கரை வெட்டித் தள்ளிக் கொங்கரின்
ஆற்றலைக் கண்டம் மாற்றலர் வெள்க
முந்துறக் காணவுன் முகத்தை
எந்தையீங் குறுமுன் வந்திடு வேனே. 15

இ-சி: கிடுகிடு கிடுவென உடுவுதிர் படமுக
டுடைபடு முடனென வெடிபடு மிடியென
அடிமுர சடிசெவி படுகுது வானை

எடுபுதி தாடை உடுதலை வாரி
விடுகழல் அடியில் தொடுசெலெ னவிடை
கொடுமென தன்னுய்! அடுகள நோக்கிக்
கடுகியே சென்று முடுகிமுன் நின்று
அடையலர் படையடி யொடுபட
முடிதரு வாகை யொடுவரு வேனே. 16

---

திரை—4. நகர்ப்புற வெளி
நடிகர்: கண்டோர்

குடைநாட்கோள்

(நேரிசை யாசிரியப்பா)

க--ர்1: குடையும் வாளும் கொடியும் உயர்த்துச்
செருப்புகல் மறவர் விருப்புடன் கூடித்
துடியொடு முரசம் இடியென ஆர்ப்பக்
கடலலை யெனச் செலுங் காட்சி
அடையலர் காணின் நடுநடுங் குவரே. 17

துடிநிலை

க-ர்-2: நாட்டியொள் வாளைச் சூட்டியே மாலை
தொடுகழல் மறவர் அடுமுரண் மிகுப்பத்
துடியடித் ததனைச் சுற்றிவந் தாடும்
ஆட்டமே ஆட்டம்! கூட்டமென்! அடடா!
வாள்வாய் வீழ்ந்தனன் ஒருவன்; மாய்ந்தனன்.
கேள்வாய் மறவாக் கிளரிளங் காளை!
என்னே மறக்குணம்! என்னே நாட்டன்
பிருந்தவா றென்னே! இதுவும்
அருந்தமிழ் மறக்குறிப் பாகுமன் கொல்லே! 18

---

திரை-5. நகர்ப்புற வெளி

நடிகர்: பல்வேற்கட்டி, சாத்தந்தையார், பழையன், வீரர்கள்.

படை அணிவகுத்து நிற்க, மன்னன் வீரவுரை.

(நேரிசை யாசிரியப்பா)

ப-க பகைக்கடல் கடக்க மிகைப்புடன் ஈங்கு
திரண்டுமே நிற்கும் அருந்தமிழ் மறவீர்!

யானை குதிரை தானை தேரெனப்
பாற்பட வியன்ற நாற்படை வீரரே !
ஆரெயில் காக்கும் அடைவினிற் காக்கும்
வீரரே நாட்டின் மெய்காப் பாளர்.
பகைவர்தம் நினைவிற் புகாதொரு நாட்டிற்
போரிலா திருக்க வீரரே காரணம்.
வீரரைப் பெருஅப் பாரிலெந் நாடும்
நாடெனப் படாஅ. நாடெனில் வீர
வரலா றுடைய மரபுடைத் தாய்வழி
வழிவரு நாடென மொழிவளர் புலவர்
பாட்டினிற் பட்டுப் பயிலுநா டேயெந்
நாட்டின்முன் நாட்டும் நன்னு டாகும்.

வீ-ள்: அத்தகை யதுநம் முத்தமி ழகமே.

ப-க: ஆமாம் வீரமே யாமதற் கேது.
வீரம் என்பது விலையிலாச் செல்வம் !
வீர மில்லா வெற்றுடம் பதனைப்
பொறுக்குமோர் நாட்டின் பொறையே பொறையாம்.
தமிழர் வீரம் இமிழ்கட லுலகில்
தன்னிக ரற்றது, தன்னையே யொத்தது.
கதிரவ ளொளியினும் முதிரிய வொளியது.
காற்றினு மிக்க ஆற்ற லுடையது.
கனவினுந் தெவ்வர் நினையா வெருவுறும்
பாரித்த தமிழகம் வீரத்தின் விளைநிலம்.
மறக்குடி மக்களைச் சிறப்புறப் பெற்றதா
லன்றோ தமிழ்த்தாய் என்றோ என்னும்
அத்தகு பழமை யைத்தக வுடையளாய்
இருந்தும் இன்னும் பெருந்தனிச் சிறப்புடன்
வழிவழி யாவொரு மொழிவைத் தாளும்
முடியுடை மூவர் குடைநிழல் பொலிந்து
பகையறி யாது தகையுற வாழ்கிருள்.
விறுடன் வந்திது காறுந் தமிழரை
வென்றவ ருண்டோ!

வீ-ள்: என்றுமே இல்லை.

ப-க: ஆற்றலும் வீரமும் ஏற்றமாப் பெற்ற

மாற்றருந் துப்பின் மறக்குடி மக்காள்!
ஆற்றலும் வீரமும் போற்றெழுத் தசையா,
தேரும் வீரனும் சீருந் தளையா,
யானையும் குதிரையும் மோனையும் எதுகையா,
படைவலான் அடியாப் படையணி யணியா,
அப்படைப் பெருமையே ஒப்பரும் பொருளாப்
படையே பாவா நடைபெற வமையும்.
மானம் மறம்புகல் வழிச்செல வுடையீர்!
பாநான்கு பட்டபோற் படைநான்கு பட்டது.
அந்நாற் பாபோல் இந்நாற் படையும்
அமைதரு சிறப்பினைக் கமைதர நோக்கின்
படையே பாவாப் பாவே படையா
நந்தமிழ் போலவ மைந்துள வன்றோ !

வீ-ள்: உவமையும் பொருளும் ஒக்கும் ஒக்கும்.

ப-க: உவமையே பொருளா அமைவ துருவகம்
ஆகுமால் தமிழைச் சேகற உயிர்போல்
காத்தல் நுமைத்தற் காத்தலா மன்றோ ?

வீ-ள்: தாயகந் தனையமை வாயுறக் காத்தல்
எந்தலைக் கடனும் செந்தலை வேலோய் !

ப-க: தாயகங் காக்க மேயவிப் பெருமை
பெற்றநீர் பிறப்பின் பெரும்பயன் பெற்றனிர்
சிறப்பிதைக் காட்டினும் இறப்பதொன் றுண்டோ!
யானென தற்றுத் தானெனப் பெற்றநும்
அன்னைக் கிடர்செய உன்னிடும் ஒன்னலர்
முனைப்பினை யினைத்தென நினைத்தொறு நினைத்தொறும்
உள்ளுணர் வதனைக் கொள்ளி யாக்கொடு
பற்றியே மூண்டு முற்றியே நுந்தம்
அகத்தினி லடக்கவும் அடங்கா தெழுந்து
முகத்தினிற் சேந்து மூக்கினிற் புகைந்து
கோட்டியே நுதலினை ஆட்டியே மீசையைக்
கண்ணிடைப் பொறிந்து துண்ணெனப் பரந்து
நஞ்சென வெரியுநும் வெஞ்சினத் தீயினைக்
கண்டுமே தமிழ்த்தாய் கொண்டன ளுவகை.
அலையெறிந் தார்த்தனள் நிலையறிந் தாட்டி

வளர்த்தா ளாக்கிநும் உளத்திடை மறக்குணம்
இயலுறச் செய்தவா னியெனுமக் கைத்தாய்.

வீ-ள்: வாழ்க தமிழ்த்தாய்! வாழ்கவா னித்தாய் !

ப-க: பெற்றநற் றாயாம் நற்றமி ழன்னையும்
வளர்த்தகைத் தாயாம் வானியும் கிளர்த்தெழுந்
துவந்தார்த் திட்டநும் உயர்சினத் தீயினால்
நிவந்தார்த் தெளிதா நினைந்துவந் தெடுத்த
பற்றலர் நாடென் படுமோ
நற்றமிழ் காக்கும் நயத்தகு வீரரே. 19

வீ-ள்: அச்சினத் தீயினால் எச்சமின் றழிந்திடும்.

ப-க: ஆகுக அங்ஙனம். ஏகுநீர்ப் பெருக்கை
இடைப்படு தூசுகள் தடைப்படுத் திடுமோ!
இன்னமுங் கேட்டிர்நும் அன்னையர் நும்முனோர்
திசைபடு பெருமையை இசையுடன் பாடி
என்னருங் கண்ணே என்னலங் கருதி
இனிக்கண் ணுறங்கா யெனத்தா லாட்ட,
அன்னையர் பாட லிற் றுன்னிய முன்னையோர்
அளப்பரும் பெருமையை உளப்பட வயரா
தெண்ணி யெண்ணிக் கண்ணீர் மல்கக்
கண்ணுறங் காது களிப்புடன் கேட்டே
தாய்மொழி தம்மினும் தாய்நா டெனுமப்
பற்றுமவ் வுரிமையு முற்றுறப் பெற்றனிர்.
அவ்வா றும்மைச் செவ்வனே வளர்த்த
அன்னையர் வெருவுற இன்னலர் துன்னவப்
பற்றெலா மகன்றிடப் பெற்றனி ரோகாண் !

வீ-ள்: இலையிலை அவ்விழி நிலையுற்றி லோமிலை.

ப-க: பிறக்கிட லறியா மறக்குடிப் பிறந்தீர்!
சாற்றுவ தொன்றைப் போற்றிக் கேண்மின்!
மாற்றருந் துப்பொடு நேற்றுளன் ஒருவன்
இன்றிலன் என்னும் ஒன்றிய அந்நிலை
யாமையை யுடைத்திவ் வுலகம் ஆமிதன்
உண்மையை உணர்ந்தோர் உண்மையிற் சாவினுக்
கஞ்சார். பூவும் பிஞ்சும் காயும

கடுவளி யாலுதிர்ந் திடுவதை யறிவோம்
பிறந்தவ ரிறப்ப தறிந்தவோ ருண்மை.
பிணியால் மூப்பால் கணியாச் சாவும்
அச்சாவு போல இச்சாவை எண்ணலிர்.
போரில்நீர் சிந்தும் சோரியோர் துளியும்
'உரிமையே தமிழர்க் குயிரவர் பெருமையை
அறியாது தீண்டலிர் வறிதவர் செருக்கினை'
எனப்பறை யறையுமே முனைப்பொடெத் திசையும்.
உற்றிடு போரில்நீர் பெற்றிடு விழுப்புண்
தெற்றென வந்து கொற்றவை யுவந்து
முத்தமிட் டளித்த முத்திரை யாகி
வழிவழிக் குறியாய் ஒழியாது நிற்கும்.
போர்ப்படு புண்ணே மாப்புகழ்ப் புண்ணும்.
அடிவழுக் கிவீழ்ந்து படுபுண் ணெல்லாம்
புண்ணெனப் படுமோ! எண்ணறு தலைமுறை
வருதனி மக்கள்தாம் நுகர்தரு முரிமையைத்
தந்ததம் முன்னோர் நொந்தபுண் எண்ணிக்
களம்பட இயன்றதைக் கருத்தினி லிருத்தி
உளங்கசிந் துருகி உகுப்பர்கண் ணீரெனில்
இரந்துகோட் டக்கதன் றேவப் புரந்தபுண்!
புண்படா தெவரே புகழுடம் படைந்தார்?
எண்படா துலகில் இறந்தவர் தம்முள்
பத்துப்பத் தாயி ரத்தொரு பேரே
புகழுடம் பெடுத்துத் திகழ்கிறார் என்னில்
அப்புக ழுடம்பி னைப்பெறு மப்புண்
இப்பெரும் போரில் எய்துபுண் ணேயாம்.

வீ-ள்: அப்புக ழுடம்பெ டுப்போம் ஐயமில்.

ப-க: நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வெளிநிலம் புக்கு மேவார்ப் பணித்துச்
சாலி யெனுமூர் காலுறக் கொண்ட
முந்நீர் விழவின் அந்நெடி யோனும்,
உட்கா உரனெடு வட்கார்ப் பேணத்
துப்புயர் முதுகுடு மிப்பெரு வழுதியும்,

புதியா ரில்லப் புதவம் புடைத்த
தப்பென தெனும்பொற் கைப்பாண் டியனும்,
தந்திற லறியா முந்துறு பெரும்பகை
செறிந்தார் தூங்கெயி லெறிந்தசெம் பியனும்,
உருப்பார் மோரியர் உறுபடை யழித்த
செருப்பாழி யெறிந்த இளஞ்சேட் சென்னியும்,
தடையா நின்ற வடவரை நெற்றியில்
புலிபொறித் துயர்புகழ் மலிகரி காலனும்,
அடையார் நாண வடவரை முடியில்
வாங்குவிற் பொறித்தே ஓங்குபுகழ் நிறுத்த
அமையாக் கடுஞ்சின இமய வரம்பனும்,
நண்ணூர் நாண வெண்ணிப் பறந்தலை
காணிய புறப்புண் நாணிவடக் கிருந்து
வருஞ்சா வுகைத்த பெருஞ்சேர லாதனும்,
விருப்பொடு பொருது திருப்போர்ப் புறத்துப்
பொன்றுப் புகழ்நிறீஇப் பொன்றிய குடக்கோ
நெடுஞ்சேர லாதனும், இடஞ்சார் புறுத்த
இன்னோ ரன்னநம் முன்னோர் எய்திய
பொய்பட நின்ற மெய்படு புண்ணால்
புகழுடம் படைந்து திகழ்தரு கின்றதை
உள்ளி யுள்ளி வெள்ளம் படக்கண்
விஞ்சிய அன்பால் மெய்விதிர் விதிர்த்து
நெஞ்சநெக் குருகி நிற்குந மன்றோ !
வீ-ள்: ஆமாம் ஆமாம் நாமவேல் மன்ன !
ப-க: அப்புக ழுடம்பின் றிப்படி யுமக்கு
மிகவெளி தினில ணுகுதலான் நும்போல்
பெற்றவர் யாரோ மற்றவிப் பேறே !
வீ-ள் · உடைமையைக் காத்தல் கடமையே இறைவ !
ப-க: பெறற்கரும் பெரும்பே றுறற்கை நீட்டி
விருப்புட னேற்கும் செருப்புகல் மறவீர் !
இப்பெரும் படைக்கிங் கொப்பிலா வீரன்
அடங்காக் குதிரையை அடக்கிய மடங்கல்
பகைக்கடல் கலக்கும் தகைப்பெருங் குன்றம்
பற்றலர் வெருக்கொளப் பெற்றவெங் களிறு

விழுப்புக ழெய்திய அழுக்கிலாக் குரிசில்
ஒழுக்கமே உயிராக் கொண்டவன் இழுக்கைக்
கனவிலுங் கருதாப் புனைகழல் மறவன்
நறையூர்க் கிழவன் பெறுந்தமிழ்ச் செல்வன்
ஆகிய பழையனை ஓகையோ டுங்கள்
தலைவனுப் பெற்ற விலையிலாப் பேற்றினுக்
குவமையு முண்டோ உலகினில் ? அவன்புகழ்
வாழ்க தமிழென மன்னி,

வீ-ள்: வாழ்கஎம் தலைவன் வாழ்க வாழ்கவே ! 20

ப-க: அரும்பகை யகற்றும் பெரும்படைத் தலைவற்
குரியவே னுதி என்னும் பெரிய
பட்டஞ் சூட்டினன், மட்டவிழ் வஞ்சி
மிலைந்துமே சென்று மலைந்துமே தும்பை
நீந்தியே பகைக்கடல் வேய்ந்துமே வாகை
வகைபெற மீண்டு வருதல்
தகைபெறு பழையன் தன்றலைக் கடனே. 21

பழை: இமைப்படு பொழுதில் தமிழ்ப்பகை தன்னை
வென்றடிப் படுத்துமே மீளல்
மின்றலை வேலோய் ! என்றலைக் கடனே. 22

(நேரிசை வெண்பா)

சாத்: கன்றிக் கதறிக் கலவார் மகளிரழ
வென்று களங்கொள்பல் வேற்கட்டி !—இன்று
நறையூர்க் கிழான்பழையன் நாணவே ஒன்னார்
குறையிரந்தால் செய்வதெவன் கொல்.

(ஆ-அடி)

ப-க: படைவலி கண்டதும் அடையலர் பணிவர்.

(நேரிசை வெண்பா)

சாத்: கான்புகுந்தொன் னுரொளிக்கக் கன்றிடுபல்வேற்கட்டி
ஏன்பழைய னுக்கீந்தாய் ஏனுதி—தான்பயந்த
மைந்தற்குத் தந்தைபொருள் வாராவோ தானேகாண்
உந்தைக்கிந் நாடுரித்தன் றோ.

(ஆ—அடி)

ப-க: தந்தையின் பொருளை மைந்தற்கு வழங்கல்
முறையே யானம் முறையே செய்தனன்.
பாற்பட வமைந்த நாற்படை வீரரே !
தளர்வற நும்படைத் தலைவன்
கிளர்மொழி சிறிது கேட்டீ மின்னே. 23

(குறளடி வஞ்சிப்பா)

ம ழை: மறமூறிய திறமேகெழு
மறவீர்நம துறுதாயகம்
பெறவேநினை வுறுசார்பலர்
அறியாமைய திருவாயுற
இன்றேடிக லொன்றேனும
கன்றேயயல் சென்றேகிட
லின்றாகவி கன்றேவலி
கொன்றேபுக லின்றேயெதிர்
நின்றேபகை யின்றாகிட
நன்றேதக வின்றேபடை
யெடுப்போமுனை யடுப்போமெதிர்
மடுப்போமுடி பிடிப்போமுகத்
திடிப்போம்வலி கெடுப்போமிடுப்
பொடிப்போந்தலை யுடைப்போநிலத்
தடிப்போநையப் புடைப்போமுயிர்
குடிப்போமற வீடுப்போம்வாகை
முடிப்போஞ்சரி நடப்போமினி
எனவே,
கடுமுர சதிர்தர நடமின்
படுமுகி லிடையெழு மிடியென ஆர்த்தே. 24

திரை 6—நகருள்

நடிகர்: மகளிர்

(நேரிசை யாசிரியப்பா)

ம-ர்: கொடிவான் மறைப்பக் குடைமதி யுறைப்பக்
கடிமுர சார்ப்ப நெடுமொழி பூப்ப

அடிபடு நெடுநிலம் பொடிபடத் தமிழ்ப்படை
கடலெனச் செல்லுமிக் காட்சி
அடையார் நாடினி விடிதலுங் காண்மோ !

### வள்ளைப்பாட்டு

(கலித்தாழிசை)

1. காவிரியில் வெள்ளங்
கரைபுரண்டு செல்லுதல்போல்
தாவில் சினங்கொண்டு
செலுமித் தமிழ்ப்படையால்
ஆஅவர்நா டென்ன ஆகுமோ தோழி !
அடங்கார் நமைவெல்லல் ஆகுமோ தோழி !

2. வானியில் வெள்ளம்
வரையிறந்து செல்லுதல்போல்
மானச் சினங்கொண்டு
செலுமிம் மறப்படையால்
ஏனவர்நா டென்ன எய்துமோ தோழி !
இகலார் நமைவெல்லல் ஏலுமோ தோழி !

3. நொய்யலில் வெள்ளம்
நுரைகிளம்பிச் செல்லுதல்போல்
செய்யாச் சினங்கொண்டு
செலுமித் தமிழ்ப்படையால்
வெய்யவர்நா டென்ன மேவுமோ தோழி !
மேவார் நமைவெல்லல் மேயதோ தோழி !

4. அம்மூவாற் றும்பெருகும்
ஆடிப் பெருக்கேபோல்
செம்மாந்து சீறிச்
செலுமித் தமிழ்ப்படையால்
அம்மா! அக் கங்கம்என் னாகுமோ தோழி !
அக்கங்கர் கொங்கர்முன் ஆற்றுவரோ தோழி !

திரை-7 வழியிடை

நடிகர்: பழையன், வீரர்கள், பாணர்.

(நேரிசை யாசிரியப்பா)

பழை: கடலெனப் பரந்து காற்றென விரைந்து
மிடலொடு சினந்து மேவா ரழிவுறத்
திறப்படச் செல்லுமிம் மறப்படைப் பாணர்காள்!
ஏதுக்கு முருகா வேனு மிசைக்குரு
காதவொன் றிலையெனு மூதுரைக் கேற்பத்
தளர்ச்சி யுருதுளக் கிளர்ச்சிமீக் கூர்ந்து
வழிச்செல் வீரர்கள் மொழிச்சுவை நிரம்ப
இனிமையி னிருக்கையா யேழிசை பொருந்தித்
தனிமையி னிருக்குநம் தமிழிசைப் பாடல்கள்
பாடுக சிலவான் பாலொடு கூடுறு
தேமாங் கனிசெந் தேனென.

(கலித்தாழிசை)

பாணர்:1. தந்தா யகங்காக்கச்
சமைந்தெழுவோர் வெஞ்சினத்தீ
முந்தாமுன் நும்நாட்டை
முகங்கவிழ்மின் தெவ்வீர்காள் !
வந்தால் வரட்டுமென
வழிமொழிந்து நிற்பீரேல்
அந்தோநும் நாடழிதல்
அட்டியிலை கட்டாயம் அறிகுவீரே.

வீரர்: ஆம் ஆம் !

பா-ர்:2. தாய்மொழிகாத் தோம்புதற்குத்
தகைந்தெழுவோர் பேசுமிந்த
வாய்மொழிகே ளாமுன்னர்
வழிதொழுமின் தெவ்வீர்காள் !
காய்மொழியைக் கேட்குமெனக்
கருதியெதிர் நிற்பீரேல்
ஆய்மொழியைப் பேசுதற்கங்
காருமிலா தேயொழிவர் அறிகுவீரே !

வீரர்கள்: ஆம் ஆம்!

பா-ர்: 3. தம்மினத்தைக் காத்தோம்பத்
தழன்றெழுவோர் தம்வாளின்
செம்முனையை நோக்குமுனம்
திசைதொழுமின் தெவ்வீர்காள் !
அம்முனையைக் காண்குமென
ஆவலுடன் நிற்பீரேல்
எம்மினமென் றேகூற
யாருமிலா தேயொழிவீர் இது கேட்டீ மின்.

வீரர்கள்: ஆம் ஆம் அதுவே. 26

(தேமாங் கனிசெந் தேனென,
ஆமாம் ஆமாம் ஆமாம் அதுவே.
என, ஆசிரியப்பாவை முடிக்க.)

## இரண்டாங்களம் ஐந்தாங் காட்சி (9)

இடம்: வழியிடை காலம்: நண்பகல்

நடிகர்: வீரர்கள், கண்டோர். (ஒருவன், மற்றொருவன்)

### படைச்செலவு—நாற்படைச்சிறப்பு

(நேரிசை யாசிரியப்பா)

ஒ-ன்: தந்திறஞ் செருக்கி நந்திற லறியா
எடுத்திடும் பகைவர் படக்கொதித் தெழுந்து
கமழ்ப்படு வஞ்சித் தமிழ்ப்படை செல்லும்
கண்கொளாக் காட்சியைக் காண்மோ மண்கொள
எண்ணிய எண்ணலர் எண்ணமென் படுமோ !
பாற்பட வமைந்தவிந் நாற்படைப் பெருமையை
இற்றென எடுத்தினி தியம்புதல்
கற்றறி புலவர் கண்ணவு மரிதே. 1

### யானை

(நிலைமண்டில ஆசிரியப்பா)

அடித்தெழு முரசின் இடித்து முழங்கி
வடிவேல் வாளின் கடிபட மின்னி

மதிப்பிறை யிருபால் நுதிப்பொடு தோன்ற
சோனை பொழிந்து வானிடை முகிலினம்
விரைவொடு கறுத்து நிரைநிரை யாகச்
செல்லுதல் போலவும், ஒல்லென முழங்கி
அலையெறி கடற்கண் மலைசெலு வதுபோல்
ஆடி யசைந்து கோடையி னூடும்
பாயொடு கூம்பு மேயிய நாவாய்
நிரல்படச் செல்லுதல் போலவும், உரல்புரை
நாலுகா லோடு நாலுவா லோடு
நாலுவா யோடு வாலுகோ டோடு
மலைபல நிலைபெயர்ந் தொலியெழ விரைந்து
நடப்பன போலவும், கடப்படு களிறுகள்,
நீர்வீழ் தூம்பின் நீர்வீழ் புழைக்கை
நஞ்சென முதிரிய வெஞ்சினத் தீயால்
அந்நீர் காய்ந்து செந்நீ ராயது
தீந்து புகைந்து காந்தழ லாக
அவ்வெரி மூண்டெரி செவ்வழ லாக
விசிறியா இருமுறம் விசிறிட அத்தீ
கண்ணிடைப் பொறியாத் துண்ணெனச் சிதறக்
காரெனக் கடலெனப் போரென முழங்கி
மறம்பட்டுச் செல்லுதல் மாணாய்! திறம்பட்டு
மாற்றலர் எதிர்நின் றூற்றுவர் கொல்லோ!

## குதிரை

(நேரிசை யாசிரியப்பா)

நிலைதரி யாது மலையென எழும்பி
ஒல்லென ஆர்த்துக் கொல்லெனப் பெருகி
வெள்ளென வேர்த்துப் பொள்ளெனப் பறந்து
வான்றொடு வதுபோல் ஆன்றுமேற் றாவி
குழலெனக் கனைத்துத் தழலென விழித்துக்
காலெனக் கடுகிச் சேலென முடுகிக்
கரையினை நோக்கி வருகட லலைபோல்
நிரைநிரை யாவாய் நுரைகடை யிழுது

தாழியி னின்றுகீழ் வீழ்தல்போல் வீழ,
முத்தென மேனியு திர்த்திட வேர்வை,
எரிசினங் கான்று பரியினஞ் செல்லுதல்
காணாய்! தமிழ்த்திறம் கருதா
மாணார் முனைப்புலம் மண்படுங் கொல்லே! 2

### தேர்

கடலலை யெழவத னுடன்மே லெழுதரும்
மரக்கலம் போலப் பொருக்கென வெழுந்து
தரைப்படா திம்மென விரைப்பட வோடி
அலையிழி கலம்போல் நிலமிசைப் போந்தும்
அக்கடற் காக்கை புக்குறக் கூம்பில்
பறப்பது போலச் சிறப்புறப் பறக்கும்
கொடிவிரைந் தோடென முடிமிசை யாடித்
தள்ளிடக் காற்றெனப் புள்ளென விரைந்தும்,
நிலைபெயர் கில்லா மலையிற குகொடு
பறப்பது போலப் பறந்தும், திறப்படத்
தமையிழுத் தோடுமவ் விவுளிகள் தாக்குமுன்
ஓடுதல் பொருதுமுன் ஓடிடுந் தேர்களின்
சிறப்பினைக் காணாய்! செறுநர்
துறப்பர்கொல் வாழ்வைத் துணிந்தினி மன்னே. 3

### மறவர்

நகுபக லவன்முன் தொகுமிருட் குழாஅம்
தென்படின் அக்குழாம் என்படும், வெஞ்சின
அரிமா முன்னர் நரிமாக் கூட்டம்
எதிர்ப்படின் முன்போல் அதர்ப்படு மோதான்!
கொடுவரி முன்னர் அடுசிறு மானினம்
தப்புத லுண்டோ அப்புமுன் எரிபோல்!
பூசைமுன் எலிக்குழாம் மீசையை முறுக்கின்
அப்புறம் அதன்பெயர் செப்புதற் குரித்தோ?
எரிமுன் சருகும் கரிமுன் மரமும்
தப்புத லுண்டோ? இப்பெரும் படையில்
பல்லா யிரமாய்ச் செல்லுமிம் மறவருள்

ஒருவன் வெஞ்சின எரிதீ முன்னர்
செத்தைபோல் தெவ்வர் ஒத்தொழி குவரே!
வாயிது காணும். ஆயிரங் காக்கைக்
கொருகல் என்னும் உரைகொல் சான்றே.
கெட்டனர் பகைவர் விட்டனர் கோட்டை
முட்டினர் கல்லில் தொட்டனர் தீயைத்
தட்டினர் அரியைப் பட்டனர் பாவம்!
போக்கிட மலையுயிர் காக்கினி யவர்க்குக்
காக்கையும் கழுகும் மாக்குல மடங்கவும்
செரியாக் குணத்தால் தரியா தொழிந்திடும்.
பெருகியே செல்லுமிப் பெருவெள் ளத்தினை
அடுத்தவோர் கட்டணை தடுத்து நிறுத்துமோ!
கருமுகி லிடையோ ரிருகொடி மின்னல்
வெண்மதி போழ்ந்து தண்மதி சேந்து
கூரெரி கான்று மூரிய வாள்வேல்
அம்பொடு கூர்ந்து வெம்பி வெதும்பி
மின்னுதும் ஒன்னார் என்னு குவர்கொல்!
செந்தமிழ் மறவரின் திறத்தினைக் காண்பான்
வந்துவா னிழிந்து மதிக்குலங் கோடி
மண்கிடைச் செல்லல்போல் வெண்குடை பாராய்!
பொருந்தலர் உடற்றசை அருந்தமுன் செல்லும்
பருந்தெனக் கொடிகள்முன் பறந்துசெல் லுதல்பார்!
அடையலர் வெருவுற உடையவர் முறுகுற
இடியென முரசம் அடிபடும் ஒலிகேள்!
வாகுடன் கண்டோம் வஞ்சியை
வாகையைக் கண்டு மகிழ்ந்திடு வோமே. 4

மற்: விரிந்த குடைகளும் பரந்த கொடிகளும்
கடுவெயில் காயாப் படிநிழல் செய்யச்
சாலவே மஞ்ஞைப் பீலிசெய் தழைகள்
விசிறிபோல் வேர்வற விசிறிட வீரர்கள்
செந்தமிழ் பாடியு வந்துசெல் கின்றனர்.

ஒரு: குடையுந் தழையுங் கொடியும் நிரைத்தலின்
பகல்கரந் திடவிருள் புகுந்தது பாராய்!

மற்: கட்டழல் பரக்கப் பட்டணி யெறிக்கக்
கைப்படை கனல்வெ ளிப்படக் கக்கக்
கரந்திட இருளொளி பரந்தது காணாய்!
ஒரு: இதோஒ பாராய்! அதோஅக் குதிரையிற்
செல்பவர் தாம்நம் வெல்படைத் தலைவர்.
மற்: இவரா பழையன்!
ஒரு: அவரே தாமிவர்.
நறையூர்க் கிழாஅன் நற்குடிப் பெருமையைப்
பறையறைந் தாற்போற் பரக்கச் செய்யும்
இவர்தாம் அவர்.
மற்: நான் இதுவரை இவரைக்
கண்டிலேன் இல்லைக் கண்டுகண் களிக்கப்
பெற்றேன் இன்றே பெரும்பேறு பெற்றேன்;
வீரமே உருவம் நேரெவர் இவர்க்கு!
கனையெரி முன்பகை கருகிடுஞ் சருகாம்
இனியுமா ஐயம் இலையிலை இலையே.
ஒரு: தமிழ்ப்படைக் கையம் சமைப்பட வில்லை.
மற்: அரியே றனையான் பரியினைப் பாரும்
ஓரா யிரம்பரி நேரோ இதற்கு!
குதிரையா அன்றிது மதிவல் ஓவியன்
தீட்டிய ஒப்புமை காட்டரும் ஓவியம்!
காண்போர் கண்ணைக் கவ்வும் எழில்முகம்!
மாண்பெலா மொருங்கு வாய்த்தவோர் வடிவம்!
உடலின் வனப்பும் நடையின் முனைப்பும்
முத்தென ஒளிறுவெ ளுத்த மேனியும்
அடிமுதல் முடிவரை அழகமை இப்பரி
படைத்தலை வனுக்குக் கிடைத்தவோர் பேறே!
ஒரு: அடங்கா இதனை மடங்கா தடக்கி
அருமையி னளப்பரும் பெருமையைத் தந்து
மன்னவன் இனிதுபா ராட்டத் துன்னரும்
புகழொடு நிகழ்தகத் திகழுமித் தலைவன்
இதற்குக் கிடைத்த ததைவிடப் பேறே!
மற்: ஒப்பருந் தலைவற் கொப்பரும் புரவி

இப்பெரும் படைக்கவன் ஒப்பருந் தலைவன்.
எனவே,
அற்றது தமிழ்ப்பகை அறவே
பெற்றனம் வெற்றி பெற்றனம் இன்னே. 5

(தாழிசை)

வீ-ள்: 1. எம்மினத்தி னுக்கிடர்
இழைக்கவெண்ணும் இகலரை
இம்மெனு மதற்குளே
எதிர்த்திலா தொழிக்குவோம்.

2. தாயகத்தினைக்கொளத்
தருக்கிடும் சழக்கரை
வேயகத்திற் பட்டதீயின்
வேருட னெழிக்குவோம்.

3. தாய்மொழிக் கிடர்விளைக்கத்
தானெனுந் தருக்கரைப்
போய்முனைக் கிடையிலே
பொடிப்படப் பொசுக்குவோம்.

4. தமிழர்தந் திறம்பழித்த
தகையிலாத பகைவரை
இமையினிற் குமைவுற
எதிர்த்தழித் தொழிக்குவோம்.

5. அன்னைதந்தை அக்கைதங்கை
அண்ணன்தம்பி முதலரா.
இன்னவெம் மினம்பழி
யிகலரை யொழிக்குவோம்.

(ஆ-அடி)

ஒரு: ஒழிந்தது தமிழ்ப்பகை ஒழிந்ததின் றுடனே.
எத்தகு பாடல் எத்தகு விரம்!
இப்படை முன்னர் இகலார்
எப்படித் தப்புவர் கைப்படின் மாதோ! 6

—: o :—

## இரண்டாங்களம் ஆறுங்காட்சி (10)

**இடம்:** போர்க்களம் **காலம்:** பகல்

**நடிகர்:** கண்டோர் ( ஒருவன், மற்றொருவன் )

### போர்

( நேரிசை யாசிரியப்பா )

ஒரு: கொங்கப் படையுங் கங்கப் படையுமிங்
கொருகள மதனிற் பொருவதற் கெதிரெதிர்
நிற்குமிக் காட்சி எற்படு மோகாண் !
மற்: முரசமுஞ் சங்கமும் வரிசையாப் பொருதிட
நில்லுமி னென்று சொல்லுவ போலக்
காரெனக் கடலெனப் போரென ஆர்த்து
முழங்குகின் றனஅதோ ஒழுங் தற இருபடை
அணிகளுந் தனித்தனி பிணிவிடு திரையென
முனைப்பொடு பொருதிடச் சினைப்புட னெதிரெதிர்
சென்றுகை கலந்தன. பொன்றுனர்க் கின்றுடன்
ஒருநா ளென்ன வருநா ளெண்ணத்
தோளொடு தோளும் வாளொடு வாளும்
வேலொடு வேலும் தோலொடு தோலும்
வில்லொடு வில்லும் மல்லொடு மல்லும்
கணையொடு கணையும் இணையிணை யாகத்
தாக்குதல் பாராய். போக்கும் முடிவும்
என்னவோ நெஞ்சும் உன்னவே அஞ்சும்.
ஒரு: பொருப்பொடு பொருப்பெதி ருருப்பொடு பொருதென
மருப்பொடு மருப்பு நெருப்பெழப் பொருத்திக்
களிற்றொடு களறெதிர் பிளிற்றியே உருத்துக்
கட்பொறி பரக்க மட்பக உரற்கால்
திறம்பட ஊன்றி மறம்படச் சினைஇக்
கொக்கியாற் கிளைகை புக்கிட வளைத்தல்
போன்றுகை கழுத்தில் ஊன்றியே பிடித்துஆ !
உளவுயி ராற்றல் அளவெலாங் கொடுத்துப்
பொருங்கடுங் காட்சியைப் பாராய்.
மற்: ஒருங்குடன்

தரையினில் விழுந்து வரையன விரண்டும்
புரள்வதைப் பாரும் இருள்புரள் வதுபோல்.
ஒரு: அதோபார் இரண்டும் இதோபார் என்று
புரண்டுருண் டெழுந்து வெருண்டிடக் கண்டோர்
மீண்டுமல் வீரர்போல் மூண்டெழு சினத்தால்
ஒருகையா லொன்றையொன் றிருகை மல்லர்போல்
பேச்சுமூச் சின்றி மூச்சுப் பிடித்துத்
தள்ளுதல் பாராய் தள்ளிரு மலைபோல்.
தொடிக்கை பற்றி உடுக்கை இடைச்சியர்
தும்பிலி பறப்பதைப் போன்று வம்பவிழ்
புழைக்கை பற்றி இழுக்கையின் முற்றி
முறந்தலை மோதக் சுறங்கெனச் சுழலும்
காட்சியைக் காணாய்.
ஒரு: நீட்சிய பனையின்
வம்பவிழ் பாளைபோற் கொம்பினி லொன்றைச்
சிந்தவே குருதி செம்பவ ளம்போல்
அந்தவெங் களிறு குந்தவே தள்ளி
வெடுக்கென ஒடித்ததால் இடிக்குதல் பாராய்.
மற்: அடடா! கீழே படடா என்பபோற்
காலினை வாரி நீல மலைபோல்
தள்ளியே கீழ்ச்சிறு பிள்ளைகள் போலப்
பின்கால் பற்றித் தன்கா லொற்றி
இழுப்பதைப் பாராய் ஒழுக்குறு தோணிபோல்.
ஒரு: என்னேஇக் களிற்றின் இன்னாக் கொடுஞ்செயல்
எதிரணி வீரரை அதிரவே பிடித்துக்
கைகால் பிய்த்தும் காலால் தேய்த்தும்
பொய்யாப் படுத்தி அய்யோ மறவரை
அணியணி யாக்கா லடியினைப் பற்றித்
துணிதுவைப் பதுபோல் துவைப்பதும், களத்தில்
நெல்லடிப் பதுபோல் ஒல்லென அடிப்பதும்,
காணாய் கொல்லிதன் மாணாச் சினத்தினை.
யானையிவ் வாறு தானே பொருதலை
யானை மறமென அறையும் பொருள்நூல்.
மற்: கரிப்போர்க் காட்சியைக் கண்டனம் இதுபோற்

பரிப்போர்க் காட்சியும் பார்க்கலாம் வாரும்.
கதறி வீழ்ந்துகை கால்தலை மூளைகண்
சிதறி யோடிச் செங்களம் பட்டிட
அதரி திரிக்கும் ஆக்களைப் போலக்
குதிரைகள் ஓடிக் குளம்பின் உழக்கியும்,
மறவர் குஞ்சியை வாயினுற் கவ்விச்
செறுவில்நெல் லரியை உறுவலி உழவர்
எறிதல்போல் வீசி எறிந்தும், மறிந்துபின்
கழையெனத் திரண்ட கால்களிற் செந்நீர்
குழைய விட்டசெஞ் சேற்றுக் கழனியில்
தழைமிதிப் பவர்போல் தருக்கியே மிதிக்கும்
காட்சியைக் காணுய். மாட்சியின் இதனைக்
குதிரை மறமெனக் கூறும் பொருள்நூல்.
அதிர்தரப் படுகளம் விதிர்தர விகலார்
பொங்கி யெழுந்தே அங்கும் இங்கும்
அலையென ஓடி மலையன தேர்கள்
படுகளம் அம்பியா நெடுவுருள் குழவியாத்
தெங்கங் காய்போற் சிதறத் தலைகள்
நுங்கென மூளை நுதுக்கெனப் பிதுக்குறக்
கையுங் காலும் மெய்பிரி தாகக்
குடருங் குண்டா மணியும் படருற
ஆளெனுஞ் சரக்கை அரைத்தலைப் பாராய்.
ஒரு: நாளணி மறவர் கோளரி போல
எதிரெதிர் நின்று முதிர்மறம் பட்டுத்
தோளால் முட்டியும் வாளால் வெட்டியும்
வேலால் குத்தியும் கோலால் மொத்தியும்
வில்லால் எய்தும் சொல்லால் வைதும்
பல்லால் நெக்கியும் மல்லால் நொக்கியும்
எரிசினங் கான்று பொருதிடுங் காட்சியைக்
காணவுங் கண்கள் நாணுதுங் கொல்லோ!
மற்: கையவெங் கடமலை வெய்யவெங் கரிகளின்
பையி னின்று பவளஞ் சிந்துதல்
போலவே சோரி சாலவே சிந்தத்

தும்பிக் கைகளைப் பம்புநீர்த் தும்பிபோல்
வெட்டித் தள்ளிக் கிட்டவோர் கைம்மா
ஒய்யென விறுவாக் கையி லுள்ளவோர்
வேல்கொண் டெ றிந்த விடலையை நோக்கி
நால்கொண்ட கையினை மேல்கொண்டு வீசிக்
கறுத்து மேல்வருங் களிற்றினைக் கண்டு
பறித்துமெய் வேலை வெறித்துமே பார்த்துத்
துரத்திய வொன்றுகை வரப்பெறு குநன்போற்
சிரித்துமே நிற்குமச் செம்மலைப் பாராய்.

ஒரு: ஊர்சூழ் மதியின் நீர்சூழ் பதிபோல்
ஒருவனைப் பலபேர் கருமுகில் சூழ்ந்து
மின்னி யிடிப்பது போலத் துன்னி
வில்லையும் வேலையும் ஒல்லென விடுப்ப
மெய்ந்நிலம் படாஅம் மையணற் காளை
மேலிழி பனங்கருக் கோலை போன்றும்,
ஆரமை குடத்துத் தேருருள் போன்றும்
தோன்றுதல் காணாய்.

மற்: ஞான்றவாய்க் களிற்றை
வெட்டிவீழ்த் ததன்கீழ்ப் பட்டஅம் மறவனை
உடையவன் களிறெடுத் திடம்பெயர் தலைக்காண்,

ஒரு: நின்றுநேர் பொருது பின்றுணி பட்ட
கய்யுங் காலும் மெய்யுந் தலையும்
மன்னிய மறத்தால் இன்னமும் அட்டைபோல்
ஆடுதல் பாராய். ஆடவர் இன்னணம்
அணக்கிய பொருகளம் பிணக்கா டானது.
பரியும் தேரும் கரியும் இயங்க
உழவர் உழக்கிய பழனம் போலச்
செந்நீர்ப் பொருகளம் அந்நீ ரிழந்து
நூறா நொறுங்கிச் சேறா னதுபார்.
காக்கையுங் கழுகும் போக்கை யிழந்தன.
நரியும் நாயும் கரிபோ லாயின.
வெஞ்சின மறவர் தஞ்சினங் காணா
அந்நிலை யதனுக் கஞ்சி
வெந்நுறீஇப் பகலோன் மேற்குநோக் கினனே. 1

மற்: அதோபார் யாங்கள் இதோவந் தோமென
முன்னணி வீரர்கள் முன்னுற வந்தே
அதிர்குர லெடுப்பி எதிரெதிர் நின்று
புலியும் புலியும் மலைவன போன்றும்
அரியும் அரியும் பொருவன போன்றும்
களிறுங் களிறும் குளிறுவ போன்றும்
மலையும் மலையும் சிலைவன போன்றும்
முகிலும் முகிலும் இகலுவ போன்றும்
மின்னும் மின்னும் துன்னுவ போன்றும்
இடியும் இடியும் இடிப்பன போன்றும்
வாளும் வாளும் தோளுற வாங்கி
வெட்டுவெட் டென்ன வெட்டுதல் பாராய்.
வேலும் வேலும் மேலுறத் தூக்கிக்
குத்துகுத் தென்னக் குத்துதல் பாராய்.
வில்லும் வில்லும் ஒல்லென வளைத்துச்
சோனை போற்கணை ஈனுதல் பாராய்.
தோலும் தோலும் ஆலுறத் தாங்கி
அடுப்பன வெல்லாந் தடுப்பன காணாய்.
குதிரைமே லிருந்து குப்புற வீழ
எதிரவன் வெட்டி யெறிவதைப் பாராய்.
தேருங் குதிரையுஞ் சீரழிந் தொழிய
வீரனு மாங்கே வீழ்வதைப் பாராய்.
களிறும் வீரனுங் களப்பட வீழ்த்தி
ஒளிறுவாள் வீரன் உவப்பதைப் பாராய்.
இப்படி யேபொரு திளைத்தால்
அப்புறம் இக்களம் எப்படி யாமோ! 2

ஒரு: அதோஓ பார்முடி விதோஓ வென்ன
வரையறுப் பதுபோல் உரைமுடிப் பதுபோல்
தலைவனுந் தலைவனும் மலையெனப் புலியென
அரியென வெறிமிகு கரியென எரிசினம்
முதிரவே இடியென அதிரவே எதிர்குரல்
போரெதிர்ப் பட்டனர் பாராய். காரிருள்
சூழ்ந்தது பாரதைப் போழ்ந்தொளி கான்று

மின்னலும் இடியும் துன்னின ஈதோ
வந்தது சோணை எந்தநே ரத்திது
நிற்குமோ அறிகிலம்.

மற்: நிற்கும், எப்படை
வென்றோ அல்லது தோற்றோ நின்றிடின்
அல்ல தோடிடின் புல்லென நின்றிடும்.

ஒரு: ஆமாம் அப்புறம் போமே காருடன்
மின்னலும் இடியும் மன்னிய சோணையும்
ஓய்ந்துதம் இருப்பிடம் ஒருங்கே
மாந்தர்தம் வாழ்வின் வளம்பெரு கிடுமே. 3

மற்: பாரதோ பழையன் போரெதிர் திறனை !
வெட்டுமொள் வாளின் வீச்சும் வெட்டும்
ஈதிஃ தென்ன ஓதுதற் கில்லை;
மின்னலின் வட்டம் என்னலே தகவாம்.
எறிசூர் வேலின் எறிதலும் எடுத்தலும்
காண்பறி யாத மாண்பெருங் காட்சி
அடியிணை நுனிவேல் தொடர்வரு மின்னற்
கொடியெனக் கூறல் அடைவுடைத் தன்றோ?
காணிகா அம்பருத் தூணிநின் றம்பை
எடுப்பதும் தொடுப்பதும் விடுப்பதும் தெரிந்தில
விற்படு சோணை யிற்படு மதுவே.

ஒரு: பாரதோ பாரதோ மாரியு நின்றது.
கங்கர் புறங்கொடுத் தோடுதல் காணாய்
கொங்கர் வெற்றிக் கொடியதோ வெற்றி
வெற்றி யென்றுவான் முற்றிப் பறப்பதைப்
பாராய். வெற்றிகொண் டாடுவோம் வாராய்.

வீ-ள்: வெற்றி வெற்றி வெற்றி வெற்றி !

மற்: பெற்றனர் தமிழர் அற்றது பகைமை
மன்னவன் வாழ்க ! மறக்குடி வாழ்க !
வாழ்க நம்படை வல்லோன் !
வாழ்க தாயகம் வாழ்கசெந் தமிழே ! 4

—: o :—

## இரண்டாங்களம் ஏழாங்காட்சி (11)

**இடம்:** சத்தியமங்கலம் அரண்மனை **காலம்:** காலை

**நடிகர்:** பல்வேற்கட்டி, சாத்தந்தையார்,

### காவிரிக்கரை காவலமைத்தல்

(நேரிசை யாசிரியப்பா)

**ப-க:** புலவர் பெருமான்! அலர்கதிர்ச் செல்வன்
முன்னிருள் நிற்குமோ? ஒன்னலர் பாவம்!
தமிழர் திறமறி யாது தமது
படைப்பெருக் கதனைக் கடப்பருங் கடலென
நம்பியே கெட்டனர். அம்பினுக் கெகிரில்
அசைக்குதி ரெனப்படு தசைப்பொதி நிற்குமோ?
ஊரடு தீயவ் வூரினும் ஆயிரங்
கோடி மடங்கு கூடிய சிறிதே
ஆயினு மஃதத் தீயினுல் வெந்து
சாம்ப லாவதை யாம்பல கண்டுளோம்.
அரியினுங் கரிபெரி தேனுமவ் வரியினைக்
கண்டாற் கருக்கூடு கையேந் திக்கொண்
டுண்டதோர் விளவென விண்டிட உள்ளுரம்
அஞ்சி யலறிப் பஞ்சாப் பறத்தல்
அவ்வரி யேற்றின் வெவ்வலிக் கன்றோ?
கருவுயிர்த் திடவிடர்ப் படுமோ ரரிமாப்
புறத்தொரு களிற்றை நிறுத்திடி னுயிர்க்கா
அவ்வரிக் குருளை இவ்வென வெளிப்போந்
தக்கரி மேற்பாய்ந் ததனுயி ரடுமெனும்
இக்கரி யதனையும் எண்ணிலர் ஒன்னார்.
திருவார் நறையூர் அரிமாக் குருளைமுன்
கங்கக் கரிக்குழாம் எங்ஙனம் நிற்கும்!

**சாத்:** இற்றென வறியா அற்றைநாள் முதலா
எதிரில ராக முதுதமி ழகத்தைக்
குறைசிறி தின்றி முறைதிறம் பாது
வழிவழி யாண்டு வருமிசை மொழியுடை

முடியுடை மூவர்க் கடை தர வென்றும்
படைத்துணை யொடுமகட் கொடைத்துணை யுடையராய்க்
கொடைமடம் பட்ட கொங்கு வேளிருள்
மடைமடம் பட்ட வானி வளற்றும்
வடகொங் கிதனை வழிவழி யாண்டு
வருமக் கட்டி மரபினில் வந்த
பல்வேற் கட்டி! வெல்வேற் பழையன்
உந்தையின் பின்னர் வந்த உன்றன்
அத்தை மகன்உன் மைத்துனன் ஆதலால்,
உன்குடிக் குரிமை யுடையவன்; நின்குடி
வீரமும் ஆண்மையும் சீரிய பண்பும்
அவற்குரித் தாதல் உவப்புடைத் தன்றே!
வெல்போர்த் தொல்புகழ்ப் பல்வேற் கட்டி!
படையணி வகுக்கும் பண்பும், வடிவமை
நாற்படை நடத்திடு மேற்படு திறனும்,
மாற்றலர் எதிர்நின் ருற்றுரு தியன்ற
படைக்கலத் தோண்மையுங் கடக்கரும் ஆண்மையும்
வீரமும் ஒருங்கே சீருற வமைந்த
நறையூர்க் கிழவன் பழையன் திறமுன்
மாற்றலர் எங்ஙனம் ஆற்றுவர் கொல்லோ!
கடலெனப் பரந்த மிடலுடை மறவரை
உடைப்பெரும் படையும் திடப்பட அதனை
நடத்திடுந் தலைவனை உடைத்தில தாயின்
ஆறெதி ரணைபோல் மாறெதிர் நின்று
வெல்லுதல் இல்லெனுஞ் சொல்லதற் கிலக்காத்
தோற்றிட லானது மாற்றலர் பெரும்படை
என்பதை யறிவாய். மன்பதை காக்கும்
மன்னவர் இன்னதை உன்னுதல் வேண்டும்.
உன்னியே பழையனை அன்னவன் ஆக்கினன்.
ஆக்கிய பயனை ஆக்கிய படியே
கைமேற் பெற்றனன். செய்வன தவிர்வன
ஆய்ந்தெடுத் துரைத்து மாந்தரை நல்வழி
நடத்திடும் பழந்தமிழ்த் தடப்பெருங் கடலே!
அறங்கரை நாவின் அண்ணல்! யான்செயுந்

திறந்தனை யெடுத்துச் செப்பல்நுங் கடனே.

சாத்: வடக்கும் தெற்கும் குணக்கும் குடக்கும்
தலைமலை பொதினி மலையொடு கொல்லி
மலையொடு மேற்கு மலைத்தொடர் நான்கும்
வானுற ஓங்கிக் கானுறப் பரந்து
இயற்கை யரணாச் செயற்பட் டேனவை
அகப்புறம் வரவரத் தகைப்புறத் தாழ்ந்து
நாப்பண் சமனா யாப்புற வமைந்தே
அம்மலைத் தொடர்களிற் கம்மெனத் தோன்றி
வருபுனல் நெய்யாப் பெருவுள நல்கி
நந்தமி ழகத்தை மைந்துற வோம்பும்
காவிரி திரியா மேவுதென் கிழக்கில்
கொங்கினை விட்டுப் பங்குறு சோழம்
செல்லுறு பொன்னி நல்லொளிச் சுடரா
மண்விளக் கென்னக் கண்கொள வமைந்த
பொங்குபல் வளமலி கொங்குநன் னாட்டின்
உவ்வளந் தங்கும் இவ்வட கொங்கை
வழிவழி யறநூல் மொழிவழி யாளும்
பல்வேற் கட்டி! நல்வாழ் வகமாம்
நந்தமி ழகத்தில் வந்திது காறும்
வெருவியே ஓடார் ஒருவரு மில்லை.
எனினும் வடபால் இருந்திருந் தினமும்
வந்து வந்து நந்தமிழ் மக்கட்
கின்னல் தருமவ் வொன்னலர் அங்ஙனம்
நினைக்கு நினைப்புக் கினியொரு முற்றுப்
புள்ளிவைத் திடுதல் கொள்ளுறு செயலாம்.
இடமார் கொங்கின் வடபா லொழிய
மற்றமுத் திசையும் நற்றமி ழகமே.
காவிரித் தென்பால் மேவல ரஞ்சக்
கொள்ளக லதனில் எள்ளறு காவற்
படையினை வைத்தல் கடனும் அறிவாய்.

ப-க: ஆமிது நல்லஏற் பாடே காமுறு
பொருள்களிற் சிறந்த பொருளா கியதாய்

மொழிவளர் பெரியீர்! மொழிதலைக் கொண்டேன்.
அங்ஙன மேயமைக் கின்றனன் கொங்கினைக்
கங்கர் நிலையா துங்கன வினுமே.
வலி மிகு மக்கா வற்படைத்
தலைவனுகப் பழையன் தானிருக் குவனே.

—: o :—

## மூன்ருங்களம் முதற்காட்சி (12)

இடம்: காவிரித் தென்கரைக் கட்டூர். காலம்: பிற்பகல்.

நடிகர்: அணித்தலைவன், வில்லவன் வேலவன் என்னும் வீரர்கள்.

காவிரிக் காவல் பற்றி பேசுதல்.

( நேரிசை யாசிரியப்பா )

வி-ன்: என்ன வேலவ! தன்னந் தனியாய்
மனக்கலக் கத்தொடு தனக்குத் தானே
பேசிக் கொள்கிருய்?

வே-ன்: பேசிக் கொள்ள
வில்லை யொன்றும் வில்லவ! முன்னரே
இங்ஙனம் காவல்வைத் திருக்கின் அங்ஙனம்
எந்தைகல் லாகி யிருப்பரோ? அந்தப்
படுகொலைப் போரின் கொடுமையை எண்ணி
இரங்கினன்.

வி-ன்: கழிந்ததற் கிரங்குதல் வீரர்க்
கழகிய தாமோ? மழைவரு முன்னர்க்
கூரைவே யாதான் மாரியால் வீடு
விழுந்தபின் இரங்கி அழுவதாற் பயனென்?
திருமண மாகி ஒருமதி கூட
ஆக விலையென் அருமை மைத்துனன்
மாகளிற் ருேடு மாய்ந்தனன் களத்தில்.
கண்டுநான் கூடக் கண்ணீர் விட்டனன்.
மண்டம ருழக்கி மாண்டனன் கணவன்

என்றது கேட்டதும் என்னருந் தங்கை
கன்றிக் கதறிக் கண்ணீர் வடித்துத்
தலைவிரி கோலமாத் தலையிலு மார்பிலும்
அடித்துக் கொண்டு பிடித்தெறி பாவைபோல்
தொப்பெனத் தரையில் குப்புற வீழ்ந்தே
அரைத்திடு குழவிபோல் அங்கு மிங்கும்
விரைத்துட லுரிந்து மெலிந்துபுண் ணுக
உருண்டு புரண்டை யோவென, ஊரவர்
திரண்டெழ வொருங்கே மருண்டுநோ நொந்தாங்
கெழுந்தவர் தம்மேல் விழுந்து புலம்பி
அழுதன ளோஇலை. எழுதெழி லோவியம்
அன்னவள் கேட்டதும் புன்னகை பூத்துத்
தாயக மதனுக் காயுயிர் விட்ட
வீரன் மணவியென் றூரவர் கூறும்
அப்பெரும் பேற்றினுக் கொப்பதும் உண்டோ?
'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்ற
ஆன்றோர் உரைக்குச் சான்று கியவன்
நோயினுல் உயிர்நீத் திருக்கின் மேயவிப்
பெரும்புகழ் பெற்றிருப் பேனு ! கரும்பினை
வெட்டி வெயிலில் உணக்கினும் கட்டியா
ஆக்கினும் அதன்பயன் நோக்கினென் ருமோ?
இறப்புமித் தகையதே. மற்றவன் மறப்புகழ்
நின்று நிலைஇவாழ் கென்றவம் மறக்குடி
மகளுரை கேட்ட மகனு கியநான்
நாணியே நிமிர்த்துக் கோணிய மனத்தை
'வாழ்க மைத்துனன் மறப்புகழ் ! வாழ்க
அதனினும் எங்கை முதுபுகழ் !' என்றே
வாழ்த்தினன் ; வாழ்த்தி ஊழ்த்தவென் மறத்தை
மீளவும் அடைந்து வாளினை எடுத்தேன் ;
முத்தமிழ் வாழ்வுற வைத்தேன். இத்தகு
மறக்குடி மகளிரா லன்ருே இறக்குரு
தின்னுமப் படியே முன்னைபோன் றேநிலைத்
துள்ளது தமிழர் வீரம் ! கள்ளுணும்

சுரும்பருந் தம்பினம் பெரும்பிறி தாதலுக்
கிரங்காது சினந்து மரங்கொலுங் கையினை
வருத்துமுள் போல வருத்தியே பகையைத்
தாயகம் போன்ற தாயிரீஇ வாழும்
தாமுயன் ருக்கிய காமுறு கூட்டினை
அழியா தோம்பி ஒழியா தினத்தோ
டுடன்படும் மறத்தொடு. கடனறி வீர !
களம்பல கண்டு களித்துமேம் பட்ட
ஒருவற் காக இரங்குதல் தகுமோ ?

வே-ன்: உண்மையே. ஆனால், உண்மையில் இறப்பெனும்
பெரும்பிரி வென்பது கருங்கல் மனத்தையும்
எரிபடு மிழுதுபோற் கரைபடச் செய்யும்
ஆற்ற லுடையது. மாற்றலர் தம்மொடு
மன்னவன் கேட்டுக் கண்ணீர் விட்ட
அத்தகு புகழைநி றுத்தியே சென்றவர்க்
காக வருந்தல் தகாததே. ஆனால்,
நனவி னன்றிக் கனவினு மவர்பிரி
வகலா தென்னுளம் புகலாக் கொண்டது.

வி-ன்: மனத்தை யடக்க வலியிலாக் கோழைத்
தனத்துக் கடிமையாத் தான்வாழ் குவது
வீரருக் கழகல. காரம தில்லாப்
படிமிள காய்போற் படுமற மில்லாப்
பல்லா யிரவ ரிருப்பது நில்லாக்
கரைபோன் றதுவே, விரைவலர்க் கெளிதா
இப்படை யுண்டிங் கிருத்தல் ஒப்படைத்
திட்டநம் இறைவன் திட்டமும் பழுதாம்.
தாயகங் காக்க மேயவிப் பெரும்பணி
சுற்றமும் நட்பும் மற்றவெப் பொருளும்
பற்றற வுள்ளவர் பெற்றநற் பேறும்.
மனத்தினுந் தன்னலம் நினைத்தில ராகித்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளராம்
அருளுளங் கொண்ட அறவோர் செய்யும்
பொருளுடை யவராம் பொருபடை மறவர்

என்பதை யுணர்ந்து துன்பதை மறந்து
மன்பதை காக்கும் மன்னவன் உறுப்பா
அமைகுவை யஃதே சமைவுறு கடனும்.
வே-ன்: மனத்தெளி வுற்றனன் இனித்தமி ழகமே
என்னுடல் என்னுயிர் என்பொரு ளெல்லாம்.
வான்மதி முகத்து மேன்மலை யத்தியின்
அரும்பெறற் குழவி பெரும்பொருட் செல்வி
கற்று தரல்போற் கரவா தளிக்கும்
வற்று வளமலி வானி யென்னும்
வருபுன லாட்டியின் மருங்கினிற் பொலியும்
சத்திய மங்க லத்தி லிருந்து,
வானியின் பெரியவ ளானபொற் செல்வி
அலைகடல் வற்றினும் வற்று மலிவளம்
உடையாள் கண்கவர் நடையாள் மண்கவர்
தமிழக மோம்பும் அமிழ்தப் பெருங்குடம்
பாவலர் நாப்பொலி காவிரிப் பாவையின்
தென்கரை யதனில் நன்கனம் அமைந்த
இப்பெருங் கட்டூர் வந்து தப்பற
ஆறு மாத மாகியும் மாறுறு
என்மனக் கவலை உன்பொரு ளுரையால்
இன்றுடன் ஒழிந்தது வென்றுயர் வில்லவ!
உலகிய லறியா விலகிய அறிவால்
ஓயாக் கவலையில் தோயாக் கிடந்த
கோழையை வீறு வாழ வைத்த
ஈறிலா வுதவிக் கென்னகைம்
மாறியான் செய்வேன் ஆறறி வோயே. 1
வி-ன்: பாரதோ ஈங்குநம் பேரணித் தலைவர்
வருகிறார்.
அணித்: என்னே இருவருந் தனியாய்!
இரு: வணக்கம்.
வி-ன்: இக் காவலின் பிணக்கறு பெருமையைப்
பற்றிப் பேசினோம் மற்றொன்று மில்லை.
அணித்: ஒன்னலர் ஏதாவ தின்னல்செய் தனரா?

வே-ன்: இங்குயாம் வந்தபின் கங்கர்க ளெவரும்
பூவிரி தருகரை புனல்வள மல்கும்
காவிரி யதன்வட கரையின் பக்கமே
ஒருவர் கூட வருவதே இல்லை.
ஆடு மாடுகள் கூடநீர் குடிக்க
விடுவ தில்லை வடகரைப் பக்கம்,

அணித்: இரும்படிக் கும்மிடத் தீக்கென்ன வேலை?
கரும்பு கட்டோ டிருந்தால் எறும்பங்
கெதற்கா வருகிற ததற்கென பித்தா!

வி-ன்: வந்தால் பொன்னிக்குச் சொந்தமாப் போவர்.

அணித்: ஆதலாற் ருனிங்கு போதுவ தில்லை;
முன்னரே இப்படித் துன்னருங் காவலை
இங்கேற் படுத்தி யிருந்தால் கங்கர்
கனவினுங் கொங்கினை நினைத்திருப் பாரோ?
பன்முறை நடந்த வன்முறைப் போரால்]
எத்தனை யுயிர்கள் எத்தனை பொருள்கள்
கனல்படு வைபோல் முனைபட் டொழிந்தன!

வே-ன்: ஈங்கிது பற்றியே நாங்களும் பேசினேம்.

அணித்: இப்பொழு தாயினும் மன்னவன் இப்படிச்
செய்தது தமிழர் எய்துநற் பேறே.
ஒன்னலர் தமிழகந் தன்னைக் கனவினும்
நினைத்திடா வகையின் முனைப்பொடெப் போதும்
தூக்கினைக் காக்கும் தொடைபோல்
காக்குதல் நுந்தம் மாக்கட னுமே. 2

வி-ன்: ஆங்ஙன மேகாத் திடுவேரும் பாங்காய்.

அணித்: தாயகங் காத்தலோ டேயமை யாது
நாட்டு வளத்தினை ஈட்டுறு தலையும்
கடனுக் கொள்ளுதல் அடையலர் ஊக்கம்
ஒருவிடச் செய்யும் கருவிய தாகும்.
ஆக்களே கொங்கின் மாக்கொழு செல்வம்
'ஆகெழு கொங்'கென ஆன்ருேர் நாகெழு
சிறப்புரை தேர்ந்து முறைப்பட ஆக்களைக்
குறைபா டின்றி நிறைபட ஓம்பல்

கட்டூர் வாழ்வோர்க் கொட்டிய கடனும்.
ஆகுதல் ஆவே. ஆகுறு செல்வம்
மாடெனப் படுதல், ஈடறு செல்வம்
மாடென முன்னோர் நாடிய பொருளாம்.
போர்வகை யேழில் ஆவினங் கோடலும்
மீட்டலு மேமுதல் நாட்டிய தாகையால்
ஆக்களை யோம்பலின் மாக்கடன் விளங்கும்.

வே-ன்; நேரலர் வெருவுறூஉம் பேரணித் தலைவ!
கண்ணிணைக் காந்திடும் இமைபோல் திண்ணிதின்
பகையுருக் காத்தலோ டிகவா நிரையையும்
காத்து வருதலோ டமையா தாத்தரும்
பாலொடு முதலிய நாலையுங் கொடுத்து
வேண்டுவ கொண்டு காண்டகு முறையில்
ஒருகுறை யின்றி வருகிறோம் வாழ்ந்தே.

அணித்: அரசுக்குப் பொறையாய் வாழ்தல் பரிசல
குடை நிழல் வாழுங் குடிகட் கெல்லாம்,
வீரரும் அதனில் விலக்குறு வாரலர்.

வி-ன்: இற்துடன் அமைந்திலேம் புத்தணித் தலைவ!
காட்டினை யழித்து மேட்டினைக் குழித்து
நடுநிலை யாளர்போற் படுசமன் ஆக்கி
உழுதுபண் படுத்துக் கழனியாச் செய்து
பொன்னியின் காலால் நன்னெலுங் கரும்பும்
மஞ்சளும் வாழையும் மிஞ்சுற விளைத்து
மொழிகுறு வள்ளுவர் உழவிலக் கணப்படி
வாழ்ந்து வருகிறோம்.

அணித்: தீந்தமிழ் மறவீர்!
மெச்சினே னுங்கள் இச்செயற் றிறனை
கரும்படை நறையூர்ப் பெரும்படைத் தலைவன்
பழையன் தலைமையிற் கெழுதக வமைந்த
காப்புடை மறவீர் யாப்புடன் நன்கு
பொச்சாப் பின்றியெப் பொழுதும்
எச்சரிக் கையா யிருந்திடு வீரே

—o—

## மூன்ருங்களம் இரண்டாங்காட்சி (13)

இடம்: வயலும் காடும் மலையும் காலம்: முற்பகல்

நடிகர்; பழையன்

பழையன் தனியாக உலவுதல்

மருதம்

(நேரிசை யாசிரியப்பா)

பழை: (குதிரை யில்)
என்மன மென்ன என்குறிப் பின்படி
சென்மெனச் செல்லாச் செல்லுமென் பாடலம்!
என்பெரு மைக்கோர் மன்பெருஞ் சான்ரு
என்புகழ் உன்புகழ் உன்புகழ் என்புகழ்
என்பதொன் றின்றி மன்பதை போற்றும்
அந்நிலை அடைந்தோம் இந்நிலை வாழ்க!
ஐயறி வென்ப அஃதுநின் மாட்டுப்
பொய்யுரை யாகும் மெய்யறி வுடையாய்!
தலைவி தோழி நிலையினி லுள்ள
இன்றுநா மிருவருஞ் சென்றொரு முகமா
இயற்கை யழகைச் செயற்கையின் றிறத்தால்
கண்டுபே ரின்பம் கொண்டுமை வுறலாம்.
ஆற்றுக் காலெனச் சேற்றுக் கால்செலீஇ
நல்லுண வாக்கித் தொல்லுல கூட்டி
மக்களை யினிதுவாழ் விக்குமிக் கால்வாய்
நீர்வீழ் தூம்பின் பேரொலி, போர்வீழ்
மறவரை யூக்கும் பறையொலி யென்ன
விற்போர் போல நெற்போர் செய்ய
எழுங்கள் பொருபடை எடுங்கள் உழுங்கள்
அடுங்கள் முடியை நடுங்கள் முதிர
அறுங்கள் களத்தில் நொறுங்க அடித்தே
இடுங்கள் போரெனக் கடும்புடன் உழவரை
ஊக்குதல் போலுள தன்றே நோக்கின்!
நாற்று நடுநலார் நடுக்குறச் சேற்று
மடைவாழ் நீர்நாய் பெடைநீர்க் கோழியைக்

கவ்விடத் தப்பியே அவ்வயல் தாவஅந்
நாயொடு வாளையும் பாயுதல், களத்திடை
நேரலர் நடுங்கவொர் வீரன் மற்றொரு
வீரனைத் துரத்தக் காரெனக் களிறும்
வெருவி யோடுதல் பொருவு மல்லவோ ?
பரிவால் போன்று விரியா நின்ற
நாருப் பூவினைப் பேருப் பெற்றதால்
கானுறு கழையென வானுற வளர்ந்து
நீட மகிழ்ந்தே ஆடி யசைந்து
கடுவளி தாக்க இடைபட ஒடிந்து
தன்னிலை குலைந்தவிக் கன்னலும், பொன்னென
முற்றி மணிகளைப் பெற்றும் நிமிராத்
தன்றலை தாழ்த்தாங் கொன்றிய பேற்றினுக்
குவவாத் தரையில் தவவாக் கிடக்குமிச்
செந்நெலும் இயன்ற இந்நிலை நோக்கின்,
காணிமேல் முந்திரி காணின், ஏணிமேல்
ஏறிக் குதிப்பர் கயவர், நூறுநூ
றுயிரந் தானுறழ்ந் தடுக்கிய தாய
சங்கம் விந்தம் குமுதம் தாமரை
வெங்கு விளையாடு நெய்தல் வெள்ளமென்
றெண்ணுற நின்றவவ் வெண்ணென்மே லிவ்வெண்
பெறினுந் தலைமீக் குறுர்மேன் மக்கள்
எனுமற வுரையை மனமுற நமக்குத்
தெற்றெனக் காட்டா நிற்பன வன்றோ !
ஞாலங் கருதிடு மேலவர் போலக்
காலங் கருதிக் கரையினி லிருக்கும்
கொக்கர சியலைந மக்கறி வுறுத்தல்
எத்தகு காட்சி ! இத்தரை மன்னர்
கொலையிற் கொடியரை யொறுத்தற நிலைபெறச்
செய்யுதல் போல வையெயிற் றரிவையர்
களைகளைந் திடுமக் காட்சி
உளநிறைந் தின்பம் ஊட்டுது மன்றே.

என்னதோ இன்னிசை துன்னியே காண்குவம்.

## பள்ளு

(சிந்து)

உழவர்: எந்தமிழ்ப்பண் பாடுறநாட் காலே யெழுவோம்-புலத்
தேரினுற் பழந்தமிழ் வயலேயுழு வோம்
செந்தமிழ்ச்சம் பாவிதையைத் தெள்ளி யெடுப்போம்-நறுந்
தீந்தொடையாப் பாருமணிச் சேற்றில் நடுவோம்
முந்துறநன் னீர்பாய்ச்சிக் காத்து வருவோம்-அயல்
மொழிச்சொற் களைகளைக் களைந்தெறிகு வோம்
வந்தவிருந் தாளிகட்குச் சிந்தை மகிழ-நால்
வகைச்செய்யு ளாந்தமிழ்ச்சோ றுக்கிப்படைப் போம்.

(ஆ-அடி)

பழை: அழகிய பாடல்! அழகிய அப்பா
டலினுக் கேற்ற நலமிகும் ஆடல்!
தந்தொழில் தம்மைத் தமிழுடன் கூட்டி
எந்தமிழ் மக்கள் இயல்பிணை விளக்கித்
தொழில்படு மயர்ச்சி ஒழிபடும் பொருட்டுப்
பல்பொருட் சுவைபடப் பாடி யாடிடும்
மல்பொரு தடந்தோள் வண்மையோ ரிவரால்
அன்றே மன்னவன் வென்றி பெறுவது?
மன்னனு லன்றே மன்பதை யுலகம்
இன்ன லின்றி இனிதுவாழ் குவது?
பல்வகைத் தொழில்செய் நல்வகை யோரும்
எழுதெழில் மாடத் தினிதிருப் போரும்
உழுதொழில் செய்யுமிவ் வுழவர்கை மடங்கின்
பசிப்பிணி வருத்த அசைப்பட வருந்தி
நிலைதிரிந் துயர்நிலை குலைகுவ ரல்லரோ?
உழவின் சிறப்பே சிறப்பு; விழைவுடன்
உழவினைப் போற்றற் குரியரே மற்றவர்.
உண்டி முதற்றே உலகின் பிண்டம்
எனுமுரை யதனுக் கினவுரை யுண்டோ?
ஈங்குயாம் கண்ட நீங்கருங் காட்சிகள்
உலகியல் முறையை நலமுற ஊட்டி

உள்ளத் துணர்வைக் கிள்ளியென் உளத்தைக்
களிப்புறச் செய்தன. திளைப்புறு பாடலம்!
தாயகத் தெல்லை கடந்து மேயினம்
பகைப்புலம் எனினும் திகைப்புறு கில்லேன்
உடனீ யிருக்க உரமுடன்
இடரெனக் குண்டோ கடனறி வோயே. 2

## முல்லை

கயல்படு பழன வயல்படு வளமார்
மருதம் பிறக்கிட மரனுங் கொடியும்
செடியும் பூத்துக் கடிகமழ் முல்லை
நிலத்திணைக் குறுகினம்; நலத்தகக் கனிந்த
நறுந்தீங் கனியைக் குறுந்தொடி நெடுங்கைக்
கருங்குழல் வெண்பல் சுருங்கிடைப் பெருங்கண்
மெல்லியல் மேனி நல்லார் கொள்ள
அக்கொழு கொம்பர் மிக்கவன் போடு
வளைந்து கொடுத்திடுங் காட்சி, உளந்திகழ்
நெய்யணி காண்பான் போந்த தையலர்
கையினி லின்ற மையணி குழவியை
உளத்துறு மன்பால் உள்ளம்
களித்துவந் தத்தாய் அளிப்பது போன்மே. 3

## குறிஞ்சி

முல்லையை நீங்கி ஒல்லெனப் போந்தோம்.
நானில மதனில் மேனில மான
ஒப்புறு வளமலி இப்பூங் குறிஞ்சியின்
காண்போர் கண்ணையுங் கருத்தையும் கவ்வும்
மாண்புறு காட்சி மனக்கொளற் குரித்தோ!
வானுற ஓங்கிய மரங்களும், மரங்களில்
தானுறு காதற் றலைவனைத் தழூஉமடக்
கொடியெனத் தழுவிப் படர்தரு கொடிகளும்,
பூத்துப் பொலியும் பூவையர் குழலெனப்
பூத்துப் பொலியும் பொலங்குழைச் செடிகளும்,
வருகுநர் இருக்கத் தரையினில் விரித்த

பசும்பொற் கம்பளம் போலப் படர்தந்
தசும்புறத் தழைத்தே அலர்தரு புற்களும்,
பூங்கொடி யனையார் பாங்குட னுடுத்த
பாடமைந் தெழிலுறு பசும்பட் டாடையின்
இடையிடை யொளிறுபொன் னிழையென அடர்தரும்
இலையிடைக் கதிரொளி பொலிவுங் காணத்
தென்கால் கவரி வீச அன்பால்
மலர்முகங் காட்டி இலகுகைக் கிளையால்
பூவுங் கனியும் ஆவலோ டேந்தி
வருகவென் றேநமை வரவேற் றிடுமிச்
சோலைசூழ் மலையின் பாலமை காட்சியைப்
பலபடப் புனைந்திடும் புலமையெற் கில்லை.
வரிசையி னீயும் பரிசிலைப் பெற்றிடச்
செல்வரை நாடிச் செல்லுறும் வழியில்
பல்வரை கடந்து பகல்தெற வயர்ந்து
சில்வளை விறலியொடு செலவொழிந் திருந்தி
யாழிசைப் பாணரின் ஏழிசைப் பாடலைக்
கேட்டுக் கேட்டு நாட்டொறும் பயின்ற
கிள்ளையும் பூவையும் எள்ளறு குயிலும்
பாடுமின் னிசையும், ஆடிய விறலியின்
ஆடலைக் கண்டு கூடவே பயின்ற
மயிலின் ஆடலும் மயக்கியென் னுளத்தைக்
கொள்ளை கொண்டன விள்ளுவன் கொல்லோ!
பிடியுங் கன்றும் உடனுணக் களிறு
யாக்கிளை யொடித்து வாக்குமக் காட்சி
நோக்குவோ ருளத்தை யீர்க்குமொன் றன்றே!
பண்போற் கிளவியர் கண்போற் பிறழும்
மானதன் குட்டியைக் கானிழல் நடத்திச்
செல்லுமக் காட்சி சொல்லுதற் குரித்தோ!
தாயுந் தந்தையு மாயவக் குரங்குகள்
முன்பின் கால்களை வன்புறப் பற்றி
மகவினை யாட்டி அகமகிழ் காட்சி
மக்கள்பால் அன்பு மிக்கிடச் செய்ம்மே,
சுரும்புமொய் குழலார் கரும்பன மென்றேன்

ஆடைதென் காவின் ஆடுதல் போல
வீழ்தரு மருவி ஆழ்தரு பன்னிறத்
தோற்றம்வான் வில்லின் தோற்றம தாமே.
வளமலி யிம்மலைக் காட்சியென் உளமதைக்
களித்திடச் செய்தது வெளிப்பட வினிதே.
மருதமும் முல்லையும் கருமுகில் மேயும்
வானுயர் தரநிமிர் கானுறு குறிஞ்சியும்
காட்டிய காட்சியி னிட்டம துளத்தை
விட்டக லாது பட்டது பட்ட
உள்ளம துவகையாற் பொள்ளென வீங்கி
அடங்கா மகிழ்ச்சிக் கிடங்கா ஞது
துன்புறு கின்றதத் துன்பம்
இன்புற நமக்கீங் கேதுவா யினவே.

—: o :—

## மூன்ருங்களம் மூன்ருங்காட்சி (14)

இடம்: தென்பாலிநகர்ப் புறச்சோலை காலம்: நண்பகல்

நடிகர்: காமஞ்சரி, மாலதி, பழையன்.

காமஞ்சரியும் பழையனும் எதிர்ப்படல்

(நேரிசை யாசிரியப்பா)

காமஞ்: அரும்பவிழ் தருந்தொடை விரும்புபு சுரும்பர்
கருங்குழல் வெண்பல் பெருங்கட் சிற்றிடை
பாலெனு மின்சொல் மாலதி நங்காய்!
பூத்துக் குலுங்கும் பொலிதரு செடிகளும்
காய்த்துக் குலுங்கும் கவினுறு மரங்களும்
அக்கனி மரங்களைச் சிக்கெனப் பிடித்துப்
பற்றிப் படர்தரு சிற்றிலைக் கொடிகளும்
கட்டுக் காவ லின்றி முட்டறத்
தன்னந் தனியா அன்னதன் படியே
தென்றலின் ஆடி மன்றலிற் கூடி

இன்புற் றிருக்கும் இயல்பிணை நோக்கின்
அன்புற் றவரெனும் அன்னைதந் தையரால்
இற்செறிப் புற்றுக் கற்செறி முளைபோல்
உரிமையொன் றின்றி அரிதுயர் வாழும்
நந்நிலை எத்தகு புன்னிலை!

மாலதி: அன்னாய்!
ஓரறி வுயிரோ டாறறி வுடைய
பாரினில் உயர்ப்பிறப் போரெனக் கூறும்
நந்தமை ஒப்பிடல் எந்தவா றெக்கும்?

காமஞ்: ஆறறி வுயிராம் ஆறறி வுயிர்அவ்
வோரறி வுயிரேன் ஈரறி வுயிராம்
நத்தையைப் பாரதற் கெத்தனை யுரிமை!
தடுப்பவர் யாரதை? கிடக்கமூ வறிவுயிர்
ஆகுமிவ் வெறும்பும், பாகென இன்னிசை
பாடுநா லறிவுயிர் கூடுமிச் சுரும்பும்,
கொள்ளுமை யறிவுடைக் கிள்ளையும், உன்றன்
விழிபோல் துள்ளுங் கழிமகிழ் மானும்
உரிமையோ டுலவித் திரிகின்ற வல்லவா?
ஊர்ந்து திரிந்து சேர்ந்து வாழ்வதை
யார்தடுக் கின்றார் யார்கெடுக் கின்றார்?

மாலதி: காலையும் மாலையும் சோலையில் மலர்பூங்
கொத்தென மலர்ந்து முத்தென நகைத்துச்
சுரும்பெனக் காண்போர் விரும்பி நோக்கி
நெஞ்சுவந் திடுகா மஞ்சரி நங்காய்!
கொழுகொம் பேற எழுதரு பருவப்
பூங்கொடி யனையாய்! ஈங்கிவை யெல்லாம்
செய்வன செய்து தவிர்வன தவிர்ந்து
மெய்வகை பொய்வகை உய்வகை நாடி
அறவழிப் பட்டு மறவழி நீத்து
மக்களைப் போலத் தக்கவற் றின்கீழ்ப்
பட்டுமே வாழும் சட்டம தின்றிச்
செயகையொன் றின்றி இயற்கைய தாமனம்
போன போக்கில் ஆனது செய்து
வாழ்பவை. எனவே, யாழ்குழல் கசக்கும்

மொழியாய்! இக்கருத் தொழியாய், வாவிஊ
யாடுவோம் இன்பங் கூடுவோம் அன்ஞய்!

காமஞ்; வேலும் வாளும் கோலுங் கொண்டு
காதொடு பொருங்கண் மாலதி! ஏதடி
ஆனது கூறுவள் போனகை யாடி
என்பெயர் விளக்கிஊ,

மாலதி: உன்பெயர் விளக்கவே
உள்ளேன் என்பதை விள்ளவும் வேண்டுமோ!
எதோநகை யென்ருய் அதோஅக் கொம்பைப்
பற்றிப் படர்ந்துள கற்றைக் கொடிதஊச்
சுட்டிக் கூறினேன் மட்டவிழ் குழலாய்!
தப்பா நிஊக்கலெ.

காமஞ்: தப்பிதி லென்ன.
எப்பொழு துமேநீ இப்படித் தானே
நகைச்சுவை யோடு பேசுதல். மிகச்சுவை
தருவதில் நகைச்சுவை ஒருபொரு ளன்ருே?
வாவிஊ யாடலாம்.

மாலதி: காவியங் கண்ணி!
பூக்கொய் தாடி மாக்களி கூரலாம்.
இம்முகை முல்லையுன் செம்முகச் செப்பின்
அகப்படு முத்தை நகைக்கிற தன்ருே!

காமஞ்! ஏனிம் மல்லிகை தானுன் பல்லுக்
கொப்புமை யிலெயோ!

மாலதி: ஒப்பிலா மஞ்சரி!
விரைசெறி இத்தா மரைமலர் உன்றன்
ஒளிமுகச் செவ்விக் குடைதந் தளியுறின்
எள்ளூறு மென்று வள்ளிதழ் குவிந்து
கண்ணீர் வடிக்குங் காட்சியை எண்ணின்
வலியவர்க் கண்டு மெலியவ ருள்ளம்
தளர்குவ ரென்பது விளங்குறு தன்ருே!

காமஞ்: உன்சொல் வன்மைக் கென்சொல உவமை!
சேப்புடை யுடுத்த பூப்புடை யவர்போல்
தோன்றுமம் முருக்கின் ஆன்றவொவ் வொன்றுமுன்

செவ்விதழ்க் குண்மையில் ஒவ்வுறு மாயின்
ஆடமைத் தோளியர் கூடிநின் றெருங்கு
சிரிப்பது போலுமன் றேவன் முருக்கு !

மாலதி: மைக்கருங் கண்ணி! இக்கனிக் கோவை
அத்தகு உவமை ஒத்துள தன்றோ?

காமஞ்: அமைவுடன் பொருந்திய உவமை உவமை!
மாழையுண் கண்ணியித் தாழைவீ ழூசலில்
ஆடுகம் எங்கே பாடொரு பாட்டு !

(கலித்தாழிசை)

மாலதி: நீரார் நிறைசால்போல் நின்று நிலம்புரக்கும்
பேரா றுகள்தோன் றிப் பேணிக் குடிவளர்க்கும்
காரார் பொழில்சூழ் கவின்மேன் மலைபாடிச்
சீரார் திருவூசல் ஆடாமோ தோழி !
திறலார்தோட் கங்கர்திறம் பாடாமோ தோழி!

2 மின்னி நெடுவான் பொழியா விடுங்காலும்
மன்னு மலைதோன்றி வந்து வளஞ்செய்யும்
பொன்னி வளமார்கீழ்ப் பூவானி தாம்பாடிச்
சின்னஞ் சிறுவூசல் ஆடாமோ தோழி!
செங்கோன்மைக் கங்கர்திறம் பாடாமோ தோழி !

3 மஞ்சு தவழ்மாட கூடங்கள் வான்பொலியும்
அஞ்சி நிலைபே றறியாப் பழங்குடிவாழ்
தஞ்சமிகு தென்பாலி தலைக்காடு தாம்பாடிக்
கொஞ்சு திருவூசல் ஆடாமோ தோழி !
கோதில்லாக் கங்கர்திறம் பாடாமோ தோழி !

(ஆ—அடி)

காமஞ்: மஞ்செனக் கறுத்த அஞ்சி லோதி,
பாலினு மின்சொல் தோழி மாலதி!
மயிலியல் மங்காய் ! குயிலினு மினியநின்
குரலொடு குரலாய் மருவிய இன்னிசை,
உளங்கவர் பாடல் வளங்கெழு கங்கர்
மலையும் யாறும் கலைமலி நகருநின்
பாடலிற் பயின்று வாடிய உளத்தைத்

தெளிவுறச் செய்தன ஒளிவளர் கண்ணும் !
என்னதோ!

மாலதி: என்ன?

காமஞ்: என்னவோ அதோபார் !

மாலதி: யாணை !

காமஞ்: யாணையா !

மாலதி: ஆமாம் யாணைதான் !
நம்மையே நோக்கி வருகிறது,

காமஞ்: கைம்மா !

மாலதி: வெங்கரி யேதான் வருகிற திங்கெயே !

காமஞ்: என்னடி செய்வது முன்னமே கண்டிலம்.

மாலதி: இனியதைப் பேசியென் சினமிகு வெங்கரி
வந்து விட்டது, வந்தே விட்டது !

காமஞ்: ஐயோ மாலதி ! ஐயோ என்செய்கோம் !

மாலதி: வீறிட்டுக் கீழே வீழ்ந்துவிட் டததோ
ஏறிட்டுப் பாரு ! பீறிட்டுக் குருதி
கொட்டுகின் றதுவேல் பட்டு வீழ்ந்து
விட்ட து. வேலெறிந் திட்டவர் யாரோ!

காமஞ்: நல்ல வேளையாத் தப்பினோம் அல்லவோ !

மாலதி: ஆமாம் இல்லையேல் நாமிந் நேரம் !

காமஞ்: அக்களிற் றுக்கிரை யாகி யிருப்போம்.

மாலதி: தக்க வேளையிற் புக்கிதைக் கொன்றுந
மக்குயி ரீந்த தக்கோன் யாரோ !

பழை : கொன்றவன் ஈதோ நின்றுளான் இளமான்
(வந்து) கன்றென வெருவி நின்றிடும் நல்லிர் !
யாரோ நீவிர் ஊரெது பேரென் ?

மாலதி: பக்கத் தூர்மலர் பறித்திட ஈங்கு
புக்கனம். தலைவ ! இக்கொடி யிடையென்
தலைவிகா மஞ்சரி, மலைநிகர் களிற்றைக்
கொன்றெமைக் காத்த வென்றிவேல் வீர !
செய்யாமற் செய்தவிப் பொய்யா உதவிக்
கென்னகைம் மாறுயாம் செய்கேம் !

பழை : மின்னிடை !
இக்கட்டி லுதவுதல் மிக்குற் றவர்கடன்

அன்றே? ஈங்கு நின்றே போதுக.
ஈதென் கடமை, மாதரீர் வருகிறேன்.
மாலதி: களிறு வரவுமக் காளையின் வரவும்
ஒளியு மிருளும்போல் ஒத்தன வல்லவோ!
பூநுதல் நங்காய்! வாநகர் செல்வோம்.
காமஞ்: செல்வோம் அந்தக் கொல்வேற் கையன்
அதற்குளே ஏனோ விதுக்கெனச் சென்றனன்.
மாலதி: உழுதொழில் முடிந்தால் கழனியில் வேலையென்?
காமஞ்: அதுசரி யின்ப மதுசொரி மொழியாய்!
ஊரும் பேரும் கூறினை ஊரும்
பேரும் வினவலை யாரவர் கூறுவர்?
மாலதி: எதற்கவை யறிதல் மதர்ப்படு கண்ணாய்!
காமஞ்: எதற்கவர் தெரிதல்?
மாலதி: பதைப்புறு வோரை
யாரெனத் தெரிதல் ஊரவர் வழக்காம்.
அங்ஙனம் வினவின ரன்றிச் செங்கனி
வாயினை! அவர்குறித் தாயதொன் றில்லை.
காமஞ்: ஒன்றிலை உதவிச் சென்றவர் தம்மை
யாரெனத் தெரிதல் கூறிய கடப்பா
டன்றோ உதவிட நின்றோர் தமக்கு?
மாசறு மாலா! ஊச லாடிய
உயிரினைக் காத்தோர் பெயரினைக் கூட
அறிய முயலா அறிவிலா நமைப்போல்
நன்றி கொன்றவர் உண்டோ?
மாலதி: சென்றதை
எண்ணுவ தாற்பயன் நண்ணிடு மோதான்!
காமஞ்: இல்லை மாலதி! நல்லவர் ஊரிய
இவுளியைப் பார்த்தனை! எவள வழகு!
பண்ணி வைத்த பாவையைப் போலக்
கண்ணுங் காதும் வண்ணமும் வடிவும்
கண்கவர் தோற்றம் எண்கவர் ஏற்றம்!
கட்டுடற் கேற்ற கட்டழ கன்றோ?
மாலதி: அழகு மட்டுமா அறிவுதான் என்ன?

காமஞ்: அழகுக் கேற்ற அறிவுடைப் பரிதான்.

மாலதி: அழகும் அறிவும் ஒழுகுறு பண்பும்
தலைவன் உளத்தொடு கலவிய உளமும்
ஒருங்கே அமைந்தவர் மருங்கே உள்ள
தாகையால் அப்பரி வாகையை வேலன்
வருகிறேன் எனுமுன் ஒருகல் பறந்தது.

காமஞ்: இல்லையேல் இன்னுமிங் கிருப்பார் இல்லை!

மாலதி: இருந்தாலு மிருப்பார் விருந்தா நின்கண்.

காமஞ்: உன்கண் காணுப் புன்கண் போலும்!

மாலதி: காணுக் கண்ணுல் மாணுப் பயனென்?
வாநகர் செல்வோம் பூநகு குழலி!

காமஞ்: சென்றவர் பின்னே சென்றவென் நெஞ்சை
விட்டுநான் எங்ஙனம் மட்டவிழ் குழலாய்!
வருகேன்? மற்றும் ஒருகால் அவர்தம்
கட்டழ கதனைக் காண்குற விட்டெனைச்
சென்றவென் கண்களும் நின்றியிங் கென்றே.

மாலதி: அன்னுய்! அவரும் உன்னெழி லதனை
நோக்கிய குறிப்பை நோக்கினேன் குறிப்பாய்.
உன்போ லவரும் நின்பாற் காதல்
கொள்ளுவ ரென்பதில் எள்ளள வையமில்.
எப்படி யேனும் கைப்பிடி யிடையாய்!
கண்ணுறக் கண்டு களிக்கவவ் வண்ணலும்
வருகுவர் திண்ணமுன் பருகுகட் டழகினைக்
காண்கென ஈங்கு காண்குறு கண்களை
விட்டே சென்றிருப் பாரதற் கட்டியில்.
கண்ணுறி னீங்குளம் நண்ணுமோ அவர்பின்?

காமஞ்: கண்ணெடு நெஞ்சறை போகிய வண்ண
உடல்கொடு செல்கம் ஒசிந்த
இடையுடை நங்காய்! எளிதுமன் னதற்கே.

—:0:—

## மூன்றாங்களம் நான்காங்காட்சி (15)

இடம்: மலைச்சாரற் சோலை காலம்: நண்பகல்

நடிகர்: பழையன் மட்டும்.

பழையன் காமஞ்சரிமேற் காதல் கொள்ளல்.

(நேரிசை யாசிரியப்பா)

பழை: (தனிமொழி)
எதற்கியான் அங்குநின் றிதற்குளே வந்தனன்
மழையா வந்தது? மழையென இருண்ட
நிழல்பொலி காவணத் துழையிள மயிலை
விட்டிரு கட்புலன் கெட்டவன் போல
எதிர்பா ராமல் அதரிடைப் பட்ட
அரும்பெரும் பொற்குவை, சுரும்பினம் ஈட்டாத்
தீஞ்சுவை நறுந்தேன், பூஞ்சுனை மலராச்
செந்தா மரைமலர், முந்தோர் கைப்படக்
கூட்டாக் கலவை, தீட்டா ஓவம்,
இந்நாள் இளமதி, செந்நாப் புலவர்
செய்யாச் செய்யுள், நெய்யாக் கலிங்கம்,
உண்ணா வமிழ்தம், பண்ணாப் படிவம்,
படராச் செழுங்கொடி, கடலிடைப் பிறவா
ஒளிமுத் தாரம், வளிபட் டாடா
நாகிளங் கொம்பு, போகறச் செய்யாச்
செம்பொற் பாவை, கொம்பிடைப் பழுக்கா
இன்சுவைத் தீங்கனி, பொன்சுவை யறியா
மின்மலி கட்டளை, தென்மலைப் பிறவா
இன்னிளந் தென்றல், இன்னுமென் னென்கோ!
விண்மணி யனையவென் கண்மணிப் பாவை
பெண்ணெனப் போந்தென் கண்ணினுட் புகுந்து
நெஞ்சிடை யமர்ந்துள அஞ்சி லோதியை
விட்டுவந் தேனெனப் பட்டறி வின்றி
இரங்கினன் மன்னே, மரங்கொல் ஒருவன்
நிழலை மறந்த ஏழைமை போல.
கண்ணைவிட் டகலாப் பெண்ணணங் கானவள்
கருமுகி லிடையொளி ஒருமுழு மதியென

இக்குள நீர்மிசை மிக்கடர் சைவலத்
தருகலர் செந்தா மரைமல ரதனின்
பாடல ராம்ப லோடுதிர் குமிழும்,
நீலமும் அவற்றிரு பாலொளிர் வள்ளையும்
விரைபடு வள்ளைமே லிருகயல் பாயக்
கொடுஞ்சிலை யிரண்டு விடுங்கணை யொடுவில்
பாயவச் சேல்கள்மேல் மேயசெவ் வாம்பலின்
விரியித ழிடையமை நிரல்படு முத்தமும்
ஆயவை யேயச் சேயிழை யாகக்
கண்டேன் ஒருமுறை கண்டதும் எழின்மோ
துண்டேன் காதல் கொண்டேன் கொண்டதும்
விண்டேன் ஏனோ மீண்டும் கண்டிட
வேட்குதென் னுளமும் வாட்கணும், ஆஇவ்
வொண்ணுதற் கோஒ உடைந்தது ஞாட்பினுள்
நண்ணுரு முட்குமென் எண்ணருந் திறலே!
உடையுளம் படவவண் அடைகுவம். ஆனால்,
இன்னுமங் கிருப்பளோ நன்னுதல்! இருக்கினும்
என்னகா ரணங்கொடு துன்னுதல் இம்முறை?
அன்றியும் ஆங்கியாம் சென்றவள் இன்றெனில்
புறங்கொடுக் குநர்போல் வறுங்களங் கண்டு
திரும்புதல் என்னுளம் விரும்புத லொன்றோ!
என்னரும் பாடலம்! இன்னுஞ் சிலநொடி
நின்றாங் கிருக்கின் நன்றாங் கென்றன்
கண்ணு மனமும் ஒண்ணுதல் அழகைக்
கண்டு களித்துக் கொண்டுவந் திருக்கும்
காட்டு காட்டெனக் கேட்டெனை வருத்தா.
அன்னவள் உள்ளம் என்னவோ அறியேன்.
நோக்கெதிர் நோக்காள் நோக்கி நிலனை
நோக்காக் காலெனை நோக்கி நக்கனள்.
நுதல்முத் தரும்பப் புதுமைப் பெண்ணவள்
நின்றதன் குறிப்பு நன்றதே யாகும்.
பேருரைத் தவளவ் வூருரைக் கில்லள்
பக்கத் தூரெனச் சிக்கனஞ் செய்தனள்,
தலைவி தோழி என்றதால், விலைமதிப்

பில்லா அணிகளும் சொல்லா நிற்கும்
உலகறி செல்வன் தலைமகள் என்பதை.
யாருமே சொல்வர் ஊரினைப் பேர்சொலின்.
காமஞ் சரியெனுங் காமஞ் சரியைக்
கண்டு முகர்ந்து கொண்டின் புறுவேன்.
முயலுவோம் நாளை. முயலின்
கயலிய லுண்கணைக் காணுத லெளிதே.

—: o :—

மூன்றுங்களம் ஐந்தாங்காட்சி (16)

இடம்: தென்பாலி அரண்மனை காலம்: மாலை

நடிகர்: காமஞ்சரி, மாலதி, செவிலி.

காமஞ்சரி பழையன்மேற் காதல் கொள்ளல்.

(நேரிசை யாசிரியப்பா)

காமஞ்: என்னடி மாலதி! சொன்னதைச் சொல்லும்
கிள்ளைபோற் பேசிக் கொள்ளுகின் றனையே
அன்னவர் ஊர்பேர் இன்ன வென்று
கேளா தவரை வாளா வந்து
கெடுத்தனை யின்பம் கொடுத்தனை துன்பம்
படுத்தெனக் கையை அடுத்தவோர் மானைப்
பிடித்திடா தோடென விடுத்தவர் போல,
மட்டவிழ்.குழலாய்! சட்டென நம்மெதிர்ப்
பட்டவர் தம்மை விட்டுமே வந்து
கெட்டனம் துயரிற் பட்டனம்.

மாலதி: அன்னுய்! 6
வருந்தலை யந்தத் திருந்திலை வேலோன்
வருவர்கட் டாயம் ஒருவர்பட் டேநம்
பேர்தனைக் கேட்டால் ஊர்தனைக் காட்டா
விடுவரோ மறந்து விடுவரோ நம்மை!

காமஞ்: இலையவர் ஈங்குற விலையெனில் நானும்
எப்படி வாழ்வேன் செப்படி உய்யும்

வழியிணை யென்றன் விழியிணை யிரவில்
துயில்படா திருந்தே அயிலென வருத்தும்
நெஞ்சறை போகிய வஞ்சியென் செய்கேன்.
எண்ணமும் செயலும் கண்ணறை போகியான்
போலியங் காமல் மாலுற வதனுல்
பசித்த லின்மையாற் புசித்தலு மிலனுய்
மான்படு வலையில் நான்படு துயரம்
நோயறி கில்லாத் தாயறி கில்லாள்
கட்டுங் கழங்கும் பட்டு வெறியென
வேலனை வினவி மேலுமென் துயரை
மிகுவிக் கின்றனள் நகுவிக் கின்றனர்
ஊரவர் களவுக்கி யாரவ ரென்றே.

மாலதி: பெருமதி முகத்தாய்! சிறுமதி யகத்தேன்
ஒருசிறி தேனும் வருமெதிர் நிகழ்வை
எண்ணிலா திப்படிப் பண்ணினேன் பொறுப்பாய்.
களிறதன் அச்சமே காரணம் வளியிடைப்
பட்ட மஞ்ஞை ஓர்க்குமோ கட்டினை?
அன்னை வருகிருள்.

செவிலி: என்னருங் கண்ணே!
என்னடா உடம்புக் கென்னிடம் கூறிடா
ஒன்றுனக் கென்ன? அன்றியுன் அன்னை
சிடுசிடுத் தாளோ விடுவிடு வேறென்?
கனவில் தீயன கண்டஞ் சினையோ?
நினைவில் உள்ளதென் அணைக்கொளிக் குவதோ?

காமஞ்: ஒன்று மில்லை என்றனுக் கன்னுய்.

செவிலி: பின்னெதற் காக எந்நே ரமுநீ
படுத்த படுக்கையா முடக்கிக் கிடக்கிருய்
ஒடித்த கொம்பின் படித்தே, கொஞ்சம்
பாலா கிலுங்குடி நாலுநா ளாச்சே
ஒருபிடி சோறுண் டருமலர்க் கொடியே!

காமஞ்: ஏம்மா சும்மா போம்மா வறிதே
அடிக்கடி வந்திப் படிக்கொடு நோய்போற்
குடிகுடி யென்று கெடுபிடி செய்கிருய்.
பித்தால் மற்செ.ாறி யத்தெரி யாதோ?

செவிலி: அன்னை யறிந்தால் என்னையென் நினைப்பாள் ?
இந்தா கண்ணே இதோபா ரிந்த
ஒருவா யேனும் பருகாய், இலையிப்
படியே யிருந்தால் உடம்பென் னுவது ?

காமஞ்: பசியிலை யென்றால் புசிபுசி யென்று
தடுத்திட மறுத்திப் படித்தொந் தரவு
செய்யிலப் புறமென் பொய்யுடல் காண்பாய்.

செவிலி: இனியுன் விருப்பம், எனயான் செய்வது !

(காமஞ்சரி போக)

மாலதி இங்குவா ! ஏலவார் குழலின்
நோயறி கில்லேன் நுவலவுஞ் செய்யாள்
ஞாயினு மறியாள். நீயறி யளவில்
உள்ளதை ஒளியேல் உள்ள படிசொல்.

மாலதி: அன்னாய் யானும் என்னது சொல்வேன்
கேட்கவுஞ் சொல்லாள் வேட்கையு மில்லாள்
உண்ணென் றிடில்வேப் பெண்ணெயைப் போல
முகத்தைச் சுளிக்கிறாள் என்னவோ அகத்துநோய்!
வளர்த்தகைத் தாய்க்கே ஒளித்திடு மன்னாள்
எனக்கா சொல்லுவள் மனக்கோ ளதனை ?

செவிலி: எதிர்ப்படு காட்சியால் அதர்ப்பட உள்ளம்
மீட்குத லறியாப் பூட்கைய ளாகித்
தன்னிலை யிழந்தனள் போலும் ! என்னிலை
மிகுத்தறி மாலா வகுத்துரை ஒளியேல்.

மாலதி: காவகத் தன்று மேவியொத் தாடிட
மேல்வரு களிற்றை வேல்கொடு வீழ்த்திச்
சென்றனன் ஒருவன் அன்று முதலாத்
தன்னிலை மாறினள் என்னருந் தலைவி.

செவிலி: ஊரெது பேரென் ?

மாலதி: ஊரும் பேரும்
கேட்டிலம் எம்மைக் கேட்டனன் தலைவி
பெயரினைச் சொன்னேன் பெயர்ந்தனன் வாளா.

செவிலி: வல்லவள் எனக்கு மகளாய்ப் பிறந்தனை
நல்லவள் உன்போல் நாட்டினில் யாருளர் !

மாலதி: குறிப்பொடு தலைவியை நோக்கியே நெறிப்படர்ந்
தனனென் அன்னாய் தலைவி
சினவே லவனகம் சென்றுபுக் கனளே.

—: o :—

மூன்றாங்களம் ஆறாங்காட்சி [17]

இடம்: தென்பாலி நாட்டு மலைச்சாரல் காலம்: விடியல்

நடிகர்: பழையன், கண்டோர், (ஒருவன்)

பழையன் குதிரை களவுபோதல்

(நேரிசை யாசிரியப்பா)

பழை: எங்கே என்னுயிர்ப் பாடலம் எங்கே?
எங்கே காணோம் எங்கே போனதோ!
ஓவென் னுயிரை ஆவெங்கு சென்றனை!
உயிரினைப் பிரிந்தீங் குடல்தனித் தியலுமோ!
நொடியெனைக் காணா விடினும் ஓவெனக்
கதறிவா வென்று பதறி யழைக்குவை!
அங்ஙனம் கதறினா னழைத்திட எங்ஙனம்
சென்றனை யந்தோ என்றனை விட்டே!
கட்டி யிருந்த கயிற்றொடு தொட்டுனைப்
பிடித்துச் சென்று கெடுத்தன ரென்னை.
என்னுயிர் போன்றநீ என்னுடன் இருக்க
அன்னவள் தன்னை யுன்னியென் கண்ணாற்
கண்டதால் வெறுப்புக் கொண்டெனை விட்டுச்
சென்றனை யோதுணை நின்றவென் னுயிரே!
அத்தியைப் பிரிந்த ஆதி மந்திபோல்
பித்தனைப் போலப் பிதற்றித் திரியென
விட்டெங்கு சென்றனை கட்டெழிற் பாடலம்!
இலையிலை பிரிந்து செலவிலை விட்டெனை
அப்படி யெனைவிட் டெப்படி யதுசெலும்!

விடுத்தெனையழவதைப் பிடித்துமே சென்றனர்.
என்னைப் பிரிந்து தன்னந் தனியே
எப்படி யுள்ளனை அப்பழுக் கில்லாய்!
யாரத னருகில் நேருறத் தக்கவர்?
பலவடிச் சுவடிதோ செலுகின்ற திவ்வழி.
ஓரா யிரவர் நேரா வரினும்
நோக்கா முன்னுயிர் போக்கா குவரே.
கள்வர்கைப் பட்டுக் கொள்வதுங் கூடுமோ!
கொண்டுசெல் லாவிடின் விண்டெனைச் செல்லா.
அப்படி யேயவர் கைப்படும் போது
வாளா அவர்க்கடி யாளா கும்மோ!
இடியெனக் கனையா திருக்குமோ பிடியென.
பிடிப்பதை யறியாப் படிக்கதை மயக்கிக்
கொடுசென் றனரக் கொடியவ ரந்தோ!
எங்கு தேடுவேன் எங்ஙனம் கூடுவேன்?
கண்ணே யினியென் கண்ணுற் காணவும்
கூடுங் கொல்லோ நாடறி பாடலம்!
கண்டால் உனைக்கைக் கொண்டவர் தம்மைத்
துண்டுதுண் டாக வெட்டிக் கண்ட
துண்டந் தூள்படத் துவைத்துன் காலால்
சாருப் பிழிந்து வேருச் சக்கையைக்
காற்றிற் பறக்கத் தூற்றி விடுவேன்.
ஆவென் பாடலம் மேவினை வாவா
எங்கு போயினை இங்குநின் றுடனே.
தெரிகிலேன் ஓகோ உருவெளித் தோற்றம்
போலும். மரங்காள்! ஆலுஞ் செடிகாள்!
கொடிகாள் கண்டிரோ உடையவென் உயிரை!
கட்கால் மலர்காள் புட்காள் விலங்குகாள்!
என்னுயிர்ப் பாடலம் தன்னைநீர் கண்டிரோ!
ஒருவருங் காணிரோவென் திருவை!
தூங்கினிர் போலும் பாங்குட னென்போல்.
என்னயான் செய்வேன் என்னுயிர்ப் பாடலம்!
உன்னைப் பிரிந்து தன்னந் தனியாய்க்

கல்லிலும் முள்ளிலும் அல்லிலும் பகலிலும்
அலைந்து திரிந்து நலிந்துடல் மெலிந்தேன்.
ஓயாக் கவலையால் வீயா துழல்வேன்
காதுக ளினிக்கக் கண்டுகண் களிக்க
மாதுயர் தாங்கா வருந்துள முவக்க
அதிர்வாக் கனைத்தென் எதிர்வா ராயோ !

ஒரு: என்னையா இப்படி என்னென வோசொலிக்
கொண்டுசெல் கின்றீர் ? தண்டாப் பெருந்துயர்
யாதோ இன்னென ஓதீர்.

பழை: ஐயா !
என்னெனப் பகர்வேன் என்னருந் துயரை !

ஒரு: மனத்துறு துயரை இனைத்தெனப் பிறர்க்குப்
புகன்றிடின் மனத்தைவிட் டகன்றிடு மத்துயர்.
மண்டிய துயரென் ? பெண்டு பிள்ளையைப்
பிரிந்தவர் போல வருந்து கின்றனிர்.
உள்ளதை இற்றென விள்ளுக ஐய.

பழை: பெண்டுபிள் ளையினுங் கொண்டபே ரன்புக்
குரியவென் ஆருயிர்ப் பரியினை யாரோ
திருடிச் சென்றனர் : குருடர்போல் தனித்துச்
செலவிய லாது நிலைதரி யாது
காடு மேடெலாந் தேடித் திரிகிறேன்.

ஒரு: இப்படித் திரிந்தால் எப்படி யதனை
அடைகுதல் கூடும் ? கொடியவக் கள்வர்
கொண்டஅப் பரியைக் கொண்டு வந்து
கொடுப்பரோ தாமே ? அடுப்பது கேண்மோ
முன்பா லதோஉள தென்பாலி மாநகர்
அப்பெயர் கொண்ட இப்பெரு நாட்டின்
தலைநகர் இதனை நலமுடன் ஆளும்
தலைவன் நல்லவன் மலையன் என்பான்
சீரியல் கங்கப் பேரர சதனுக்
குட்பட் டவனருட் கட்பட் டவன்நற்
றுயினுஞ் சால மேயவன் போடு
குடிகாக் தரசின் முடிகாத் திடுவோன்

பகைவரே யுறினும் பகைபா ராட்டா
தன்புடன் வரவேற் றின்புற உதவும்
கடப்பாட் டாளன் அடற்போர்த் தோளன்.
அன்னவன் பாற்செலின் உன்னரும் பரியை
மீட்டுத் தருவன் தீட்டுவை வேலோய்!
செல்லுக அவன்பால் செல்லுநின் துயரம்.

பழை: அப்படி யேசெல் கின்றேன் இப்படிக்
கைப்பட உதவிய இப்பெரு முதவிக்
கென்னகைம் மாறுயான் செய்கேன் என்னுளங்
கனிந்த நன்றி.

ஒரு: புனைந்தபொற் கழலோய்!
வருகிறேன். (போக)

பழை: அவனே பொருபகைக் கங்க
நாட்டினைச் சேர்ந்தவன் மாட்டியான் குறையிரந்
தெப்படிச் செல்வேன்? அப்படிச் செல்லினும்
இனிதெனை வரவேற் பானே. முனிவொடு
பகைபா ராட்டி மிகைசெய் வானே?
எப்படித் துணிகுவ தெப்படி யாயினும்
என்னுயிர்ப் பாடலம் தன்னை யடைவேன்.
இவ்வா ளிருக்க இவ்வா றெண்ணுதல்
பேடியர் செயலன் றேவவற் கூடி
என்பா டலத்தை எய்தத்
தென்பாலி ஈதோ செல்குவன் யானே!

—:0:—

மூன்றுங்களம் ஏழாங்காட்சி (18)

இடம்: தென்பாலி அரண்மனை காலம்: மாலை

நடிகர்: செவிலி, நற்றாய்.

செவிலி நற்றாயிடம் காமஞ்சரியின் காதல் கூறல்.

(நேரிசை யாசிரியப்பா)

செவி: அம்மா! நம்மகள் சும்மா ஏனோ
ஒருநோ யின்றிப் பெருநோ யாளிபோல்

துன்புறு கின்றனள் அன்பிலள் என்பால்
அருகிற் செலின்யான் அருவருக் கின்ருள்
என்னுடன் படுத்தவள் இன்ருெடு மூன்றுநாள்
ஆனது களவு போனவள் போலப்
பேதுறு கின்ருள் ஏதுயான் செய்கேன்.

**நற்:** மருத்துவர் என்சொனர் ?

**செவி:** வருத்து கின்றநோய்
ஒன்று மேயிலை என்றனர். மற்றும்
கட்டு விச்சியும் பட்டது கூறிலள்.
வேலன் வெறியாட் டாலொரு பயனிலை.

**நற்:** அப்படி யாஅவட் கிப்படி என்னே !
வேறினு மேன்ன மாறுபா டுற்றனள் ?

**செவி:** அன்னய் ! அவள்நிலை என்னெனப் புகல்வேன் ?
எண்ணுள் எணையும் மண்ணுள் மேனியும்
முடியாள் கூந்தலும் பொடியாள் சாந்தமும்
சூடாள் பூவும் கோடாள் ஏவும்
ஆடாள் ஊசலும் பாடாள் இசையும்
தொடாஅள் பந்தும் உடாஅள் துகிலும்
தடவாள் யாழும் நடவாள் போழ்தும்
எழுதாள் கண்மையும் கொழுதாள் வெண்மையும்
வரையாள் தொய்யிலும் கரையாள் கையிலும்
பூசாள் சுண்ணமும் மூசாள் வண்ணமும்
குடியாள் பாலும் கடியாள் கனியும்
சேராள் ஆயமும் பாராள் நேயமும்
பூவையும் கிளியும் பாவையு மறந்தாள்
மானையும் மற்றுள ஏனையுந் துறந்தாள்
தனக்குத் தானே நினைக்குவ பேசுவள்
தனியே யிருப்பள் தனியே சிரிப்பள்
மாலதி யோடும் ஏலது கூருள்
கண்படா துள்ளம் புண்படா வுள்ளாள்
காய்ச்சலெப் பொழுதும் ஓய்ச்சலோ இல்லை
துடியிடை உடம்பு கொடிபோ லானது
கட்டழ கவளை விட்டுமே சென்றது

மனத்துறு குறையென் எனவற் புறுத்தின்
ஒன்று மிலையெனக் கென்றுமே கண்ணீர்
வடிக்கிறாள் பல்லைக் கடிக்கிறாள் அன்னாய்!
இன்னென அறியேன் என்னதான் செய்கேன்.
நற்: மாலதி தான்கேட் டாலென் சொல்கிறாள்?
செவி: அவளிட மும்பே சுவதிலை யாமாம்.
நற்: பின்னிதற் கென்செய என்னருந் தோழி!
உன்மக ளறியா தென்மகட் கென்னுள?
தனியா அவளை வினவினால் விளங்கும்.
செவி: வினவினேன் தானும் புனமயி லியலும்
நகர்ப்புறச் சோலையில் உகப்புட னேவிளை
யாடிடத் தப்பி யோடிட முடியா
தொருவெறிக் களிறு வரவெதிர் நோக்கி
அஞ்சி யலறித் தஞ்செய லற்று
நின்றிடும் போதொரு வென்றிவேற் காளை
பொருக்கெனப் போந்து சுருக்கென அதனைக்
கொன்றங்கு நின்று சென்றுவிட் டனனாம்.
அன்று முதல்நம் மன்றலங் குழலாள்
இந்நிலை யடைந்தாள்.
நற்: அன்னவன் யாரோ?
செவி: ஒன்றுமே உரையான் சென்றுவிட் டனனாம்.
இவர்களும் வாளா அவன்றனைக் கேளா
திருந்துவிட் டனராம் கருந்தடங் கண்ணி!
வருந்துறு நோய்க்கு மருந்தவன் போலும்!
பருவ முற்ற ஒருகொடி கொம்பைப்
பற்றிப் படர்தல்போற் பொற்றொடி மகளிரும்
மங்கைப் பருவம் வந்துறு காலைத்
தங்களை யறியாத் தலைப்படு முணர்வால்
உளங்கவர் காதல் ஒருவனைப் பற்ற
விளம்பழம் போல உளம்வேறு படுவர்.
இயற்கையே யிதனைச் செயற்கையிற் படுத்தின்
கற்குவைப் படுபுல் புற்கென வெளிறி
நலிவதைப் போல மெலிகுவர் இதுநம்
திருந்திழை யவட்கும் பொருந்துமா றன்றோ!

நற்: தேடியுங் கொணரக் கூடிலா வக்கொழு
கொம்பிணைப் பற்றி வம்பவிழ் நங்கொடி
படர்ந்தின் பொடுபூத் திடுதலும் எங்ஙனம் ?
செவி: எங்ஙனம் என்பதே எனக்கும்
எங்ஙனம் தீருமோ நங்கொடி நோயே !

—: 0 :—

## நான்காங்களம் முதற்காட்சி (19)

இடம்: தென்பாலி நகர்ப் பக்கம், நகர்த்தெரு. காலம்: நண்பகல்

நடிகர்: பழையன், காமஞ்சரி, மாலதி, ஒருவன்.

காமஞ்சரி பழையனைத் தெருவிடைக் காணல்.

(நேரிசை யாசிரியப்பா)

பழை: பொன்னெனப் பொருளென என்னெனப் பட்ட
என்னுயிர்ப் பாடலம் ! உன்னைப் பிரிந்திவ்
வன்னிலந் தன்னில் தன்னந் தனியே
வெந்திடு மெலியர் தன்னி னியங்கி
ஒன்னலர் நாட்டில் இன்னல ளுகச்
சென்னெறி வினவிக் கொன்னெறி பற்றி
அறைபோ மாக்களின் குறைநேர் கென்று
முறையே யின்றி அறியார் பக்கம்
அறிவறை போகிய மறுமதி யாளன்
செல்லலுற் றேன்கொல் அல்லலுற் றலந்தே.
எங்குநீ ஐயகோ எங்ஙனம் உளையோ !
பாடலம் உன்னையும் ஏடலர் குழலையும்
என்றியா னடைவேன் ஒன்றியான் மகிழ்வேன் !
எங்கிரு வீரும் தங்கியுள் ளீரோ !
உள்ளமும் உணர்வும் விள்ளவோ எளியேன்
வெற்றுடல் தாங்கு கிற்றியே செல்குநன்
ஆதோ தெரிகிற தேதான் அத்தென்

பாலியா யிருக்கும், நீலவா னியங்கும்
முகிலுட னட்டிற் புகைபொரச் செல்லும்
காட்சிவெங் கரிகள் மாட்சியிற் சினைஇ
எதிர்பொரச் செல்லு வதைநிகர்த் தன்றே.
அம்முகி லிடையார் செம்மணி மாடத்
தாடுகொடி யிந்நன் னுடுகெழு செல்வி
வருக வருக வருகென வேதன்
மழைக்கை யாட்டி யழைப்பது போன்மே.
அக்கொடி மாடத் துக்கலை மதிபோல்
ஒளிர்தரு பொற்குடம் அளிமுக நீட்டிக்
கோலமார் தருதென் பாலிமா நகர்மகள்
நேர்பட நின்றெனைப் பார்ப்பது போன்மே.
கடலெனக் காரெனக் களிறுகள் பிளிற்றொலி
இடியெனத் துடியென இவுளிகள் கனைப்பொலி
அரச நகரெனும் பரிசினில் ஐயமில்.
அன்பா இந்நகர்—

ஒரு: தென்பாலி மாநகர்.

பழை: மலைய மன்னன் தலைநகர் கண்டனன்
மன்னனைக் கண்டினி எந்நிலை யுரைப்பேன்.
நல்லவன் மிகவும் வல்லவன் என்றனன்
அல்லவ னெனினும் ஆகுவ தாகுக.
வானுயர் மாடந் தானழ காக
விளங்கு கின்றது வளங்கெழு மறுகிற்
காலதர்ப் பாங்கர் மாலையும் மலரும்
வழித்தெறி கலவையும் பழித்தெறி கலன்களும்
காவிரிக் கரையில் மேவரும் பொருளெனக்
கிடப்பதை நோக்கின் மடக்கொடி யார்தம்
இருக்கைபோ லிருக்கிற திருக்கவே யறிவாம்.

காம: மாலதி இங்குவா! வாவா விரைவில்
காலதர் வழியே கண்களி கொள்ள
நோக்கி நோக்கிப் போக்கறு மறுகிடைச்
செல்லா நின்றவம் மல்லலந் தோளனைப்
பாராய்! அன்று நேரார் போல

என்னுளங் கவர்ந்தே தன்னுள முரையான்
கொன்றக் களிற்றைச் சென்றவன் போலும் !
மால: ஆமவ னேதான் நாமுறு நற்பயன்.
பழை: யாரது சோலையில் அன்றெனைத் தாக்கிய
பேரழ கியஅவ் ஆரணங் கேகொல் !
ஆமவ ளேதான் நாமுறு நற்பயன் !
காம: பாரடி நம்மையே நேரடி யாகப்
பார்ப்பதை, யினியென் ஓர்ப்பதிங் கில்லை.
மால: அவனே அவன்தான் அவனே ஐயமில்.
பழை: மலையன் மகளே ! சிலைநுதல் வளைத்து
வாளியங் கண்களால் தோளிடை யெய்தவள்.
அஞ்சி லோதிகா மஞ்சரி யேயிவள்
ஐயமில் அவளே மெய்யிணை மறைத்து
முகமதி காட்டி அகமதி லீட்டி
கொண்டெறி யெழிலாள் வண்டுமொய் குழலாள்.
காம: அன்றுகொண் டகன்ற என்றன துளத்தைக்
கொண்டு வந்து கொடுத்திட மொண்டு
கொளத்தகு மெழிலோன் உளத்திடை விரும்பி
வந்தனன் போலும் செந்துவர் வாயாய் !
மால: கொழுகொம் பின்றி விழுமங் குன்றி
வாடிய கொடியக் கோடது பற்றிப்
படர்ந்து பூத்து நுடங்கிப் பொலிவுறும்.
காம: அடிநகை யாட இடமிது போலும் !
பழை: நோக்கெதிர் நோக்குமித் தாக்கணங் கிணையினி
அடைதலோ உறுதி ! கடனறி மலையன்
அடைதரக் குறுக்கே தடையாய் நில்லான்.
எதிர்பா ராவிம் முதிர்பூங் கொடிபோல்
என்பா டலமும் என்பா டெய்தின்
என்போற் பெரும்பே றெவர்பெற் றனர்கொல் !
நோக்கிய படியே நோக்குதல் விரும்பி
நிற்கிருள் பாவைபோற் பொற்கொடி செல்கம்.
காம: அன்றுகண் டவர்நாம் என்றுநன் கறிந்தே
போகிருர் எங்கு போகிருர் என்று
பாரடி ஓடிநீ போரிடை யாதவன்

மால: கண்டெடுத் தரும்பொருள் விண்டது தானே
(தனக் வந்தது போல வந்தஅவ் அண்ணலும்
குள்) பூக்குழல் இவளும் நோக்கெதிர் நோக்கக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்
றுண்ணவும் நிலைபெரு துணர்வும் ஒன்றின.
அண்ணலை மன்னுற வாக்கி
எண்ணிய வெண்ணியாங் கெய்தல்நங் கடனே.

—:O:—

## நான்காங்களம் இரண்டாங்காட்சி (20)

இடம்: தென்பாலி அரண்மனை. காலம்: நண்பகல்

நடிகர்: மலையன், பழையன், வாயிலோன்.

பழையன் மலையனைக் காணல்

(நேரிசை யாசிரியப்பா)

வா-ன்: மன்னவா! வாயிலில் கன்னவில் தோளான்
ஒருவன் வந்துளான் திருமுன் யாதோ
உதவி நாடிப் புதியவன் நமக்கு.
மலை: பதியெதோ!
வா-ன் வற்றா முதுநீர் வானித்
துறையார் பழன நறையூர்த் தலைவன்
பழயன் என்றனன்.
மலை: பழையன்! நன்றதே.
அன்புடன் அழைத்துவா. என்பொருட் டாயிங்
(வாயிலோன் போக)
குற்றனன் கொல்லோ!
பழை: கொற்றவ! வணக்கம்.
மலை: வருக வருக! பெருமகிழ் வமர்க!
ஏவலோ படையோ மேவர லின்றி
அரியே றன்ன அப் புரவியு மின்றித்
தனித்திவண் உற்றதென் முனைப்படு வேலோய்?

பழை: காவிரிக் கரையின் மேவரு காவற்
படைநிலை யமைவின் நடைமுறை யதனைத்
தக்காங்கு நாடியு வக்காங் கிருக்கையில்,
ஒருநாள் இனிதென் பரியொடு தனியாய்
நீர்ப்படு பயனை ஏர்ப்படு பயனாய்
மாற்றியே யுலகைப் போற்றிவாழ் விக்கும்
எருதுகொள் பழன மருத வளமும்,
ஆய்க்குடிச் செல்வர் வேய்க்குழ லிசையால்
மேய்கை தவிர்ந்து வாய்கை மறந்து
பற்கெழு புற்கள் புற்கெனக் கீழ்விழ
ஆட்டாச் செவியவாய் மோட்டா நிரையத்
திசையினை நோக்கி அசைவற நிற்கும்
எல்லையில் வளமார் முல்லை வளமும்,
மலைவீ ழருவி யொலிமுழ வாக
வண்ணவண் டின்குரல் இன்னிசை யாழாக்
கால்படு துளையமை யோலின் குழலா
ஒழுகுறு மாற்றலை யெழினி யாகப்
பூவையுங் கிள்ளையும் பாவிசை பாடச்
சாரம் படக்குயில் வாரம் பாடத்
திரண்டின மந்தி மருண்டன நோக்க
அசையியல் விறலியின் பசுமயி லாடும்
முறஞ்செவி யினமிகு குறிஞ்சி வளமும்,
கண்டுகண் களிக்கக் கொண்டுள முவக்க
அழகின் சிரிப்பில் விழைவுற மயங்கிக்
கொங்கம் பின்படக் கங்கம் முன்படப்
பகைப்புல மென்பதைத் திகைப்பற மறந்து
நின்னு டடைந்தேன் அந்நாட் கங்குல்
என்னுயிர்க் குயிராய் மன்னுமென் பரியை
யாரோ கொடியர் பாராப் பிடித்துக்
கொண்டுமே சென்றனர் கண்டிலன் எங்கு
தேடியு மதனால் நாடிநின் உதவியை
உற்றனன் ஈங்கு கொற்றவ ! மற்றினி
ஆங்கதைப் பிரிந்தே ஈங்கியான் தனித்துக்
காழ்ந்தெறி மரம்போல் வாழ்ந்திட விழைந்திலேன்"

மலை: வருந்தலை நறையூர்ப் பெருந்தனித் தலைவ !
எப்படி யேனும் அப்பரி தன்னைத்
துருவிப் பிடித்துத் தருவன் அதுவரை
அரண்மனை விருந்தின ஞக இருத்தலின்
முரண்பா டின்றே !

பழை: அரண்படு தலைவ !
இரைபெறும் வரைகொக் கிரிதர முயன்மோ !

மலை: மகிழ்ந்தனன் நின்பெரு மாண்புக்
குகந்தவர் உகப்புக் குறுதுணை யோயே.

—:O:—

## நான்காங்களம் மூன்ருங்காட்சி (21)

**இடம்:** அரண்மனைக் கன்னி மாடம். **காலம்:** பிற்பகல்

**நடிகர்:** காமஞ்சரி, மாலதி

பழையனைப் பற்றிக் காமஞ்சரியும் மாலதியும்

(நேரிசை யாசிரியப்பா)

மால: அன்னய் அன்னய் ! அக்கொழு கொம்புநம்
அரண்மனை தன்னில் உரம்பெற உந்தை
அன்புநீ ரருந்தி நின்பெரு விருந்தாய்
நிலைபெற் றுள்ளது.

காம: கலைகற் றவள்நீ
நேரங் காலம் இலையுனக் காரிடம்
எதுபே சுவதென் பதுதெரி கில்லாய்
நகையா டுதலின் வகையோ தெரியாய்
மலையெற்றி யெலிகொள் மாக்களைப் போலத்
தலைசுற்றி மூக்கினைத் தொடுதறு தலைநீ
என்னடி உள்ளதைப் பன்னிடி தெளிவாய்.

மால: நந்தமைப் பிரிந்த அந்தநள் ளிரவில்
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்
எனுமுரை தனக்குத் தனியொரு சான்ரு
நின்னுளந் திருடிய அன்னவன் பரியை

யாரோ அவன்போற் பேரூர் தெரியார்
உளமலி காதற் களவினி லெளிதாக்
கொண்டுசென் றனராம் கண்டிலன் எங்குந்
தேடித் திரிந்து வாடி வதங்கி
உந்தையி னுதவி நாடி வந்துளான்.

காம: மெய்யா ! எந்தையென் செய்யா நின்றனர் ?

மால: மன்மகன் அவனை இன்முகங் காட்டி
அன்புரை யாடித் தன்பெருந் தகையால்
வருகென வேவர வேற்றப் பரியினைக்
கண்டு பிடித்துக் கொண்டு வரும்வரை
ஈங்கிருக் கென்ன ஆங்கவ னுடன்பட்
டரண்மனை விருந்தின னாக இருந்துளான்.

காம: அப்படி யாவினுஞ் செப்படி விரிவாய்.

மால: செப்புவ தென்னினி எப்பொழு தேனுநீ
கண்டு களித்துக் கொண்டின் புறல ம்.
எடுத்த புடைவையை உடுத்துதற் குடையாள்
உரியவ ளல்லளோ? சுரிகுழல் ! அடிக்கடி
கண்டுமே காதல் கொண்டுணர் வொன்றி
இன்பப் படகினி லேறி அன்புடன்
மடமொழி இனிய இல் வாழ்க்கைக்
கடலினைக் கடந்து களிக்குறு வாயே.

காம: இதுதான் விரிவா !

மால: மதிமுக வமிழ்தே !
இன்னு னென்று சொன்னே னில்லை.
விரித்துரைக் கின்றேன் கருத்துடன் கேளாய்.
வானி வளற்றும் வடகொங் கதனைத்
தேனடை காக்கும் செவ்வியிற் காக்கும்
வெல்வாட் பகைவர் வெருவுற ஏந்தும்
பல்வேற் கட்டி யெனப்புகழ் படைத்தோன்
பெரும்படைத் தலைவன், அரும்பவிழ் குவளை
மங்கையர் கண்ணென மலரும், சங்கினம்
அங்கவர் பல்லென அவிர்முத் தீனும்,
வாயென ஆம்பல் மலரும், ஆயொளி

முகமெனத் தாமரை மலரும் தகவுடைப்<br>
பழன மலியுங் கழனி முன்றுறை<br>
இறையார் வளைக்கை இனியா ராடும்<br>
நறையூர்த் தலைவன் நல்லிசைப் பழையன்<br>
என்பவ னேயிவன் உன்புக லாயவன்.

காம: அவனென் னுதடி.

மால: அவரவ ரவரவர் !<br>
போதுமா போதா தோதக வோதவா !

காம: போதும் போதும் போதரி நெடுங்கட்<br>
பாவாய் ! உதவி யாவாய் அன்றவர்<br>
எப்படி யேனும் தப்பா தீங்கு<br>
வருவார் என்றது சரியாய் முடிந்தது.<br>
கடுத்துயான் சொன்னதை எடுத்தொரு பொருளாத்<br>
தவரு நினையல் தாய்மக ளேநீ<br>
உவரா என்னு ளங் கவர்கா தலரை<br>
இன்றே உடனெதிர் நின்றே அடைவுடன்<br>
காணவேற் பாடு வாணுதல் செய்குவை.<br>
இங்குனை யன்றி வேறி யாருளர்<br>
எங்குறை முடிக்க இலவித ழோயே ! 2

—:0:—

## நான்காங்களம் நான்காங்காட்சி (22)

இடம்: அரண்மனை காலம்: முன்னிரவு

நடிகர்: மலையன், நற்றுப் (மலையன் மனைவி)

மலையனிடம் நற்றுப் காமஞ்சரியன் களவு கூறல்

(நேரிசை யாசிரியப்பா)

மலை: (தனக்குள்)<br>
பேரர சுக்குப் பாரிய பகைவன்<br>
ஒன்றல பன்முறை வென்றுநம் புறத்தைக்<br>
கண்டுமே களிப்புக் கொண்டவன் கங்கரின்<br>
வழிவழிப் பகைவன் ஒழிவழிப் படாஅ

அடங்காச் சினத்தன் மடங்காப் பல்வேற்
கட்டியின் பெரும்படைத் தலைவன், ஒட்டிய
உறவுடன் பட்ட திறலுடை யிவனே,
பேரிலோ பழையன் போரிலோ புதியன் !
போரெனப் புகலின் யாரெதிர் நிற்கும்
ஆற்றலர் ! ஆணரி யேற்றினைக் கண்டால்
அஞ்சுந ரன்றி நெஞ்சினைக் காட்டி
நிற்போர் யாவர்? மற்போர் வாட்போர்
வேற்போர் விற்போர் நாற்போ ரினுமோ
புதியன் எதிரிலா மதியன் முதியன்
அடுபோர் வல்லோன் படுபோர்க் களத்திடைக்
கறங்கெனச் சுழன்று மறங்கடை இ யழன்று
களங்கண் டுவக்கும் வளங்கொண் டலேறு.
வீரமும் ஆண்மையும் கூரிய தோண்மையும்
தனக்கென உரியோன் மனக்கிடைப் பெரியோன்
அவன்றனக் குவமை யவனே யானவன்
எவனிவன் றனக்கெதிர் இலையிலை உலகில்.
அடலரி யேறுபோல் உடலுபோர்த் திறனெடு
கட்டழ குடைய நெட்டிலை வேலோர்
முற்படு போரிற் வெற்பென வேமுன்
நின்றுநம் படையை வென்றவ னிவனே.
ஆயினு நடந்து போயதை மறந்து
பகைபா ராட்டாத் தகையின னாகி
முந்துற அவனே வந்தனன் என்பால்
எனினிவன் தகைமையை இனதெனக் கூறுவல் !
வழிவழிப் பட்ட பழங்குடிப் பிறந்தோர்
பழிவழிப் படாஅப் பண்பா டிதுவே
பகைவர்க் குதவுதல் தகைமிகு பெரும்பே
ராண்மையென் றறைகுவர் வாண்மற வர்க்கும்.
பகையினை மறந்த தகையின னாகி
அன்பால் ஒருப்பட் டென்பால் வந்தோற்
குதவுத லென்ற னதுகட னன்றோ ?
யாரது நியா ? வாரிருங் கூந்தல்
எப்படி யுள்ளனள் ?

நற்: செப்புவ தொன்றைக்

கொண்டுதான் தங்கள்பால் விண்டிட வந்தேன்.

மலை: என்னது ?

நற்: பூங்கொடி யன்னவள் நோய்க்குக்
காரணம், குதிரையின் காரண மாக
இங்குவந் துளனே வெங்களி றதனை
வீழ்த்திநங் கொடியைக் காத்திட் டவனும்
இவனே தானாம், அவனீங் குற்றபின்
தன்பிணி யகன்று முன்புள வதனினும்
மகிழ்வுட னுளள்தண் முகமதி யனையாள்.

மலை: அப்படி யா !

நற்: ஆம்.

மலை: ஒப்புடை யவரே.

நற்: மாடமீ திருந்தவன் மறுகிடை வருகையில்
வாடைமா மலரென மகிழ்ந்துகண் டனளாம்.
அவனுமவ் வாறே இவளைநோக் கினனாம்.
அதுமுதல் நிறைபிறைப் புதுமதி யானாள்.

மலை: பெண்ணினைப் பெற்றவர் பெருங்கடன் அவள்தன்
கண்ணினுக் கினிய கணவனைப் பெறச்செயல்.
வலியக் கொள்கென மானமுந் துறத்தலும்
வலியக் கொளவுறின் மறங்கடைக் கூட
மகட்கொடை மறுத்த மகட்பாற் காஞ்சியும்
புறப்பொருட் டுறையாப் புறப்பொரு ளிலக்கணத்
துடைமையால் மகட்படு கடமையோ வரிதே.
அதுநமக் கெளிதில் அமைந்ததால் இதனை
முற்றுறச் செய்தல் பெற்றவள் கடனாம்.

நற்: என்செய என்னால் !

மலை: பொன்செய் பாவை
அனைய அவளும் அவனும் மனமொன்று
பட்டிட அவரெதிர்ப் பட்டிட ஆகுந
செய்குவை.

நற்: இன்னே செய்குவன்
உய்குக இனிதே ஒடுங்கிடை யவளே.

—:O:—

## நான்காங்களம் ஐந்தாங் காட்சி (23)

**இடம்:** அரண்மனைப் பூங்கா **காலம்:** மாலை

**நடிகர்:** பழையன், காமஞ்சரி, மாலதி.

பூங்காவில் பழையனும் காமஞ்சரியும்

(நேரிசை யாசிரியப்பா)

**பழை:** காண்போர் கண்ணைக் கவருமிப் பூங்கா
பூண்போர் சூடும் பூக்களைத் தலையில்
அழகுறச் சூடிப் பழகுறப் பயின்ற
கூட்டளி பாடும் பாட்டினைக் கேட்டுப்
பசந்தொளிர் மேனி பனித்திடப் பொலிந்து
கசிந்துள முவகைக் கண்ணீர் வடித்துத்
தென்றலி னுடங்கி மன்றலிற் றுடங்கி
அவ்விசைக் கேற்பச் செவ்வி தினுங்கு
நிலைபெய ராது தலையசைத் தாடுதல்,
எண்சுவை தோன்றப் பண்சுவை யீன்ற
நகைமுகங் காட்டி அகமைய லூட்டி
மகளி ராடும் மன்றினைப் போன்மே.
ஒவ்வொரு செடியும் செவ்விய பருவ
மங்கையர் போல அங்ஙனந் தோன்றும்.
ஒவ்வொரு செடியின் ஒவ்வொரு நறுமணங்
கமழ்பூங் கொத்தும் அமிழ்தி னியன்று
கண்மணிக் கடங்காப் பெண்வடி வாகி
என்னுளங் கவர்ந்த தன்னிகர் தானு
கியவவ ளின்பெய ரினை நினைப் பூட்டிச்
செயலற என்னைச் செய்கின் றதுவே.
செவ்வியிற் பூத்துத் திகழ்தப் பொலியும்
அவ்வுயர் கொம்பங் காடிடுங் காட்சி,
பேயொரு சோலையி லேயொரு தலைவி
ஆய மகளிரோ டாடுதல் போன்மே.
அடர்தர வாங்கு படர்ந்துள்ள அம்
முல்லைப் பந்தரு மல்லிகைப் பந்தரும்
புல்லென ஒசிந்த மெல்லிடை பொலியப்

பைம்பட் டுடுத்து வம்பவிழ் மலர்கொய
உறுகவீங் கென்ன முறுவலித் தழைத்திடல்
போலுமக் காட்சி சாலவும் இனிதே.
இப்பூங் காவின் ஒப்புயர் காட்சிகள்
தொகைபட முற்றும் வகைபடக் கிளப்பின்
நாவலோ ரியற்கைக் காவிய மாமே.
அயிலென முற்றிய வெயிலினை விடுத்து
மறங்கெடப் பகலவன் புறங்கொடுத் தோட
அகத்துறை மக்கள் மிகக்களிப் பெய்த
பகைத்தொடர் பறுத்த அகத்தோன் போல
வெயிற்பகை வென்றுங் கயிற்படக் குணக்கில்
வெண்மதிச் செல்வன் தண்மெனத் தோன்றினன்.
பம்பிய பச்சைக் கம்பள மீது
துயலுற மிகமெல் லியவெள் ளாடை
விரித்தது போலப் பரித்திடு நிலவில்
தென்றலி னசையு மன்றலஞ் செடிகளின்
தோற்றர வானது கோற்றொடி மகளிர்
உடைத்திடும் பஞ்சுமேற்படப்பறந் திடுதல்போன்ம்.
இனுமுள காட்சிக ளெல்லாம்
கனிவுடன் கண்டு களித்திடு வோமே. 1

காம: வாராய் மாலதி! பாராய் இப்பூங்
காவின தெழிலை நாவலர் வாய்ப்படின்
நங்கண் காணு இங்குறு காட்சிகள்
காவியச் சுவைபட ஓவியச் சாலையிற்
காணுறும் பொருள்போல் மாணுறத் தோன்றிப்
படிக்கப் படிக்க முடிக்குற லின்றித்
தீரா வின்பந் தாரா நிற்கும்.
ஆனல் எனக்கோ ஏனே இப்பூங்
காவினைக் காணக் காண நாவினைப்
பொருந்தாச் சுவைபோல் விருந்தா கின்றது.

மால: புணர்ந்தார்க் கின்பம் பொருந்துவ வெல்லாந்
தணந்தார்க் கின்பந் தாரா வல்லவோ!

உள்ள மதனைக் கொள்ளை கொண்ட
அவருமிங் கிருக்கின் சுவரிடை மாட்டிய
ஓவியப் படம்போற் காவியச் சுவைபட
உள்ளுணர் வதனைக் கிள்ளி நன்கனம்
வெள்ளிடை மலைபோல் விளங்கித் தோன்றும்.

காம: அதுசரி நிறுத்துனக் கிதைவிட வேலை
இல்லை போலும்! புல்லரித் திடுமென்
மனநிலை மாற இனியவோர் பாட்டுப்
பாடுக ஏழிசை நாடுநின் குரலில்.

(ஆசிரியத்தாழிசை)

மால: 1. வானிற் றனித்துநீ மணப்படு மங்கைபோல்
ஏனிப் படியுளாய் கூராய்மதி!
எம்முடன் ஆடிட வாராய்மதி!

(ஆ-அடி)

காம: சரிசரி நிறுத்தடி எரிகிற தீயில்
நெய்வார்த் ததுபோல் செய்குதுன் பாடல்.

மால: இல்லை யில்லையினி நல்லதாப் பாடுவல்.

(ஆ—தா)

2. பூத்துப் பொலிந்திடும் பூஞ்செடி கொடியெலாம்
ஆர்த்தசைந் தாடிட வீசாய்தென்றல்!
யாங்கண் டுவந்திட வீசாய்தென்றல்!

(ஆ—அடி)

காம: பொருவேல் பாய்ந்த புண்ணில் மேலும்
எரிவாய்க் கொள்ளியை இடுவாய் போலும்!

மால: அப்படி யில்லை மைப்படு கண்ணி
தப்பதி வராமலி னிப்பா டுவல்யான்.

(ஆ—தா)

3. மாந்தளி ருண்டுநீ வாளா இருந்திடில்
ஏந்தெழில் ஆகுமோ கூவாய்குயில்!
யாங்கேட் டுவந்திடக் கூவாய்குயில்!

காம: (ஆ—அடி)

எரிவாய்க் கொள்ளியை இட்டரும் புண்ணில்
வரிவாய் வல்லுயிர் வாட்டுவை போலும்.

மால: மதியும் தென்றலும் குயிலும் புதிதாய்
உனக்கிடர் செய்யும் என்பதை நினைக்கிலன்
பொறுத்தருள் யாழை வெறுத்திடு சொல்லாய்.

பழை: என்னைகொல் யாழின் இன்னிசைப் பாடல்!
இசைபிறந் திடுமத் திசையினிற் செல்வாம்.
(பழையன் வர)

காம: யாரதோ!

மால: அவர்தாம் பேரழ குடையாய்!
இருநீ யிங்கு மருமலர் கொய்து
வருகிறேன் நான்போய்.

காம: சரிசரி போய்வா.
அவர்தாம் வருகிறார் அவரிடம் தனியே
எப்படிப் பேசுவ தவளும் இப்படி
அம்மர விட்டு மலர்கொயச் சென்றனள்.
அடுத்தனர் அவர்முன் அடுத்தன அச்சமும்
நாணமும் என்செய்கேன் காண அவாவிய
கண்களும் ஏனோ மண்கொள நோக்குந.

பழை: நுதலிடை முத்தணி இதுவோர் புதுமை
இடையினிற் கட்டி உடையவி ழாதுற
எடுத்துமே கலையாத் தொடுத்துத் தரட்டுமா?
யாரது? நீயா! பாவை, நான்தான்.
செப்பிதழ் திறக்க ஒப்புத லின்றோ?
முத்துதிர்ந் திடுமெ னத்திறந் திலபோன்ம்.
ஒருவரும் பின்னால் வரவில்லை கண்ணே
அங்கேன் திரும்பினை? இங்கே பாராய்.
செய்ததோர் பிழையிலன் பொய்தலைப் பட்டனை.
பூவிலே தேனிலை. பாவையின் கூந்தலை
ஏன்மொய்க் கின்றீர் தேன்முக் களிகாள்!
நான்முடிக் கட்டுமா தேன்மலர்க் கூழையை!
பேசா மடந்தை போலும்! பேசா
நின்பால் பேசுதல் என்பால் தவறே.
கனங்குழை கழன்றது செறிப்பாய் கனங்குழை!
தப்பாத் தொட்டனை இப்பெருந் தொடிகளை.

மேகலை காஞ்சியை வாகுட னிறுக்கிக்
கட்டிக் கொளினிம் முட்டிலை யலவா !
என்னுயிர்ப் பாடலம் தன்னைப் பிரிந்த
என்போற் றனியேன் ? உன்பாற் பிரியாத்
தோழி யெங்கே ஏழிசை யாழே !

காம: பூக்கொயப் போனாள்.

பழை: தாக்கணங் கேயான்
சொன்னது மெய்யே இன்னிசை யாழும்
தோற்றதுன் சொற்குக் கோற்றொடி நல்லாய் !
மாக்கருங் குழற்குப் பூக்கொயப் போன
அவள்வரு முன்னே தவள மல்லிகைப்
பூக்கொய்து வந்துன் மாக்கருங் குழற்குச்
சூட்டுவல் யானே வாட்டடங் கண்ணாய் !
(பூச்சூட்டல்)

காம: போதும் விடுங்கள்.

பழை: காதள வோடிய
கண்ணாய் உன்றன் எண்ண மறிந்தேன் !
புதிதாய் ஒருவனை மதிமுக வமிழ்தே
எதிர்ப்படின் மகளிர் விதிர்ப்புறல் பெண்பாற்
குரிய குணங்களிற் சுரிகுழல் அச்சமும்
நாணமும் ஏதுவாம் ! காணவை தம்மால்
உன்னுடல் ஒர்கி என்னுடன் பேச
வெள்கா நின்றாய் உள்கேல் உனக்கியான்
புதியன் அல்லன் பழையனே யாவன்.
மதிமுக வமுதே இதழக லவிலை !
என்புன் முறுவல் என்பெயர் கேட்டா !
உன்பெயர் ?

காம: காமஞ் சரி.

பழை: அவள் தன்பெயர் ?

காம: மாலதி.

பழை: உன்னைச் சாலவும் விரும்புவள்.

காம: எப்படி அறிவீர் ?

பழை: செப்பிடின் முன்பின்
மிக்க விருப்பமெ னக்கொள நிற்கும்.

காம: நல்ல பொருள்தான்.
பழை: அல்லியம் பாவாய்
உட்கா ரிப்படி உட்குத லெனினும்?
காம்: ஏனென அறியேன் கானிடை யன்று
கண்டதும் மறுகிடைக் கண்டதும் போலா
ததிர்க்குதென் உள்ளம் விதிர்க்குதென் உடம்பு
பேசவே எந்நாக் கூசுதும், பேசுவ
தின்னெனத் துணியா தென்னுளம் பேதுறும்.
சூட்டுக் கோலென நீட்டிய தங்கள்
கைபடின் என்றன் மெய்படும் பாட்டை
இற்றென எடுத்துச் சொற்றிட அறியேன்!
என்வழிப் பட்டில என்பரு வுடலே.
பழை: நாண்முதற் பேதைமை யீரு மாண்படும்
பெண்மைக் குணமெலாம் உண்மையின் நின்பால்
நிகழ்ந்தன அவைநீ மகிழ்ந்தெனை ஏற்றதற்
கறிகுறி யாகும் அறிவுடை யன்பே!
அங்குகண் டதினும் இங்குன துள்ளம்
என்பாற் பட்டதால் அன்பாற் பட்டன.
காம: உண்மையே இன்றுதான் ஒண்மைய ளானேன்.
பழை: ஓரறி வுயிர்முதல் ஆறறி வீருப்
பாருல கினில்வாழ் பல்வகை யுயிரும்
ஆண்பெண் பாலாக் காண்படு கின்றன.
பருவ முற்றவவ் விருவகைப் பாலும்
ஒன்றையொன் றவாவி உளங்கலந் தொன்றும்.
ஆண்பாற் றுது பெண்கருப் பையுறீஇ
மாண்பா ருலகம் வழியரு தியங்கிட
அதுகரு வுருவாய்ப் புதியதோ ருயிராம்.
இதுவே உயிரின் இயற்கை. அதுபோல்
நாமின்று கண்டு தாமொன்று பட்டோம்.
இங்ஙனம் ஆண்பெண் பங்குற லின்றேல்
உலக மென்பது நிலவுயி ரின்றி
மண்ணுல கென்னக் கண்ணுறத் தோன்றும்.
இப்பெரும் உண்மையைத் தப்பற வுணர்ந்து
நாணொடு புதிதெனக் காணுதல் விடுத்து

நெஞ்சகத் தென்னை நேர்வாய்
வஞ்சியே யினியுன் நெஞ்சகத் தேனே. 1

காம: உண்மையை யுணர்ந்தேன் கண்மணி யனையீர் !
கானிடை யன்று தானென வந்து
களிற்றினை வீழ்த்தி ஒளிற்றுவே லுயர்த்தி
ஊர்பேர் உரையாப் பேர்தந் தீர்கொல் !

பழை: இலைவினு அதனல் செப்பும் இலையால்.

காம: மாலதி தவறது காலெரி வேலோய் !
மறுகிடை வந்தபோ தினுஞ்சிறி திறையவண்
நில்லா தேனே வல்லே சென்றனிர் ?

பழை: அனிச்சமு நெருஞ்சிப் பழமெனப் பனிச்சிடும்
மெல்லடி பொறுத்திடும் ஒல்லிடை நங்காய் !
ஒருவனுந் தனியாத் தெருவிடை வாளா
நின்றிடல் உலகியற் கொன்றிய தாமோ ?
அன்றியும் மாடமேல் நின்றிடும் உன்னைப்
பார்க்கவும் நீயெனைப் பார்க்கவும் நிற்றல்
அவ்வழிச் செல்வோர்க் கெவ்வகைப் பொருள்படும் ?
மூடலூர் வாயை மூடியு முண்டோ ?
அங்ஙனம் நின்முகத் திங்களைக் காணுதல்
வழியிடைக் காட்சியின் ஒழுகலா ருமோ ?

காம: ஆகா.

பழை: மேலும் தோகாய் ! வயல்வாய்ப்
பாய வருங்கால் வாயது நீரை
வழியினி லுழவன் சுழிதர விழைவனே ?

காம: விழையான்.

பழை: கரும்புங் கழையும் விரும்பும்
துணைப்படு தோளாய் இணைப்படு வாளாய் !
ஆனல் ஒன்று நானுனை இந்நாட்
டிளவர சியென அறிந்திவ் வளநகர்
வந்தே னில்லை. வந்ததென் உயிர்க்குயி
ராகிய பரியினுக் காகவே யாகுமத்
தெருவிடை வருகையில் ஒருசிறை மாடமேல்
முகமதி கண்டேன் அகமகிழ் கொண்டேன்
கானிடைக் கண்டெடுக் காது போன

கனியிணை மனையிடைக் கண்டேன் இனியென
குடத்து நீரைக் குருவியா குடித்திடும்
எனவே ஆயிடை தனிலின் றகன்றேன்.
திருமுக மலர்ந்து வருகென உவந்து
கண்டேன் உந்தையை விண்டேன் வெந்துயர்.
திருந்திழா யுந்சம் விருந்தின ருகும்
வாய்ப்பிணைப் பெற்றிப் பூப்பயில் விழவில்
மனமுகை யினிது மலர்ந்து
கனிமொழி காதற் கலப்புற் றனமே. 2

காம: கடகளி றன்று காணச் செய்தது.
புடைபெயர் பரியளி பூணச் செய்தது.
கரியெதிர் வந்ததும் பரிபெயர் தந்ததும்
துன்பமே யெனினும் இன்பமா முடிந்தன.
தீமையு நன்மையாம் நன்மையுந் தீமையாம்
ஆங்கவை பயன்படும் பாங்கினி லென்ப;
அன்மையிற் பட்டரு ராமல்
நன்மையிற் பட்டதத் தீமையு நமக்கே. 3

வழை: அறிவுட ன் பட்டநின் ஆய்விணை அறிந்து
பெரிதும் வியந்தனன். தெரிதர முன்னதைக்
களிறுதரு புணர்ப்பெனக் களறுப பின்னதைப்
பரிதரு புணர்ப்பெனப் பகரலாம் உரிமையின்
அவ்விரு புணர்ப்பும் செவ்விதின் நமக்கு
நற்பயன் பட்டமை எற்பெறும் பேறே.
அன்புதக வாய்த்தவென் இன்பப் பெருக்கே!
உன்போல் என்பால் அன்புயர் பாடலம்
தன்ணையும் உறப்பெறின் என்ணை நிகர்த்தவர்
யாவரே முடியுடை மூவரே யென்னத்
தன்னிக ரற்று மன்னுல கதனில்
அமிழ்துறழ் தருமுத் தமிழும் இனிமையும்
போன்றுள மொன்றி ஆன்றபே ரின்பம்
துய்த்துமே வாழ்குவம்; செய்த்தலை யுழவர்
நணைதர வொளிர்முத் திணையரித் தெடுத்துப்

பைத்தலைக் கரைகு வித்திடக் கண்ட
மடைகுடை ந் தாடிய மடநடை யன்னம்
தானிடு சினையென வேநினைந் தோடிக்
கனிவுட னதன்மே லினிதமர்ந் தடைகாத்
திளவெயில் காயும் வளமிகு பழன
வாய்மிகு கழிநீர் பாய்தர நிவந்த
சோலைசூழ் தருதென் பாலிநா டாளும்
மலையன் பயந்த கலை நிறை மதியே !
வானிடை மின்னு வானிடை மின்னே!
பருவந் தவருப் பெரும்பெயல் முகிலே!
மாசறு மணியே, ஆசறு பொன்னே,
அலைகடற் பிறவா இலகுவெண் முத்தே,
காவிடை மலராக் கமழ்பூங் கொத்தே,
நாவிடைச் சுவையா நறுஞ்செந் தேனே,
காவிரி யன்ன மேவரு பயனே,
இன்னியல் வானி யன்னமெல் லியலே,
கங்கத் திளங்கொடி கொங்கப் படர்கொடி,
மாடப் புறவே, கூடக் கிளியே.
ஆடிள மயிலே, பாடிளங் குயிலே,
பூவையே செம்பொற் பாவையே என்கண்
மணியே. அக்கரு மணியிடைப் பாவாய் !
காதற் கனியே கனிதரு சுவையே.
ஓதற் கினிய உயர்செந் தமிழே,
என்னுள முன்னகத் துன்னுள மென்னகத்
தூறிய அன்பே ! மாறிப் புகுத்
தன்போக் கிழந்த தென்வாழ்க் கைத்துணை
என்னவே பிறந்து துன்னவே வளர்ந்த
கருந்தடங் கண்ணி ! பொருந்துமில் வாழ்க்கைத்
துறைப்பட இன்னே தோழிக்
கறத்தொடு நிற்பாய் திறத்தியல் மானே. 4

காம : தோழி வருகிருள்.

பழை : வாழிநின் வரவை
எதிர்பார்த் திருந்தோம், அதிர்பூங் கழலுன்
வருகையை முன்னரே தெரிதரச் செய்தது.

மால: வணக்கம் பெருமான்!
பழை: இணக்கம தாகச்
செவ்வி யறிந்து செவ்விய பூக்கொயப்
போயினை, போய தாய தறிந்து
வந்தனை, இனியு வந்தனை செய்யுங்
கடப்பா டுடையை இடப்பா டறிந்து
செய்வன திருந்தச் செய்குவை
பெய்வகை யறிந்த மைவிழி யோயே.

—: o :—

## நான்காம் களம் ஆறுங்காட்சி (24)

இடம்: மலையன் அரண்மனை காலம்: இரவு

நடிகர்: மலையன், நற்றாய்.

மலையன் வரைவுடன்படல்.

(நேரிசை யாசிரியப்பா)

மலை: மொழிவழி மாறு வழிவழி வருமிவ்
வரண்மனை யதற்குப் பெருமனை யாட்டி!
பெற்றவட் குரிய முற்றிய கடப்பா
டிற்றென வறிந்த பொற்றொடி! இளநீர்க்
காயினை யீன்ற தாயதை யெடுத்துத்
தாங்கிப் பிடித்துப் பாங்குட னேயகத்
தின்பால் வருநீர்த் தன்பால் அன்பால்
ஊட்டி யினிதுதா லாட்டி வளர்த்து
மற்றது பருவ முற்றிய தறிந்து
கேளென வினிதும ணாளனை யடைந்து
பற்றியொன் றுறவின் புற்றிடு வாயெனப்
பற்றற விட்டு நிற்றிடு மத்தாய்.
அத்தகு தன்மையு ரித்தத னாலே
நற்றா யெனப்பெயர் பெற்றனை யாங்கு

நன்ருற் றிணையோ ஒன்றுநின் மகட்கே?

நற் : வென்றிவை வேலோய்! இன்று மாலை
இற்றென நுடங்கும் சிற்றிடை யவளும்
மற்றவர் துயரம கற்றிடு மவனும்
பெருமினத் தும்பி மருமல ரூத
அவ்விசை கேட்ட செவ்விய மலர்கள்
ஒசிந்துள் ளுருகிக் கசிந்ததன் பரிசா
உளக்கொள நறுந்தேன் கொளக்கொள நல்கும்
அரண்மனைப் பூங்கா வதனிடை எதிர்ப்பட்
டிருமனங் கெட்டாங் கொருமனப் பட்டு
மனமொன்று பட்டாங்கு வாயொன்று பட்டு
முனமங்கு கண்டாங் ஙனமங்கு பட்டு
நிகழ்ந்தவை கூறி மகிழ்ந்தும், மற்றவன்
புகழ்ந்தவை நாணு தேற்று மகிழ்ந்தும்,
படைக்கலந் தொட்டு வடுப்படு கையால்
கருமுகி லிடைமீன் விரவுதல் போல
கருங்குழ லிடைமலர் நெருங்குறப் பெய்தும்
பொழுதுபோக் கினராம். எழுதெழில் மாடத்
தோவியப் பாவையின் மேவுநற் பூவைநம்
தலைமையி னீங்கித் தலைமை தாங்க
விரும்புநள் போலும்! கரும்புமி ழின்சொல்
தோழி சொன்னுள், காழுற நிவந்த
கொம்பிடைப் படர்ந்தவோர் வம்பவிழ் பூங்கொடி
மன்றலிற் கசிந்து தென்றலி னசைந்து
நன்றுறப் பொலிந்து நின்றதைக் கண்டதாத்
தன்மகள் சொன்னதா, என்மகள் வாழ்க!

மலை : கடமையைச் செய்த மடமொழி யுன்றன்
தாய்மை யுள்ளத் தூய்மையைப் பெரிதும்
பாராட்டு கின்றனன் சீராட்டி வளர்த்த
நிரைவளை யுள்ளம் நிகர
வரைவுடன் படுதல்நம் புரைதபு கடனே.

—: o :—

ஐந்தாங்களம் முதற்காட்சி (25)

இடம்: தென்பாலி அரண்மனை, காலம்: காலை
நடிகர்: மலையன், பழையன், படைத்தலைவன், வாயிலோன், காமஞ்சரி. மாலதி.

களவுபோன குதிரை மீளல்.

திரை-1: அரண்மனையில்.
நடிகர்: மலையன், பழையன், படைத்தலைவன் வாயிலோன், பாடலம்.

(நேரிசை யாசிரியப்பா)

வா-ன்: புரவல! படைவலான் பரியொடு வாயிலில்
வந்துளான்.
மலை: ஈதோ வந்தனன், அரண்மனை
விருந்தின னாக இருந்திடும் பழையனைச்
சென்றுடன் அழைத்துவா.
படை: வென்றிவை வேல!
வணக்கம்.
மலை: மகிழ்ச்சி! வணக்கியே கள்வரை
ஈடிணை யற்றவிப் பாடலந் தன்னைக்
கொண்டுவந் தனைகொல் கண்டுள முவந்தனன்.
உடையோன் கண்டால் கடன் மடை திறந்தென
இன்பப் பெருக்கால் மன்பதை யுலகை
மறந்துபுத் துலகிற் பிறந்தவ னாவன்.
வந்துவிட் டானிதோ அவனும்.
பழை: வந்துவிட்
டனையா பாடலம்! எனைநீ பிரிந்து
தனியா யெவ்வா றுற்றினை? இனையேல்
(பாடலம் கனைக்க)
இன்குரல் யாழென நின்குரல் யான்கேட்
டெத்தனை நாளா யினஆ! இத்தனை
நாளா அயலார்க் காளா இருந்துநீ
எத்தனை யிடருற் றனையோ முத்தினை
(தடவிக் கொடுத்துக் கொண்டே)
ஒவ்வா மேனி இவ்வா றொளியிழந்
தந்தோ! மாசுப டிந்தே யழகையி

ழந்தே பெருமைசி தைந்தே போனதே.
அழாதே கண்ணே! அழாதே! உன்னைக்

(கண்ணீரைத் துடைத்தல்)

கள்வர்கள் வந்து கொள்வதை யறியா
துறங்கின னேயவ் வறங்கடைச் செயலைப்
பொறுத்தருள் கிற்பாய். வெறுத்திடு கில்லாய்.
வருந்தா துன்னைப் பிரிந்ததன் பின்னர்
நனவி னன்றிக் கனவினுங் கூட
மறந்தே னில்லை. துறந்தெனை நீயெங்
கிருந்தனை யோவற மருந்தனை யாயுள
முரிந்துநைந் தெங்ஙனம் வருந்தினை யோதான்!

மலை: ஐயறி வென்பது பொய்யுரை. இதுவோ
ஆறறி வுயிரினு மீறிய வறிவுடை
யதுவெனல் ஐய மதுசிறி தின்றே.
தலைவன் வாரந்து தலையிது பொருது
கண்ணீர் வடித்தே யுண்ணீர் மையினை
வெளிப்படுத் தன்பை யுளப்படு துன்பை
மாற்றியே தலைவ! ஆற்றுக வென்னும்
பகுத்தறி வாவின் மிகுத்துள விதனைக்
களவா டியவக் கள்வர்கள் யாரோ!
குளமலி பாசியைக் களைவது போல
அடியோ டொழிப்பல் படைவலா யெங்கு
கண்டனிர் கண்டு கொண்டனிர் வந்தீர்?

படைத்: வடிவே லவனே! மடைநீர் மீனை
வலைபோட் டரிக்கும் வலைஞர் போலத்
தேடினோம் எங்கும் தேடியும் இதனைக்
கண்டிலம் எனினும் கொண்டிலம் ஓய்வு
தேடித் தேடித் தேடித் திரிந்தோம்
முடிவா ஒருகாட் டிடையொரு மரத்தில்
கட்டி யிருக்கக் கண்டோம் தனியாக்
கட்டினோர் யாரும் பட்டிலர் கண்ணில்.
அங்கிதைக் கொண்டோர் எங்களுக் கஞ்சிக்
கட்டிவிட் டோடி விட்டனர் போலும்.

நாடிய பொருள்கை கூடிடப் பெற்றவர்
போற்கடி துவந்தன் பாற்கொடு வந்தோம்.
பழை: பருந்தும் நிழலும் போல இருந்த
என்னைப் பிரிந்து தன்னந் தனியே
வலைபடு மான்போ லிலைபடு கானிற்
கட்டப் பட்டு நெட்டுயிர்ப் புற்று
செய்வ தறியா துய்வழி நாடி
உள்ளங் கலங்கி வெள்ளம் படக்கண்
ணீருகுத் தேங்கி ஆருயிர்க் குயிரா
மெற்பிரிந் தலங்கித் தற்புலங் கலங்கி
என்னா கினனோ என்னிலை கண்டால்
என்னா குவன்கொல் எனப்பல எண்ணி
வருந்தினை கொல்லோ பெருந்தகைப் பாடலம் !
(தடவிக் கொடுத்தல்)
மலை: நீருள் மூழ்கினேன் ஆருயிர் கலங்கி
மூச்சுத் திணறிப் பேச்சுமூச் சின்றி
ஆவி யடங்கி வீவுறு நிலையினும்
தப்பிப் பிழைக்கின் அப்பெறு நிலைகண்
டுடையோ ருவத்தல் நடைமுறை யாகும்.
எப்படி யோகை தப்பிய விப்பரி
கையுறப் பெற்றது மெய்யுறு பேரும்.
விடுக துயரம் தொடுகழ லோயே.
பழை: அகத்த துவகையை முகத்திடைக் காண்குநன்
(கனைத்தல்)
இன்பக் குரலெனை இன்புறச் செய்தது.
துன்பந் தவிர்ந்தேன் அன்புறு பாடலம் !
அன்பா லினிதித் தென்பாலி யாளும்
மலைய மன்னன் நிலைஇய அன்பால்
தலைப்பெய் தனிமன் மலைப்புறு பாடலம் !
இனியொரு நொடியும் உனையான் பிரியேன்
அன்பே இன்பே முன்போ லிருப்போம்
இழந்தகண் பெற்றா லென்ன
உழந்தவென் னுள்ள முவந்தனன் மன்னே. 1

திரை-2: மாடம்: காமஞ்சரியும் மாலதியும்.

மால: அன்னுய் வந்துபார்! என்னகட் டழகு!
கண்ணு ளாளர் பண்ணிய பாவையோ,
கண்ணுளார் தீட்டிய வண்ணவோ வியமோ,
விண்மணி யோநம் கண்மணி யதனில்
இனிதுறை பாவையோ வனேதரு மாவியோ
என்னிப் படியொளி மின்னற் கொடியோ!

காம: என்னது?

மால: நன்னுதல்! என்னெனப் பகர்வேன்?
நின்பே ருடைமை அல்லத தன்பே
ருரிமை நீயே பெருமழைக் கண்ணி!

காம: என்னடி உன்சொல் வன்மையை முன்போல்
இன்னமும் என்முன் இன்னெனக் காட்டத்
தலைப்பட் டனையோ! இலைப்பட் டுடைக்குள்
குற்றியை நாட்டிப் பொற்றெடி மகளெனக்
காட்டுவார் போல நாட்டுகின் றனையோ!
சொல்லடி தெளிவாய்ச் சொல்லவந் ததனை.

மால: செந்துவ ரிதழி வந்துபா ரிங்கே!
மங்கா மதியே இங்கே வந்துபார்!
கொந்தார் குழலே வந்துபா ரீதோ!
பேசாக் கிள்ளை வீசாக் கோடை
பறக்காக் கொக்கு நறுக்காக் கொய்யுளை
அணியாப் பிடலம் கணியாக் கோணம்
வெடியா வெண்பரி இடியாக் குந்தம்
பரவாத் தூசி கரவா வாசி
கனியா இவுளி இனியா மாஅ!

காம: என்னடி புதிராப் பன்னடி தெளிவா.

மால: உந்தை மருகன் வெந்துய ரெய்தி
நொந்துள நைந்துக ரைந்துவ ருந்தப்
பிரிந்தெங் கேயோ இருந்த குதிரை
வந்து விட்டது.

காம: வந்து விட்டதா!

என்னுயி ருக்குயி ரன்னவர் தன்னுயி
ருக்குயி ராயியல் மிக்கவப் பாடலம்
வந்து விட்டதா ! வந்துவிட் டேனிதோ
எங்கே ?

மால்: அதோபார் !

காம: எங்கைநீ சொன்னது
முற்றிலு முண்மை ! மற்றிஃ துண்மையில்
குதிரை தானு இதன்முன் இதுபோல்
கண்டது மில்லை, கண்டவர் சொல்லக்
கேட்டது மில்லை வாட் டடங் கண்ணி !
அன்னவர்க் கேற்ற இன்னதற் குவமை
உண்டோ உலகில் ! கண்டே — இதனை
உளவரை நில்லா அளவிலா உவகைப்
பெருக்குற் றிருப்பர் முருக்கித ழேயவர்.

மால்: இழந்ததை யடைந்தால் விழைந்துள முவந்திடல்
இயல்பே யார்க்கும் கயலிய லுண்கண் !
அன்றவர் கவர்ந்து சென்றவுன் உள்ளம்
எய்திய போழ்து செய்தரு பயன்கைப்
பெற்றவர் போலின் புற்றனை யன்றே !

காம: அருகினிற் சென்றதன் அழகினைப்
பருகிட அவாவுதென் இருதடங் கண்ணே. 2

—: o :—

## ஐந்தாங்களம் இரண்டாங்காட்சி (26)

இடம்: காவிரிக் கரைக் காவற் பாசறை. காலம்: பிற்பகல்

நடிகர்: பழையன் (தனியாக)

பழையன் நிகழ்ந்தவை கூறி மகிழ்தல்

(நேரிசை யாசிரியப்பா)

பழை: (தனி மொழி)
தீம்புனல் பரந்த காம்பன கன்னற்
கணுக்கை யாட்டி மணக்குறு தாமரை
மலர்முகங் காட்டி அலர்புகு சுரும்பர்
இன்சொற் கூறி அன்புட னவ்வழிச்

செல்லுநர்த் தடுத்து வள்ளியோர் போல
விரும்பியே யருந்தக் கரும்புட னிளநீர்
இனிமையி னியல்முக் கனியொடு பிறவும்
விழைவுட னீயும் பழனக் காட்சியும்.
பாடி முன்றில் நீடிய குருந்த
நீழலில் மகளிர் எழிசை யாக
நிரல்பட நின்று குரவை யாட
வீழிசைக் கிள்ளை யாழிசை பாட
கூடியே குரவை யாடிடு மகளிர்
ஆகவான் கோழி தோகைபோ லாடும்
தெறும்படர் மரமார் புறவக் காட்சியும்,
ஓங்கிவா னுயர்ந்த வேங்கைவீழ் மலரை
வாள்வரி யென்னத் தாள்வலித் தாங்கே
வெருவியே யோடும் திரிமருப் பிரலை
முளிபடு புனத்துக் கிளிகடி மகளிர்
இன்குரல் கேட்டப் புன்கணை மறந்து
பிணையொடு நின்றுங் கிணைபட இன்புற,
முட்டாக் கோட்டுள எட்டா வேங்கைப்
பூக்கொய நல்லார் புலிபுலி என்னும்
ஆக்குரல் கேட்டே அஞ்சி நடுங்கி
முன்போல் விரைந்து தன்பா லோடும்
வான்படு முடிய கான்படு சாரல்
புறஞ்சிறைப் பட்ட குறிஞ்சிக் காட்சியும்,
இன்னன பிறவும் முன்னுற அன்று
காதற் காட்சியாப் போதர முடிந்தன.
ஆங்ஙனம் கண்ட பாங்குறு காட்சி
இயற்கைப் புணர்ச்சியாச் செயற்படா விடினும்
காட்சி யளவா மாட்சிமை யுற்றென்,
உள்ளங் கொண்டஅவ் வொள்ளிழை போலக்
கள்ளங் கொண்ட உள்ள முடையோர்
என்னுயிர்ப் பாடலந் தன்னைக் கொண்டனர்
களவே யிரண்டும் அளவையின் பாற்படின்.
ஒள்விழி கொண்ட உள்ளக் களவும்

கள்வர்கள் கொண்ட கள்ளக் களவும்
உள்ளமும் உயிரும் கொள்ளத் தந்தன.
உள்ள மில்லா உடம்பின் இயக்கம்
அள்ளுறு கயிற்றி னுல்மரப் பாவை
இயங்குதல் போலும் ! வயங்கிழை தந்தை
இப்பெருஞ் சிறப்பினை ஒப்புற நோக்கி
களவுப் பொருள்களோ டுளங்கொள் கள் வனையும்
யான்பெறத் தந்தே வான்புகழ் கொண்டனன்.
தன்பெரும் பகையா முன்பொரு தினத்தே
ஏற்றெதிர் நிற்ற லாற்ரு தவனுய்
வெந்நுற் ரேட முன்னுற்று நின்று
தாக்கிய என்னையும், தாக்குதற் குறுதுணை
யாக்கொடு நின்றே ஊக்கிய என்னுயிர்ப்
பாடலந் தன்னையுங் கேடெனக் கருதா
அன்னவன் தகைமையை என்னெனக் கிளப்பல் !
அடித்தவன் தன்னைக் கடித்துயிர் கொல்லக்
காலம்பார்த் திருக்கும் பாம்பென ஞாலத்துப்
பொல்லா மாக்களும் இல்லாம லில்லை.
ஒருதவற் றுக்கா வருநா ளெல்லாம்
ஊட்டி வளர்த்தன்பு காட்டிய பாகனை
இடறியே கொல்லும் கடகளி றனையரும்
உண்டிவ் வுலகிற் கண்டதோ ருண்மையே.
காயோ கனியோ என்றுள மாயத்
தடுமா றியபடி அடையார் நகருள்
சென்றதும் மாடமேல் நின்ரே ருருவம்
காயல கனிதான் ஆயவேண் டுவதில்
என்றது, பார்ப்போம் என்றரண் மனைக்குள்
நுழைந்ததும் ஐயமில் விழைந்துணும் கனியே
எனக்கொளு முறுதி மனக்கொளச் செய்தது.
முதன்முதற் கண்டதும் புதன்மலர் மலர்போல்
முகமலர்ந் தினியன கூறி அகமலர்ந்
தன்புடன் வரவேற் றின்புடன் அமர்கென
இருக்கை தந்து நெருக்குற நாணம்
எற்பா ராட்டி எற்குறை மாற்றிப்

பெற்ரோர் தங்கடன் இற்றென வுணர்ந்து
வரைவுடன் பட்ட பெருந்தகை யுன்னின்
விரையிலா மூக்கிற் கரியிலாக் குன்றி
மணியெனத் திகழும் அணிதகை யாளன்
என்பதில் ஐயம் இல்லவே இல்லை.
மன்பதை காக்கும் மலையன் தன்மகள்
என்வாழ்க் கைத்துணை யானது. பொன்வாள்
எஃகுடை யதுவாய் அஃகுத லில்லாத்
தகைமிக ஆற்றல் வாய்ந்த தறுகண்
பகைதெறு வோன்கைப் பட்டது போன்மே.
இமையகன் றுறினும் எமைப்பிரிந் தீரெனும்
அத்தக வுள்ளம் ஒத்தவன் புடையாள்
வரைவிடை வைத்தவிப் பொருள்வயிற் பிரிவை
எங்ஙனம் ஆற்றுவள் கொல்லோ ! சங்கினம்
ஈன்றமுத் தென்ன வான்றரு மழைக்கண்
துளிக்குநீர் துடைத்தயர் தோழி
களிக்குமா றுஞற்றல்நம் கடப்பா டாமே. 1

உள்ளமு முயிரையுங் கொள்ளை கொடுத்தே
வெற்றுடல் தாங்கி நிற்றிடு காலை
வழியிடைக் கண்டோன் மொழியிடைப் பட்டு
விழைந்தாங் கெய்தினன் இழந்த பொருள்களை.
அகம்புறப் பொருளின் முகம்புகு முறுப்பினுள்
இன்றி யமையா நின்றவர் கண்டோர்
என்மரே யாவர்; இன்மைய ராயின்
எண்டிசை யுலகிற் பண்டைய வரலாற்
றுண்மை நிறைவுரு எண்மையின் முடியும்.
இடையிடை நிகழும் நடைமுறை நிகழ்ச்சி
இடையரு தாங்கொரு தொடர்புறச் செய்து
பொற்றொடர் போல்நிகழ் நற்றொடர் நிகழ்வை
முற்றுறச் செய்யும் பெற்றிய ரிவரே.
வாழ்க கண்டோர் வழிவழி
சூழ்கநன் னிகழ்வோர் தொடர்புற வினிதே. 2

—O—

## ஐந்தாங்களம் மூன்றாங்காட்சி (27)

**இடம்:** தென்பாலி அரண்மனைக் கன்னி மாடம்.
**காலம்:** மாலை, இரவு, வைகறை.

**நடிகர்:** காமஞ்சரி, செவிலி, தோழி.

### காமஞ்சரியின் பிரிவாற்றாமை

(நேரிசை யாசிரியப்பா)

**காம: (தனக்குள்)**
இன்றுடன் எட்டுநாள் ஆனது சென்றவர்
ஆனால் ஆங்கது நோனா எனக்கோ
எட்டாண் டாகி விட்டது நீண்டு.
பகலினும் இரவே மிகமிக நீண்டது
நானிது காறும் தானிதை யறியேன்.
செயன்றயர் வகலத் துயின்றின் புறீஇப்
பிறப்பின் பயன்பா டுறப்பெறு மக்கட்
கிரவு பகலென வரையறைப் பட்ட
பகலினு மிரவே மிகக்குறு கியது.
படுத்ததும் பொழுது கொடுத்ததன் கடனைக்
கேட்பது போல நாட்படக் காய்ந்து
வந்த தென்றுசி னந்தது போக,
கெடுமதி யாளன் கொடுமையாற் றாது
நான்படும் பாடு தான்சிறி தறியான்
மெலியோர் வலியரால் நலிவுறு காலை
மெய்யுறு நோய்க்குக் கையுத வுதல்போல்
தான்வந் துதவுதல் வான்வந்த புகழோன்
தன்பெருங் கடனும் என்பதை எண்ணான்
இராப்பகை யஞ்சி வராப்பகை யாகி
நின்றனனோ துணைக் குன்றினை யணுகா
தன்றியந் நிலையினு நின்றிட வஞ்சி
அங்குநின் றகன்று செங்கதிர்ச் செல்வன்
எங்குசென் றனனோ அங்குமென் போன்றார்
இலர்கொல் போலும்! அலதிவ் வுலகை
விட்டுவே றுலகைக் கிட்டிநல் வாழ்வு
பட்டிடக் குடிபோய் விட்டனனோவென

வெந்தழல் போன்றுசி னந்திட லானேன்.
ஏனெனக் கிந்நிலை தானறி கில்லேன்.
எய்யா மையினுல் பொய்யா கிடைமான்
விழிபான் மொழியாழ் பழிமா லதிமுன்,
போதலர் கண்ணி ! காதலற் பிரிவை
ஆற்ரு மையினுல் கோற்ருெடி யொருத்தி
இருவகைக் குறியையும் இழந்தாங் கொருவா
மனைப்படு செறிவால் தனிப்படர் மெலிவால்
வாடிய மேனியைக் கூடியே பசப்புத்
தின்ன அழகெலாந் தன்னைவிட் டகலப்
பாலுங் கைப்ப நாலும் பொய்ப்பத்
தூங்காக் கண்ண ளாகி நீங்கா
நினைவாற் சிறிது நனவி னன்றிக்
கனவி லேனுங் காண்மெனக் கண்படின்
அரைகுறை யாகத் திரையிறங் குதல்போற்
பொருக்கென விழிப்ப வெருக்கென வெழுந்து
நீங்காத் துயரந் தாங்ககில் லாது
தனிப்பெருந் துயரால் அனைத்தையு மறந்து
வருந்துகின் ருளெனப், பெருந்தடங் கண்ணி !
ஏனிப் பெரும்பொய் நானுைப் புகிலேன்
பிரிவும் பிரியின் பிரிவாற் ருமையாம்
தாங்காத் துயராம் தூங்காக் கண்ணும்
என்னடி யீது தின்னடி வேம்பு
கரும்பென இனிக்கும் என்றிடின் விரும்பித்
தின்போ ருண்டோ ? உன்பே ருரையை
நம்பேன் நானென நகைநனி யாடி
வம்பே செய்தது வாலறி வின்மையி
ஞலே யாகும். மாலதி சொன்னது
பொய்யே யன்று மெய்யே என்பதை
எற்பட அறிந்தேன். சொற்படு பொருளிற்
சரிநிக ரற்றது பிரிவுத் துன்பம்
என்பதி கூயம் என்பதே இல்லை.

மால : அன்ஞய் வாராய் ! என்னே யீங்கே

உரித்தெறி சுளைபோல் ஒருத்தியுந் தனியே
இருந்தோன் றிழந்து வருந்துநர் போல
மலர்முகங் குவிந்து நிலமிசைக் கீறி
பேதுறு நிலையில் ஏதெதோ வாய்க்குட்
பேசு கின்றனை மாசிலா மணியே!
காம : ஒன்று மில்லை மன்றலங் குழலே!
குளமல ராம்பற் குவியித ழளிபோற்
களவிடைப் பட்டுக் கவலை மீதுற்றுத்
தலைவனைப் பிரிந்த நிலையினை எண்ணி
ஆங்கவற் கூடும் பாங்கினி லேநம்
பாடலம் என்ன பாடுபட் டிருக்கும்
என்பதை யெண்ணித் துன்புறு நிலையில்
இருந்தனன்.
மால : ஓகோ! திருந்திழாய் அதுவா!
திரிபடு கூந்தல் சுரிபட வாரி
வகைபெற முடித்துத் தகைபெற நறும்புகை
ஊட்டிப் பொலிவுறச் சூட்டிப் பல்பூ
விண்மதி மருளத் தண்முக மதியின்
கண்ணெழி லுறப்பொற் சுண்ணம் பூசி
வாயிடைக் கொவ்வை மேயதென் றிதழ்க்கு
வண்ணம் பூசிக் கண்ணினுந் தோளினும்
மையுந் தொய்யிலும் தையுற எழுதி
ஓவியப் பாவையின் மேவுற எழுந்துவா!
காம : யார்கண் டுவக்க?
மால : யார்கண் டுவக்கவா!
விழைதரு மகளிரின் அழகிய முகமெனத்
தாமரை மலர்வதும் காமுறு குவளை
கண்ணென மலர்வதும் வண்ணவா யிதழெனக்
குமுத மலர்வதும் அமிழ்துறழ் கிளவியர்
பல்லென மல்லிகை முல்லை மலர்வதும்
யார்கண் டுவக்க? யார்கண் டுவக்க
வெனவுனைப் போலப் புனைநறு மலர்கள்
பிறர்கண் டுவக்கவும் அறல்மென் குழலில்
எடுத்தெழி லொழுகத் தொடுத்துநாம் சூடவும்

மலர்வனவ ல்ல இலவிதழ் நல்லாய்!
காம: பின்னெதற் காக அன்னவை மலர்குந?
மால: நாங்கண் டுவக்கவும் தேங்குழல் சூடவும்
ஆங்கவை மலர்குந அல்ல, பூங்குழல்!
உலகினில் அழகெனும் ஒருபொருள் இன்றேல்
இலகிடும் பல்வகை உயிரும் நிலவிடும்
எலும்புந் தோலும் இலையுங் கிளையுமா.
தசையும் சோறும் பசைபடு நீரிற்
குழைவுற் றுலகம் விழைவுற் றிடும்வகை
காண்போர் கண்ணைக் கவர்தரு மாண்போ
டமைந்துள தியற்கை யழகென வமைந்த
அத்துட னமையா தொத்தமைந் துளவவ்
வியற்கை யழகைச் செயற்கை யழகால்
உடையணி வண்ணம் தொடைமுடி பிறவால்
மேம்படச் செய்து காம்பன தோளி!
இன்புறல் மக்களின் இயல்பாம் என்பதை
அறிவாய். அன்றியும் அறிவுத் திறத்தால்
இயற்கை யுலகைச் செயற்கை யழகுற
ஓவியந் தீட்டலும் பாவை கூட்டலும்
அத்தக வெழிலுடன் ஒத்திய லுதல்நன்
றென்பதன் குறிப்பே என்பதும் அறிவாய்.
அழகும் அறிவும் அன்பும் ஒழுக்கமும்
உடையோர் பெருமை உடையரா விளங்குதல்
கண்கூ டன்றோ? மண்கூடு பொருளில்
அழகி லதனை விழைகுந ருண்டோ?
குயிலின் குரலும் மயிலின் இயலும்
சேவலின் பூவும் ஆவின் கோடும்
அல்லவோ அவற்றை நல்லவை என்ன
விருப்புறச் செய்கின் றனமை மருப்பையும்
கழுதையின் குரலையும் விழைகுந ருண்டோ?
அமையா அழகின நமைப்பிறர் கண்டு
விரும்பவேண் டாவென விரும்புந வோகொல்!
விழைந்திடும் எழிலுடன் மேவ
எழுந்துவா பழையன் விழைந்திடுங் கொழுந்தே. 1

**காம :** உண்மையே ; ஆனால் உண்மையில் ஏனோ
ஒப்பனை செய்து கொள்ளவி ருப்பம்
இல்லை யெனக்குச் சில்லரி நெடுங்கட்
கோதாய் ! நீசும் மாதொந் தரவு
செய்யா தேபோ.

**மால :** நெய்யார் குழலே !
அப்புறம் உனதுவி ருப்பம், வருகிறேன்.

(போக)

**காம :** யான்பட்ட பாட்டைத் தான்பட் டிலதால்
ஏதேதோ உளறினள் பாவம் ! சூதறி
யாதவள் அன்பினல் யாதவள் சொல்லினும்
வெறுப்பிலை யெனக்குக் குறிப்பறி யாது
செய்ததென் பாலவள் மெய்தகு தொடர்பு.
என்னல் வாழ்வில் அன்னவ ளுக்கோ
எவ்வள வக்கறை ! இவ்வள வினிலே
விட்டுமே சென்றது மட்டுமென் பாக்கியம்.
மல்லிகை வெண் சங் காக மெல்லெனக்
களிவண் டூத, வளைவா யன்றில்
இன்குரல் முழவ மிசைப்ப, நன்குசெம்
போத்துத் தாளம் போடப் பூத்த
முல்லைத் தொடைதோ ளசைய, வல்லே
புணர்ந்தார்க் கின்பமும் தணர்ந்தார்க் காளுத்
துன்பமுந் தரூஉம் அன்பில் லிரவின்
ஒருதா தாகி மருள்புன் மாலையும்
வந்த து. மாலதி வந்து
தொந்தர வதனைத் தொடங்குவள் மன்னே. 2

---

**திரை-2.** பள்ளியறை காலம் : இரவு

**நடிகர் :** செவிலி. காமஞ்சரி.

**செவி :** என்னவென் கண்ணே ! முன்னிலை யாரிடம்
பேசுதல் போலப் பேசியென் னென்னவோ
உளறு கின்றனை வளரிளங் கொடியே !

**காம :** ஒன்றுமில் லம்மா ! சென்றநா ளாயத்
தொடுவினை யாடிய தொடுவினை யாட்டில்

தோற்றது பற்றி ஆற்றகில் லாது
கண்ணிய வண்ணம் எண்ணினன் துயில.
நனவினிற் பட்டது கனவினிற் பட்டு
வாயிடை வெளிப்பட லாயது பேச்சாய்
மற்றொன்று மில்லை.

**செவி :** சிற்றிடை மானே!
பக்கத்தில் நெருங்கிப் படுத்து மைக்கண்
இறுகப் புல்லி இமையின் மறுகின்
நாட்படு வாயொலி கேட்குங் காறும்
உறங்காய் அமைவாய் மறங்கால் வைவேல்
மன்னன் மகளே என்னுயிர்க் குயிரே!

**காம :** சரிசரி அன்னாய்! எரிகதிர்ச் செல்வன்
காலதர் வழிவந் தெழுப்புங் காலும்
தூங்கு கின்றனன்.

**செவி :** ஆங்கது வேநலர்.
தூங்காய் என்வடு மாங்காய் விழியே!
(செவிலி தூங்க)

**காம :** பயந்த தாயிற் பரிவுட னணைத்தே
அயர்ந்து தூங்கு கின்றனள் அன்னை.
ஆனால் என்கண் படுதல் ஆனா.
கொக்கரக் கோவெனக் கூவி யெழுப்பும்
அக்கறைக் கோழியும் அயர்ந்தன போலும்!
விடியா முன்னர் மடியில் நெருப்பை
இட்டுக் கரைந்தே எழுப்புங் காக்கையும்
முட்டத் தின்றுகண் பட்டத னாலெழ
மறந்தன போலும்! பறந்துவா லாட்டிக்
கீச்சுக் கீச்சென மூச்சு விடாமல்
நில்லாக் கத்தும் பொல்லாக் காரியும்
ஆங்காங் கயர்ந்து தூங்கின போலும்!
இருள்புறங் கொடுப்ப வருபக லோனிப்
பொல்லாப் புட்களின் வல்லுரை யோர்ந்து
வருகை தவிர்ந்தனன் போலும், பெருமழைக்
கண்படா தொருத்தி கலுழ்ந்து
புண்படு நெஞ்சொடு புலம்புக வென்றே.

—: O :—

## ஐந்தாம் களம் நான்காம் காட்சி (28)

இடம் : தென்பாலி நகர் காலம் : காலை, விடியல்.

நடிகர் : மலையன், நகர்மக்கள், முரசறைவோன் (மணமக்கள்)

திரை-1: நகர்த் தெரு காலம் : காலை

### திருமணம்

(நேரிசை யாசிரியப்பா)

முன் : திருவீற் றிருக்கும் தென்பாலி நகரின்
ஒருவீற் றிருக்கும் உயர்குடி மக்காள் !
மன்னவன் மகளை அன்னவள் விரும்பிய
அன்னவன் றனக்கே மன்னவன் வாழ்க்கைத்
துணைவி யாக்கத் துணிந்துடன் பட்டனன்.
விஞ்சுநல் லியல்கா மஞ்சரி பழையன்
திருமணம் நாளை வருமதி காலை
நடைபெறும் என்பதைக் கடிமுர சறைந்து
நந்நகர்க் குரையெனல் மன்னவன் ஆணை.
இந்நகர் மக்காள் ! மன்னவன் மகள்போல்
இப்பெரு நகரை ஒப்பனை செய்ம்மின் !
நட்பும் சுற்றமும் சூழப் பெட்பின்
மன்மிகப் போந்து நன்மண மக்களை
வாழ்க வாழ்கென வாழ்த்துமின்
சூழ்கழல் மன்னன் துணையொடு பொலிந்தே. 1

---

திரை-2: நகருள்

நடிகர் : ஒருத்தி, மற்றொருத்தி.

ஒரு : பெற்றவர் கடனைத் தெற்றென வுணர்ந்து
காதலர்ப் படுத்த மேதக மன்னன்
எய்துக பெருமை இனிதின்
செய்தொழில் முடித்துச் சிறப்புடன் பொலிந்தே. 2

மற் : ஈங்கிவர் களவை அறிந்தே ஆங்கவர்
பாடலந் தனைக்கள வாடினர் போலும் !

தகாஅக் களவு தகுமிக் களவைக்
கற்பின் பாற்படக் காதலர்
பொற்புறச் செய்தது பொலிகமன் சிறந்தே. 3

திரை-3. மணவறை காலம் : விடியல்

நடிகர் : மலையன், அவையோர், ஒருத்தி, மற்றொருத்தி.

ஒரு : பிறப்பும் குடிமையும் சிறப்பியல் ஆண்மையும்
பருவமும் உருவமும் அருளும் அன்பும்
நிறையும் திருவும் அறிவும் என்ற
ஒப்புமை பத்தும் ஒருங்கே அமைந்த
இப்பெருங் காதலர் இல்லறம்
ஒப்புயர் வின்றி ஓங்குக மன்னே ! 4

மற் : ஒருவரை யொருவர் பொருவற வொத்தவிக்
கிழவனும் கிழத்தியும் விழைவுடன் என்றும்
தீரா வின்பம் திளைத்தே
ஆரா வன்புடன் அமைகதில் மன்னே ! 5

மலை: விரும்பிய படியே விரும்பிய வனுக்கே
கொடுத்தனன் எடுத்துத் தொடுத்திடா மலரே !
மணத்தகு மாண்புடை யாளாய்த் தணத்தகத்
தாழ்வாங் கின்றித் தகவொடு
வாழ்வாங் கினிது வாழிய சிறந்தே ! 6

(வாழ்த்து-மருட்பா)

அர் : வள்ளமலர்த் தேன்பருகும் வண்டேபோற் கண்டாங்கன்
றுள்ளம் பருகியின் றென்றுணீர்-கள்ளவிழும்
பூவும் மணமும் பாவும் பொருளும்
நாவும் சுவையும் போல மேவிய
இன்னே போல என்றும்
மன்னிய அன்புடன் வாழ்கவின் புற்றே. 7

—: O :—

## ஐந்தாங்களம் ஐந்தாம் காட்சி (29)

இடம்: காவிரிக்காவற் பாசறை. காலம்: பிற்பகல்

நடிகர்: வீரர்கள், சிறுவர்.

திரை-1. ஊரகம். வீரரின் வீரப் பொழுதுபோக்கு

(நேரிசை யாசிரியப்பா)

வீ-ன்,1: அன்பா வாராய் இன்பாய் இன்று
சிவலும் பூழும் சேவலும் தகரும்
தவலற எதிர்பொர விட்டுக் கவலை
யின்றிக் கண்டவ் வென்றியை யுள்ளம்
கனிபடு கொடிபோல் நனிகளித் திடுவோம்.

வீ-ன்,2: முன்னரே யானும் இன்னதே எண்ணினேன்
கண்ணிணை இமைகள் காத்திடும் வண்ணம்
நிலையா நின்றும் அலைபோற் சென்றும்
காத்திடு வதனாற் பூத்தொழி செடிவாய்
வருமளி யிலைபோல் பொருதிட முயலி
வருபகை யிலவால் இரவொடு பகலாய்
வாட்டுரு தின்னத் தோட்டின வுண்ண
வாளாக் கழித்துக் கேளாக் காதுபோல்
ஆள்வினை யின்றி நாள்கழி வெண்ணி
ஊக்க மிழந்து மீக்குறு கவலை
உளங்குடி கொள்ள இளங்குடி மக்கள்போல்
வீந்திடு பயனோடு வாழ்ந்திட லானோம்.
ஆகையால் அத்தகு வாகையி லாயினும்
ஒருவா றுள்ளம் புரிமா றுவகை
செய்குவம் நம்மொடு சேரப்
பெய்குவை பிறரையும் செய்பொரு களத்தே! 1

---

திரை-2. பொருகளம்

நடிகர்: ஒருவன், மற்றொருவன்.

### 1. சிவல் வென்றி

ஒரு: கழுத்தை யிறுக்கிக் கட்டிய கொழுத்த
பணப்பை யிருகால் மணைப்பட வைத்தது
போலுமிச் சிவல்கள் சாலவே யெதிர்ந்து
மல்லாந்து விழுவன போல வல்லாங்கு
காலா லெற்றித் தோலா தொற்றிப்
பொருவன காணாய்!

மற்: அடடா! விரிசிறை
கொண்டடித் தேபுறங் கண்டடித் திறகை
மூடக்குறுங் காலன் போல மிடுக்கொடு
நிற்றிடல் காணாய் நிமிர்ந்து.

ஒரு: மற்றது
திரும்பிப் பறந்து சிரும்பிப் பாய்ந்து
மேல்விழுந் தேயதன் பால்கொழுந் தெரிகொள்
ளியைப்பாய்ச் சுதல்போல் முயற்பா லலகால்
கொத்துகொத் தென்று கொத்துதல் பாராய்!

மற்: ஆங்கது மதுபோல் ஓங்கி யோங்கிக்
கொத்திக் கொத்திக் கொத்தித் தத்தளித்
துருண்டன குழவிபோ லிரண்டும்.

ஒரு: உருண்டு
புரண்டெழுந் திரண்டுமுன் போல
மருண்டிடக் காண்போர் மலைதலைக் காண்மோ. 2

### 2. பூழ் வென்றி

மற்: பெருவெங் காயம் போன்ற உருவங்
கொண்டவிப் பூழி ரண்டும் உருவுகண்
டெள்ளா தீரென் றுள்ளுறச் சினந்து
குன்றென எண்ணி நின்றெதிர் பவளக்
கொடிக்குறுங் கால்கொண் டடிக்குதல் பாராய்.

ஒரு: அடித்தடித் திரண்டும் துடித்திடு முயிர்போற்
கிடக்குந பாராய்.

மற்: படக்கென எழுந்து

பொல்லாச் சிறகை வல்லாங்கு புடைத்துக்
கொண்டு சிலிர்த்துக் கண்டவர் வியப்புற
எதிரெதிர் சிருஅர் விதிர்தர உருட்டிய
கூவ்ளங் காயெனத் தாவிப் பறந்து
மோதுதல் பாராய்.

ஒரு: மோதி யிரண்டும்
அப்படி யேமல் லாந்து தொப்பென
விழுந்துருண் டெ ழுந்து கொழுந்துதீக் கழுந்துபோல்
முன்னரே போலப் பின்னரும் பொருதே
உவப்பும் வியப்பும் ஒழுங்குறக்
கவிப்புறக் களத்தைக் கலக்குதல் காண்மோ. 3

### 3. கோழி வென்றி

ம்ற்: முழுக்கத் தோய்ந்துலெ பழுக்கக் காய்ந்த
அரைக்கருக் கரிவாள் தரிக்குபு தலையில்
இலங்குறு சேமக் கலங்க ளிரண்டை
அலைபெற மோவாய் நிலைபெற ஞாற்றி
நெட்டிலை போலப் பட்டகூர் வேல்களைச்
சுற்றிக் கழுத்தில் முற்றுறக் கட்டிப்
பின்புறத் துயர்த்து வன்புற வாங்கு
வாள்களை நிரலே கீள்படத் தரித்து
வாட்டுமுட் காலிடை ஈட்டியைப் பரித்துக்
கொண்டபோர்க் கோலங் கண்டவர் நெஞ்சு
விருக்கென நிமிர்ந்துகொக் கொரக்கோக் கோவென
இகலுரை பயிற்றி மிகலுறக் கழுத்தணி
வேல்களை யுயர்த்துக் கால்களை வலித்து
வெஞ்சினங் கால மஞ்சிவர் குன்றென
நிலத்துமண் கொத்தித் தொலைத்திடு வேனெனக்
களத்திடை பொரவுளங் களித்தெதிர் நிற்குமப்
புகன்மறச் சேவல்தம் இகலினைக் காணுய்.

ஒரு: தொடங்கின பெரும்போர் படங்கொள் பாம்பென
வளைவாய்த் தலையினை வளைவாய் நீட்டி
விழித்துவர் சினத்தை வழித்துமுத் துதிர்த்த
அகம்பட உடன்று முகம்பட எதிர்ந்து

முனைவதைப் பாராய்.

மற்: புனைகழல் மறவர்
இருவ ரெதிர்நின்று பொருவது போன்று
கையாங் தாலை ஒய்யென ஓங்கிக்
குத்துகுத் தென்று குத்துதல் பாராய்.

ஒரு: விரிந்தது விழுப்புண் சரிந்தது நெடுங்குடர்
அலரி மாலைபோல் நிலமிசைப் பட்டது.

மற்: எங்கே ஊசியும் நூலும், இங்கே
கொணர்கெனக் குடரை யணருபுண் வழியாய்த்
திணித்துப் புண்வாய் இணைத்துத் தைக்கிறார்.

ஒரு: தைத்து விட்டது. தைத்ததை மறந்தே
எதிரியை நோக்கி அதிர்குர லெழுப்பி
எரிசினங் கான்று பொருதிடச் செல்லுதல்
பாராய்.

மற்: இரண்டும் நேராய் எதிரெதிர்
நின்றுகால் வீசி ஒன்றனை யொன்று
தாக்குதல் பாரும்.

ஒரு: ஊக்கியே யிரண்டும்
தலையொடு தலையைக் கொத்தி உலையாது
படுகிடைப் பட்டு வடிபடு காலால்
எற்றி யெற்றிப் பற்றிய பற்று
விட்டில வாகக் கட்டித் தழுவிக்
கையினுங் காலினும் மெய்யினில் தாக்கும்
மல்லரைப் போல வல்லிதின் இரண்டும்
தாக்குதல் பாராய்.

மற்: தாக்கிய தாக்கால்
இளைத்துக் களைத்துத் துளைத்தவாய் குருதி
கான்றிட வேயெதிர் ஊன்றி நின்றிட
ஆற்ரு ஒன்று தோற்ரே டுவதைக்
கண்டுமே இழிவு கொண்டுபே சுதல்போல்
கண்ணுர்ந்து கூவி அண்ணுந்து நிற்பதைக்
காணுய் அதன்மறக் காட்சி
ஆணு கியநம் அடல்குறித் தன்றே.

## 4. தகர் வென்றி

ஒரு: நெட்டூர் பட்டநம் கட்டூர் ஐயன்
மட்டற முறுக்கி விட்ட மீசைபோல்
திரிதரு கொம்பை விரிதரு சொட்டைப்
படையாகக் கொண்டு மிடைதர எதிரெதிர்
மாவாய் நக்கி மோவாய் விக்கி
மடிகா தாட்டிப் பொடிவால் நீட்டி
முன்கால் வாங்கிப் பின்கால் தாங்கிப்
பொரத்தகு நிலையில் உரத்துடன் நிற்குமப்
பொருதகர் மறநிலை தெரிதரக் காணாய்.

மற்: குன்றுங் குன்றும் ஒன்றோ டொன்று
முட்டுதல் போல முட்டுதல் பாராய்.
இடியிடி யென்ன இடியும் இடியும்
ஆற்றல் முழுதும் ஏற்றழல் போலச்
சினந்தெதி ரிடிப்பது போல முனைந்து
இடிப்பதைப் பாராய். வெடிப்படு மொலிபோல்
முதிர்மரக் காவின் எதிரொலி பட்டுப்
படக்கென நெஞ்சம் திடுக்கிடக் களத்துத்
தழங்குபோர் முரசென முழங்குதல் கேளாய்.

ஒரு: ஏனோ அவைபின் வாங்குந, நோனா
தோட்டெடுக் குநபோன்ம்.
வேட்டெழு மன்னர்
காலங் கருதி யிருப்பது போல
முனைந்துதாக் கற்கு நினைந்தவை யங்ஙனம்
பேரா நின்றன. பாரா யதோ அவை
போட்டிபோட் டோடும் மோட்டிளஞ் சிறார்போல்
காய்ந்து பறந்து பாய்ந்து விரைந்து
நோக்கிமுன் ஓடித் தாக்கிடுங் கடுமையை;

ஒரு: உடைந்தது மண்டை யதற்கு. கடைந்தெடு
வெண்ணெய்போல் மூளை மண்ணிடைச் சிதறி
விற்றுமீள் ஆய்மகள் வெற்றுக் கலம்போல்
மற்றது தோன்றுதல் பாராய். அற்றதோ
அதுமறம்! இல்லை. எதிர்பொரும் அதற்கு

மடுத்தெதிர் ஈடு கொடுத்திட முனைந்து
நின்றிடும் அதன்மறம் நினைக்கின்
வென்றியின் புகழ்போல் ஒன்றிய தின்றே. 5.

5. சிறுர் வெற்றி

நடிகர்: ஒரு சிறுவன், மற்றொரு சிறுவன்.

ஒரு: இத்தனை வெண்ணெயும் இத்தனை மோரும்
தருகிறேன் அஞ்சேல் நரிவரின்.

மற்: இல்லை.
வேல்வரின் அஞ்சாக் கால்வழி என்பதை
அறியாய் போலும்!

ஒரு: அறிவேன். சரிநீ
மிடுக்குடன் நிமிர்ந்து நடப்படு மரம்போல்
விறைத்து நேராய் முறைத்துப் பார்த்துத்
திண்ணென நில்லாய் கண்ணிமை யாது.

மற்: சொல்லிய படியே வல்லிதின் நின்றனன்
கடலென மேல்வரு படைகண் டணைபோல்
நின்றிடு மெந்தைபோல் நன்று.

ஒரு: நன்றியான்
ஊதுவேன் உன்முகத் தூதுலைக் குருகுபோல்
இமைக்கின் தோற்ருய் இமைக்கிலின் வென்ருய்.

மற்: தோல்வியா! அஃதென் தோல்வி என்பது?
தொன்று தொட்டு வென்றுமேம் பட்டு
மலிநீர் வேலை யுலகமீக் கூற
நின்றுவாழ் தமிழினம் என்றுமே அறியா
ஒன்றென் பதனை நன்றுநீ தெளிவாய்.

ஒரு: தெளிந்தனன் என்சொல் தெளிந்துநீ மறந்தும்
இமையா திமைதர அமையாது நிற்பாய்.

மற்: கடமையை மறத்தல் கடமையோ! என் தாய்
மொழியை மறக்கினும் விழியை மறக்கேன்.

ஒரு: ஊதவா?

மற்: ஐயமேன் ஊதுக.

ஒரு: வெற்றி!
வெற்றி இமையா வெற்றி
பெற்றவ ருக்குப் பெரும்பேர் வெற்றியே.

—:o:—

ஐந்தாங்களம் ஆறுங்காட்சி (30)

இடம்: தென்பாலி அரண்மனை அந்தப்புரம். காலம்: மாலை

நடிகர்: பழையன், காமஞ்சரி, பாடலம்.

பழையன் காமஞ்சரியைப் பிரிதல்.

(நேரிசை யாசிரியப்பா)

பழை: புகுமுகம் புரியா நகுநய மில்லா
அகமகிழ் கொள்ளா முகமதி ஏனோ
ஒருவகை யாக, வருகுறை என்னோ ?
காம: ஒன்று மில்லை,
பழை: ஒன்றுமா இல்லை !
விரும்புவ தென்ன கரும்பெனுஞ் சொல்லி !
காம: விரும்புவ வெல்லாம் தரும்படி யிருந்தால்
அப்புறம் என்ன ?
பழை: மைப்படு கண்ணி !
வேண்டுவ தென்ன ? யாண்டுள தேனும்
இப்பொழு தேயுன் கைப்படச் செய்வேன்.
காம: கைப்படு பொருளே அப்புறப் பட்டால்
எப்படித் தருவீர் இப்பொழு தேயதை !
பழை: அப்படி யொன்றுன் கைப்படாப் பொருளில்
பொய்தலின் போது கைதவ றியவுன்
உள்ள மதைநீ கொள்ளுறச் செய்ததை
மறந்தனை போலும் ! அறந்தவ றுதல்நான்
அறியா வொன்றும் அறிகுவை. காவிரி
யாலவிர் தருதென் பாலி நாட்டுத்
காவலன் மகளே ! பூவுதிர் கொம்பு
போற்பொலி வில்லாப் பாற்பட லேனோ !
சேலம ருண்கண் மாலதி எங்கே ?
இப்பொழு தேசென் றெப்பனை செய்து
கொண்டு வருவாய் கண்டெனுஞ் சொல்லி !
காம: யாரிடம் காட்ட ?
பழை: யாரிடங் காட்டவா !
ஏவலிற் றிரம்பாப் பாவையே யீங்கு

கண்டதை யுவக்கக் கொண்டவ னிலையோ ?
என்கண் காணாப் புன்கண் ணேகாண் !
கைவல் ஓவியன் பெய்வகை யறிந்து
நயமுற எழுதிய உயிரோ வியமே !
நானிங் கிருக்க ஏனிங் கப்படி
எண்ணு கின்றனை உண்ணு வமிழ்தே !

காம: இன்று கண்டுவக் கின்றீர் நாளை
உவக்குநர் யாரே ?

பழை: சுவைக்கருங் கரும்பே !
இதற்கா இப்படிப் புதர்க்குள் அம்புலி
காட்டினை ! இந்நன் னாட்டினை யாளப்
பிறந்தவ ளென்பதை மறந்தனை யோகொல் !
தந்தைக்குப் பின்னர் மைந்தன் அல்லது
மகளர செய்துதல் தகுமுறை யென்பதை
அறியா தவளோ வெறியார் குழலே !
ஆளர சின்றிய நாளுள வாக
நற்குடி மக்கள் புற்கெனப் போந்த
தங்குறை யெண்ணி வெங்களப் பட்ட
மெலியார் போல நலியா நின்றிடச்
செய்குதல் எற்கு வைகுறு செயலோ ?
வழிவழி யாக ஒழிகுத லின்றி
வருநின் தொல்குடிக் கொருகுறை எய்து
வித்திடல் உன்றனக் குத்தக வாமோ !
அன்றியும், ஏழிசை யொன்றிய மொழியாய் !
பெற்றவர்க் கொருமக ளாகப் பெற்ற
நீயவர்ப் பிரிதல் மேயநன் முறையோ !

காம: தங்களைப் பிரிதல் தங்கிய முறையோ !

பழை: நேற்றுடன் பட்டதை மாற்றிய தேனே ?
உடல்நல மின்றி அடல்மிகு மெந்தை
இருப்பதை யறிந்தீங் கிருப்பது முறையோ ?
இங்கவர்ப் பிரிந்துநீ அங்குறு தற்கும்
அங்கெனைப் பிரிந்துநீ இங்கிருத் தற்கும்
வேற்றுமை யுண்டு சாற்றக் கேண்மோ !
இன்புட னின்றுங் கன்புடன் வளர்த்த

பெற்றோ ருவந்து மற்றுனை யெனக்குக்
கொடுத்தவ ராதலால் விடுத்திட இயலும்.
வாழ்க்கைத் துணையெனக் காக்கியோ ரதனைப்
போக்கிட எண்ணார் பூக்குழல்! அன்றியும்,
இல்லற வாழ்க்கையில் வல்லளாய் நின்று
நிலைபெறு குடும்பத் தலைவி யாகிச்
சுற்றமும் நட்புஞ் சுற்றுறப் பெற்று
மற்றவர்க் குறுதுணை யாகி முற்றிய
பற்றுடை யவளாய் நிற்றிடும் அத்தக
உரிமை யெய்தி அருமையி னொருபொருள்
இன்றென நின்று நன்று வாழுநின்
மனைத்தகு மாண்பொடு தனிப்படு பெருமையைக்
காணக் காண மாணிழை! அன்னார்
ஒருசில ஆண்டினில் ஒருவகை யாக
எஃகிடைப் பட்டகூ டஃகுதல் போலப்
படிப்படி யாக மடக்கொடி! விடுப்பட
மறத்தல் அரிதன் றறத்தொடு நின்றவுன்
பிரிவினை. ஆனால், பரிவுடன் கொடுக்கக்
கொண்டவ னாதலால் விண்டிட இயலா.
நான்நீ என்பன தானில வாக
நாமெனப் பட்ட காமஞ் சரியெனும்
காமஞ் சரியனை காமஞ் சரியெனப்
பட்டது நம்முளம் பட்ட தொருமை.
எங்குநீ யிருக்கினும் அங்குமென் பெயரைச்
சொல்லியுன் பெயரைச் சொல்லுதற் குரியவ
ளாகிய பின்னர்ப் பாகென வினிக்கும்
இன்சொல் நங்காய்! என்சொல் மறத்தல்
இயலுவ தொன்றோ! அயலவ ராக
நாட்டவோ! சுட்டிக் காட்ட லாகாப்
பொருளா கியநான் தெருளா துன்னை
மறத்த லெளிதன் றறற்கருங் கூந்தல்!
எல்லைநா ளாகிப் பல்லுயி ரோம்பும்
மாயிரு ஞாலத்து ஞாயிரும் திங்களும்
போக வரவுரித் தாகிய வாறுபோல்

யானு மிருப்பல், தேனும் பாகும்
பழமும் பாலும் குழலும் யாழும்
ஒவ்வா தினிக்கும் செவ்வாய்க் கிளவி !
அல்லதூஉம் நீசெய் நல்லர சுக்குத்
தக்கவா றுதவிப் பக்கத் துணையா
இருப்பன். களிற்று மருப்பன கையாய் !
மற்ருெரு காரணம், பற்றலர் நாட்டுப்
பெண்ணு கியவுனை அண்ணுந்து நின்றன்று
கண் டுளம் மாற்றிக் கொண்டதும், உந்தை
கொடுக்கக் கொண்டதும் மடக்கொடி எம்மோர்
அறியார் ! ஆங்கு செறிதொடி நீவரின்
அன்னுர் என்னை என்னென எண்ணுவர் ?
உளவ னென்று கொளவுங் கூடும்,
வேறு வகையா மாறு படினும்
படுமன் ருேமா வடுவிழி ! நன்கனம்
எண்ணித் துணிவாய் துணிந்தபின் எண்ணுவ
தாற்பய னுண்டோ ? நூற்பய னுண்ட
அறிவுடை யமிழ்தே !

காம: எறிவடி வேலோய் !
பிரிவுத் துன்பம் ஒருதனி யிருந்தது
தாங்கவல் லேனே !

பழை: மாங்குயில் மொழியே !
உயிரையுங் கொடுத்துச் செயிரறு காட்சியர்
பிறர்நலம் பேணுவர் அறவழி யெனவே.
அந்நல மல்லா நந்நல மதனுக்
கிச்சிறு செயலி னைச்செய வியலா
தோவிகன் றெென்னுர் மேவுற லறிந்து
திருமண மான மறுநா ளொருமகள்
கேள்வனை விளித்து வாள்கை கொடுத்து
'சென்றுவெம் பகையை வென்றுநா னுவக்க
வருக, இன்றேல் பொருகளி றுழக்கி
வெளிற்றுப்பனந் துண்டெனக் களிற்றுக்கிடை வீழ்ந்து
மறப்புக ழெய்துக சிறப்புற நானென'
வாழ்த்தி யனுப்பும் காழ்த்தநெஞ் சுடைய
மறக்குடி மகளிர் வழிவரு நறைக்கொடி

யிடையில விதழ்கோற் றெடியுடை யனமே !
காம: சரி.
பழை: அக மகிழ்ந்தேன்; சரியென விரும்பிய
பரிசினைத் தந்தோய் ! ஒருசேய்க் குத்தாய்
ஆகப் போகும் தோகாய் ! உனக்குப்
பிறப்ப தாணெனில் சிறப்புற அதனை
என்பால் அனுப்பு. பெண்ணெனில் நின்பால்
அன்பொடு வளர்த்தே இன்புற் றிருப்பீர்.
காரணம் என்னெனில் வாரிருங் கூந்தல் !
ஆண்மகனு உன்பால் நாண்மதி போல
உளங்களி கூர வளர்ந்தா னானுல்
என்மக னுனதால் என்போல் ஆண்மையும்
வீரமும் ஒருங்கே ஆருறப் பெற்றே
ஒருகால் என்னெடு பொரநேர்ந் தாலும்
நேரலாம். ஆகையால் காரிகை அவனை
ஆங்கனுப் புதலே பாங்குறு முறையாம்.
காம: அப்படி யேய னுப்பு கின்றனன்.
அப்படி நேரா திப்பொழு தேசெய்
கிற்பதே முறையாம் மற்பொரு தோளாய் !
பழை: இங்கு வரும்பெண் இங்கே யிருப்பது
முறைமை தானே பிறைநுத லணங்கே !
காம: நாட்டு நடப்பதன் பாட்டினில் நடக்கும்.
பழை: தென்முக மதியே ! என்மக னென்பதை
யானறி தற்குத் தானறி குறியாய்
அன்புயர் கண்ணே ! என்பெயர் பொறித்த
இக்குளி சத்தினைக் கையிற் கட்டி
அனுப்புக என்பா லவனை நினைப்புடன்,
தனிப்பட மலர்ந்த தாமரை மலரே !
காம: என்னு ருயிரே ! மன்னே ரனைய
என்னுயிர்ப் பாடலம் தன்னை ஒருமுறை
கண்டு களிக்கக் கொண்டனன் விருப்பம்.
பழை: சொல்குதற் கிருந்தேன் செல்குவோம் வாராய்
எண்ணமும் ஒன்றிய இனியாய் !
கண்ணுறக் கண்டு களித்திட மன்னே !

## காட்சி-30

திரை: குதிரைக் கொட்டில்
நடிகர்: பழையன், காமஞ்சரி, பாடலம்.

### பாடலத்தின் பரிவு
(நேரிசை யாசிரியப்பா)

காம: மாசறு பொன்னையும் காசறு சீரையும்
ஆசிடை யிட்டு வீசொளி கஞலப்
போக்கற அணியா ஆக்குநர் போல
என்னையும் என்போல் என்னுயிர்க் குயிராம்
இவரையும் உள்ளங் கவர்தர ஒன்று
ஆக்கிய எந்தம் போக்கறு பாடலம்!
ஆக்கிய போல நீக்கியே என்னை
அவருடன் கூடி இவர்தரத் துணிந்தனை.
அன்புயர் பாடலம் என்பெயர் கின்றனை;
யான்செய் தவறு! வான்செய் புகழோய்!
உன்னுயிர்க் குயிரா என்னுளங் கொண்ட
அன்னவர் போல என்னையுங் கொண்டே
இன்பொடு காட்டிய அன்பையும் பண்பையும்,
இன்குரல் காட்டி என்குரல் வேட்டு
நாவினல் அன்பை மேவுறக் காட்டிய
அத்தகு திறத்தையும் ஒத்தநின் ஒழுக்கையும்,
வெளிப்புறக் காட்சியிற் களிப்புற எமைக்கொடு
காலையு மாலையும் சோலையு லாவினை!
வந்தஅத் திறத்தைம றந்திட வல்லனே!
செல்லுகின் றனையா! நில்லென ஈங்கெனைத்
தனித்துயர் தாங்காப் பனித்தழு கென்று
நிலைபெற விட்டுத் தலைவனை யழைத்துக்
கொண்டனை வான்புகழ் கொண்டவென் பாடலம்!
முத்தெனக் கணீரு குத்துநெக் குருகி
அழாதே கண்ணே அழாதே! உலகில்
(குதிரையின் கண்ணீரைத் துடைத்தல்)
பிரிவுத் துன்பம் பெரிதென் பதனை
உணர்ந்தனை கொல்லோ குணந்திகழ் குன்றே!
சென்றுவா கண்ணே! நன்றுநீ. ஆனல்,
மறக்கினும் அவரெனை மறக்குதல் செய்யேல்

பழை: மறக்கிலேன் கனவிலும் பெறற்கரும் பயனே!
காம: ஒருத்தியுர் ஈங்கே இருத்தியென் றிருவரும்
சென்றுவா ருங்கள்நும் திறத்தால்
நன்றுநான் ஈங்கு நாள்கழிக் குவனே.

—: o :—

## ஆருங்களம் முதற்காட்சி (31)

இடம்: கட்டி அரண்மனை காலம்: காலை

நடிகர்: பல்வேற் கட்டி, சாத்தந்தையார்.

### கட்டி பழையனிடம் ஆட்சிப்பொறுப்பை ஒப்படைத்தல்

(நேரிசை யாசிரியப்பா)

ப-க: ஞாயிறு முகிழ்த்த மாயிரு ஞாலத்
துயிர்த்தொகை யிருமூன் றுயிர்த்தவக் காலை
இனைத்தென அறியா அனைத்தென மொழிப.
அத்தொல் பழங்கா லத்தே உலக
முதற்கான் முளையா மதிக்கா லொளிபோற்
கருவுரு வாகி உருவுற முதிர்ந்து
நிலமெனு நற்றாய் நலமுறு மகவாய்ப்
பிறந்து மூன்றுச் சிறந்துமேம் பட்ட
சங்க மிருந்து தவழ்ந்து மங்காப்
புலவர் நாவிடைப் பொலிதர நடந்து
பழகி ஓடி யாடி அழகுற
வேவிளை யாடிப் பாவகை கூடி
எந்தமிழ் மக்கள கந்தனி லுவந்து
திகழ்ந்து சிறந்து மகிழ்ந்துவீற் றிருக்கும்
பழந்தமி ழன்னை விழைந்திடு பணிகள்
அணிந்தழ குறுத்துத் துணிந்தோ துஞ்சாத்
தந்தையா ரேப ணிந்தனன் ஒன்று
விரும்பினன் கூற.
சாத்: விரும்பிய தெதுவோ

கூற விரும்பிய வாறதை நன்கனம்
கூறுக, இகலார் மாறெதி ருள்ளா
நாற்படைப் பெருக்கும் மேற்படு தருக்கும்
அஞ்சா நெஞ்சமும் எஞ்சா ஆண்மையும்
பெரும்போ ராற்றலும் வரும்போ ரேற்றலும்
குறியாக் கொற்றமும் அறியாச் செற்றமும்
அரும்படை கடக்கும் பெரும்படைத் தலைமையும்
கொடையளி செங்கோல் குடியோம் பலுடன்
இணையற உயர்ந்த பெரியார் துணையும்
இரும்பே ரொக்கலும் பெரும்பேர் நட்பும்
ஒருங்கே அமைந்த வருங்கா விரியார்
கொங்கர் கோமக! கங்கர் ஓமுக!
நாவலர் காவல, காவலர் மேவல,
அமிழ்தினு மினிய தமிழ்மொழி போற்றும்
திசையறி வாள, வசையறு தோள,
ஒல்காப் பெரும்புகழ்ப் பல்வேற் கட்டி!
ஆவன ஆய்ந்து மேவன கூறுவல்.

ம-க: சேய்பா லன்புடைத் தாய்போ லெனக்குத்
தமிழறி வுறுத்தலோ டமைகி லாது
கந்தெறிந் தலமரும் வெந்தறு கட்களி
றடக்கிநேர் நடத்தும் வடிக்கோற் பாகின்
இடித்துரைத் தெனைநேர் நடத்திடும் பெரியீர்!
குறையொன்று மில்லை பிறையொன்று மதியின்
அறிவுடைத் தங்களின் உறுதுணை யிருக்கையில்.
குடிபழி தூற்றும் கொடுமையும் இல்லேன்
பெரியார்ப் பிழைக்கும் கருமையும் இல்லேன்
புலவர்ப் போற்று வலவையு மல்லேன்
தவலுற மறவர்க் கிவறலு மில்லேன்
அறிவறை போகிய சிறுமையு மில்லேன்
ஒருபகை நோக்கும் அருமையு மில்லேன்
வருபுனல் வானி பெருவளஞ் செய்ய
ஏர்முனை யாளர் நேர்முனைந் துஞற்ற
வினைநிலம் புலவர் உளமென விளைய

அமைதகு பொருளெலாந் தமிழென அமைய
வீடுநிறை செல்வம் பாடுபெற வுள்ளதால்
என்குறை யெனக்கு ? முன்குரை பெரியீர் !
எனினும் ஒன்று.

சாத்: மனமுறு மதுவென் !
விள்வாய் இன்னென வள்வாய்ச் சங்கினம்
தடமெங்கு முத்தீன் வடகொங்கு நாட !

ப-க: பகைதெற லின்றி வகைபெற மக்கட்
கொருகுறை யின்றி யிருள்தெறு பகலோன்
போன்றுநும் அருளால் ஞான்றிணக் கழித்தேன்.
நில்லா இளமை செல்லா நின்றது
யாக்கையும் தன்னுடை யாக்கை விட்டது
காணவே கண்கள் நாணு கின்றன
காதுகள் கேளாக் காதுக ளாயின
வாயொடு பகைமை மேயின பற்கள்
கற்பொரு தடந்தோள் புற்பொரு கின்றன
உடற்பொறை தாங்கா மடிக்குந கால்கள்
நரைதிரை மூப்பென உரைபடு மூன்றும்
எற்குற வாயின மற்குறை யிவ்வுடல்
நோய்க்கிடங் கொடுத்து வாய்க்குமருந் தூட்டி
இடர்ப்படு கின்றது. நடக்கையை நோக்கின்
அரசச் சுமையை வரிசையிற் சுமக்க
மாட்டா வானதிம் மோட் டுடல் என்பதில்
ஐயெனக் கையம் கலையுணர் புலவர்
பெருமான் ! இதுவே பெருமா குறையாம்.

சாத்: காண்போர் கண்ணைக் கவர்தரு வகையில்
மாண்புற ஓங்கி வளர்ந்து வான்பெறக்
கொழுகொழு வென்னச் செழுசெழுப் பாக
இரைகொள் பசும்பாம் பென்ன விரைகொள்
பூப்புடை சுமந்து மீப்பட நிமிர்ந்து
நின்றிடும் இளமை ஒன்றிய நெற்றாள்
புடையது விரிந்து சடைசடை யாக
நென்மணி முற்றப் பொன்மணி போலக்
கொழுத்தஅந் நெற்றாள் பழுத்துத் திரைந்து

வாடி வறண்டு நாடி தளர்ந்து
வற்றி வதங்கி மற்றக் கதிரைத்
தாங்கலாற் ருது வாங்கி வளைந்து
படுகிடை யாக நிலத்திடைக் கிடத்தல்
கண்கூ டன்ரோ ? புண்கூடு நெஞ்சக்
கவலையை விடுக தவலரும் புகழோய் !

ப-க: விட்டனன் கவலை பட்டனன் உண்மையில்
சுமக்கலாற் ருதச் சுமையினைக் கீழ்விழ
விட்டிடு முன்னே பட்டறி வுடையோய் !
இச்சுமை யினைக்கீழ் இறக்கி வைத்திட
நச்சுதும் என்னுளம் நயந்தருள் வீரே.

சாத்: வளர்தரு பேரால் தளர்வுறின் வீழ்து
தாங்குதல் போல ஈங்குநிற் ருங்க
வல்லா ஞெருவனை வல்லே அமர்த்தலே
தக்கதாம் அறிவாய்.

ப-க: தக்கதே இவ்வுரை
இளைஞன் இளவர சிளைஞர்க ளோடு
கூடியே போய்வினை யாடியே வருகுநன்.
ஆதலால் தாங்கள் ஓதிய படியே
இன்றே பழையனை நன்றே தாங்கிடச்
செய்குநன் என்தோள் வைகுமச் சுமையை.

சாத்: தக்கதே பழையன் எக்கட ஞயினும்
தவரு உரமும் உவரா உளமும்
கொண்டவன் களம்பல கண்டவன் உன்னுள
முண்டவன் அவாஅ விண்டவன் மிகவும்
நல்லவன் வஞ்சனை யில்லவன் போரில்
வல்லவன் ஆண்மை யுள்ளவன் தன்னல
மற்றவன் அறநூல் கற்றவன் பேரன்
புற்றவன் நற்புகழ் பெற்றவன் அழுக்கா
றற்றவன் ஒழுக்க முற்றவன் வண்மை
மிக்கவன் கண்மை தொக்கவன் மக்களால்
மிகவும் விரும்பப் படுபவன் அகமிகத்
தூய்மையன் மக்கள்பால் தாய்மையின் உண்மை
யானவன் நனிமிகு மானவன் மருமக

ஞனவன் காப்பவன் தானவன் தனது
கடப்பா டறிந்து நடப்பவன் ஆகையால்,
வகைபட ஆய்ந்து தகைபட வேநீ
செய்த முடிவு செம்மால் !
எய்தவும் நல்லதே எனஅறி குவையே.

—:0:—

## ஆறுங்களம் இரண்டாங்காட்சி (32)

இடம்: வானியாற்றங்கரை, வயற்புறம். காலம்: நண்பகல்

நடிகர்: மழவன், இரு உழவர்கள். (ஒருவன், மற்றவன்)

மழவன் பழையன்பால் பொருமை கொள்ளல்.

( நேரிசை யாசிரியப்பா )

மழ: (தனி மொழி)
நீல மலையெனும் வாலிழை பயந்த
வானி யெனுமிவ் ஆறுக் குலக்கொடி
தாயடி தவழ்ந்து சேயடி நடந்து
நிலமிசை ஓடி நலமிக ஆடி
பகைப்புலம் நோக்கி மிகைப்படு தமிழ்ப்படை
செல்லுதல் போலச் செல்லுது மன்றே !
எறிதரு மவ்வலை மறிதரு குதிரைப்
படையெனக் கரையை உடைதரச் செய்யுதும்.
எதிர்படு தூசியை அதர்பட அறுத்துச்
செலுமற வனைப்போல் செலுமவ் வானையின்
ஆற்றலே ஆற்றல் ! ஆற்றெதிர் நிற்குமவ்
எருமைதன் மேல்வரு பெரும்படை தாங்கிப்
பேராது நின்றிடும் வீரனைப் போன்மே !
ஆற்றின் இடையிடை தோற்றிடும் துறுகல்
களம்பட உழக்கும் களிறுகள் போலும்.
அக்கரைக் கிக்கரை புக்குறு தோணிகள்
சோரிசோர் களம்பெயர் தேரென லாமே.
ஆங்கச் சுழிவினில் ஓங்கிக் குதியலை
எதிரெதிர் மோதுதல் எதிரெதிர் பொருதிடும்

வேல்வாள் வீரரைப் போல்வீ சுதுமே.
ஆற்றிடைக் காட்சி ஏற்றெதிர் பொரும்போர்க்
களப்படு காட்சியை உளப்படுத் தின்பம்
செய்யுது மன்றோ ? செய்யிடைச் செல்வாம்.
தென்னையும் கமுகும் பெண்ணையும் நெட்ட
நெடுநெடு வெனவிப் படியேன் வளர்ந்துள ?
புரிந்தனன் ஓகோ ! அரிந்துணுங் காய்கள்
செடியினும் பந்தர்க் கொடியினுங் காய்க்குந.
கனிதரு மரங்கள் நனிமிக வளர்ந்து
நெடுங்கோ டுகளிற் படுங்கொம்பு நுனியில்
காய்த்துக் கனியுந. வாய்த்திள நீரும்
நுங்கும் பெறநாம் தெங்கும் பனையும்
அங்ஙனம் கிளையிலாச் செங்குத் தாக
ஓங்கி வளர்ந்துள போலும் ! பாங்குடன்
ஏறி யிறங்கு மாறெளி தாக.
வானி வளர்க்குத லானதால் வானில்
தங்குற வளர்ந்த தெங்கும் தெங்கென
நிமிர வளர்ந்த கமுகும் கமுகென
எதிர வளர்ந்த வெதிரும் வெதிரெனத்
தழைய வளர்ந்த கழையும் கழையெனச்
சொல்ல வளர்ந்த நெல்லும் நெல்லின்
கதிரெனப் பலவின் முதிர்சினை இருஅல்
கீழுறு வாழைக் கோழிலை துளித்த
தேன்விழுந் தூறிய வான்சுளைப் பலவை
வெயில்தெறச் செயலொழி வயலே ருழவர்
நிழலிடைப் போதவச் செழுந்தேன் சுளையை
உண்ணெனக் கொடுக்கும் வண்ண அரம்பை
உழவர்தம் ஈகையைப் பழகிய போலும் !
சின்னஞ் சிறிய என்னுஞ் சிறுடல்
தலைகால் வாய்மூக் குலையா அதனில்
விருந்துண வயிறும் பொருந்த அமைந்துள
எறும்பு முதலெனப் பெறுஞ்சிற் றுயிரிதே.
இச்சிற் றெறும்புகள் நச்சுற் றிடநாம்

ஆயிர மாயிரம் தாயும் பிள்ளையும்
சுற்றமும் நட்பும் ஒற்றுமை யாகக்
கூடி வாழ ஓடி யோடி
வளைதோண் டிடுமிவ் விளைவையென் னென்கோ!
வாயிடை மண்ணை மீயுறக் கொண்டு
பகைதொடர் வதுபோல் மிகநனி விரைந்து
குன்றின்மீ தேறும் வென்றி வீரர்போல்
ஒன்றன்பின் ஒன்றாச் சென்றுமண் மேட்டில்
அப்புறம் சரியத் தொப்பென மண்ணைப்
போட்டுவிட் டேபகை நாட்டினை நோக்கி
வென்றி வேண்டிச் சென்றிடும் வஞ்சி
வீரரைப் போலச் சாரை சாரையாப்
புற்றகஞ் சென்று மற்றுமுன் போல
மண்கொடு வருமிக் கண்கொளாக் காட்சி
அடுத்துநாம் வாழ்தற் கெடுத்துக்காட் டன்றோ?
போவிரை வாக வாவெளி மண்கொடு
வழியில்நில் லாதே குழியினைக் கல்லாய்
இப்புறம் சரியா தப்புறம் போடென்
றேவுவா ரின்றி மேவுறு தத்தம்
கடமையை யுணர்ந்து படுவினை யுஞற்றும்.
சோம்ப லென்னும் வாம்பகை யின்றிச்
சுறுசுறுப் பென்னும் உறுதுணை யொன்றி
ஊக்கமோ டாள்வினை ஆக்கமாக் கொண்டு
பிறப்பின் பயனுறச் சிறப்பொடு வாழும்
இம்முத லுயிரின் செம்மைதா னென்னே!
உழைப்பின் சிறப்புணர்ந் துழைப்பதும் உழைப்பது
பிறப்பின் பயனெனப் பெறப்பய னுறுவதும்
ஏவுத லின்றி யாவதை யுணர்ந்து
தத்தம் தொழிலை ஒத்தினி துஞற்றல்
கடப்பா டென்பதைத் திடப்பட வுணர்த்துமிச்
சிற்றெறும் பிணைப்பின் பற்றிநாம் வாழின்
ஏவலும் அரசும் காவலும் இன்றி
அமைதியா யுலகம் சமைவுறு மன்றோ!
இருவரம் மரநிழல் இருந்துகொ டென்னவோ

பேசு கின்றனர். பேசும் பேச்சில்
பழையன் என்றசொல் விழுந்தது காதில்
சற்றிங்கு நின்று சரியா
முற்றுறக் கேட்டல் முறையா கும்மே. 1

மற்: காவிரிக் கரையின் காவலி லேயவன்
அரிக்குகை போலெச் சரிக்கை யாக
மாத்தகை மிகநனி காத்துவந் ததனுல்
பகைவர் கொட்டம் புகுவெரு கதனைக்
கண்டெலிக் கூட்டம் உண்டகொண் டாட்டம்
அடங்கி யொடுங்கி நடுங்கி வளைக்குட்
போயொளிக் குதல்போல் ஆயின தன்றே ?

ஒரு: அதிலென் ஐயம் ! மதிமிகு பழையன்
தலைமையின் ஆங்கு மலையென அமைந்த
காப்பா லன்றே மாப்பகை யின்றி
அவரவர் பாட்டிற் சுவரிடைப் பாவைபோல்
அமைதியாய் வாழ்ந்தோம். இமைபோற் காக்கும்
அந்நல் லோனே இந்நன் னுட்டின்
ஆட்சிப் பொறுப்பேற் றைந்தா ருண்டா
மாட்சியின் ஆண்டு வருதலான் நாட்டில்
எவ்வள வமைதி ! எவ்வள வின்பம் !
இவ்வள வின்பம் இவ்வள நாட்டில்
இருந்த துண்டோ பெரும்படைத் தலைவன்
கைப்படு முன்னர் இப்பே ரரசு !

மற்: சொல்லவும் வேண்டுமோ வல்லவன் மட்டுமோ
நல்லவன் மிகவும் எல்லவர் வாழ்வே
தன்வாழ் வாகக் கொண்டவன் மன்வாழ்
வதனிடம் அன்பு முதிர்தர உள்ளவன்.
முன்னர்நீ யெடுத்துச் சொன்னவா ருட்சிப்
பொறுப்பினை யிவனேற் றிருப்பது செறுப்புக்
குழக்கிடுஞ் சிறுவர் கழறப்படு கழனி
பரம்படித் தலைப்போல் நிரம்பிடும் பயனும்.

ஒரு: ஆமவன் புகழொடு நாமுமின் புறுவோம்.

மற்: அடிக்கடி பெரும்போர் நடக்குமிப் பழையன்

படைவலான் ஆகுமுன் படைவலான் ஆனதும்
போரொழிந் தமைதி நேரிட லானது.
அரசியற் பொறுப்பை ஏற்றபின் உரைசெயும்
போரெனும் அந்தப் பேரே ஒழிந்தது.

ஒரு: இனியிவன் தலைமை துணையிந் நாடு
நீங்குத லின்றித் தாங்குக பெருமை!

மற்: இவனதை விடினும் இவனையிந் நாடு
விடுதலை விரும்பாப் படுபயன் கருதி
நல்லர சாட்சி நடத்தும்
வல்லவன் பழையன் வாழிய சிறந்தே! 2

மழ: நினைத்தது சரியா நினைத்த படியே
(தனி மொழி) முடிந்தது. பொழுது விடிந்ததும் தாமரை
மலர்தல்போற் பழையன் அலர்தரு பெரும்புகழ்
மலர்ந்தது. நாமினி அலந்துசெங் கதிர்வரக்
குவிந்திடும் ஆம்பல்போல் அவிந்துமே பெருமை
அடங்கி யொடுங்கி மடங்கிநோ நொந்து
குழைந்துதன் மதிப்பை யிழந்தவ னடிக்கீழ்
தாழ்ந்து நின்று வாழ்ந்திட லன்றி
என்னினி நமக்கீங் கன்னவன் ஆட்சியில்?
எடுபிடி யாளாக் கெடுபிடி தாங்கி
இன்பமின்றித் துன்பத் தொடக்குடன்
என்பிறப் புரிமை என்பதொன் றின்றி
எதிர்செல வற்ற மதையெதிர் நோக்கி
எதுசெய என்றவன் ஏவல் கேட்டுப்
போவெனப் போகவும் வாவென வரவும்
நாணு லாடும் மாணுப் பாவைபோல்
அடிமையிற் சிறந்து கொடுமையை மறந்து
யானையி னடிவாழ் பூனை போலப்
பேச்சுமூச் சின்றி எச்சிலைக் கேட்டு
மானமும் நாணமும் போனவா றறியாது
கடன்கழிக் கழுமவன் உடன்பாடு பெற்று
வாழ்தலி னூதியம் யாதுள சாதல்
இதனினுங் கோடி அதிமே லன்றே!

கோட்டுமா ஒருசிறு காட்டெலி முன்பு
மெய்கொட்டி யொடுங்கிக் கைகட்டி நிற்கவோ !
அரிமா குள்ள நரிமா முன்பு
புற்கென நின்று பற்களைக் காட்டவோ !
பனையொரு சிறுகால் தினைமுன் தாழவோ !
இலையிலை யிஃதொரு மலையிலை நமக்கு.
சிறப்புறு மாட்சிப் பொறுப்பினின் றவனை
நீக்கிடற் குரிய போக்கினை யாய்ந்து
செய்தலே இனிநாம் உய்திற மாகும்.
அரசிழந் தொருமூ தாளனு விருக்கும்
பரிசினை யுணரும் படியர சனைச்செய்
குவதே அதைச்செய் குவதொரு வழியாம்.
ஏனினி வாளா இருத்தல்
ஆனதை என்னுல் ஆய்ந்துசெய் குதுமே.

—:O:—

## ஏழாங்களம் முதற்காட்சி (33)

**இடம்:** தென்பாலி அரண்மனை அந்தப்புரம். **காலம்:** பிற்பகல்.

**நடிகர்:** காமஞ்சரி, கொங்குவேள்.

**காமஞ்சரி கொங்குவேளிடம் உண்மை கூறல்.**

(நேரிசை யாசிரியப்பா)

காம: (தனி மொழி)
இன்றோ நேற்றோ சென்றன மூவா
ருண்டுகள் சென்றவர் மீண்டன ரில்லை.
பொய்யா மையினை எய்யா மையினல்
பொய்ம்மையைப் பாவி மெய்ம்மையாக் கொண்டு
கன்னெஞ் சுடையேன் என்னெஞ் சறிந்ததைப்
பொய்த்திட ரீட்டி வைத்தனன் எனக்கே
பொய்ம்மையின் விளைவை அம்மயான் அறியேன்
பிரிவுத் துன்பப் பரிவினுல் அந்தோ !
ஒழுக்க மிலாது முழுப்பொய் கூறிப்

பொய்யா விளக்கை ஐயோ அவித்தேன் !
உண்மையை யுரைக்கத் திண்மையில் நெஞ்சி !
வாய்மையைக் கூறுந் தூய்மையில் மனத்தி !
அறிவறை போகிய பொறியிலி, குறியிலி !
அன்னவர் போன்ற பொன்னுரு வுடைய
என்னுயிர்க் குயிரா நன்னரிற் பயந்த
தன்னிக ரில்லா என்னொரு மகனும்
கொங்குவேள் தன்னை அங்கியான் பெண்ணெனக்
கூறி விடுத்தேன் ஆறறி வில்லேன்.
வேண்டு மென்றே ஆண்டனைப் பெண்ணெனப்
பொய்தலைப் பட்டேற் குய்தியு முண்டோ ?
ஆண்மக னென்று காண்மென அன்று
சொல்லி யனுப்பி யிருந்தால் வல்லே
வந்துகண் டினிது வந்துளம் பெற்ற
மகன்றனைப் பிரிந்தாங் ககன்றிடத் துணியா
தவ னுடன் என்னையும் அவரழைத் துச்சென்
றிருப்பர் என்பதில் ஐயமில் விருப்புடன்.
இன்றேல் தன்மகன் நன்றிங் கிருக்கின்
வடிக்கதிர் வேலோன் அடிக்கடி வந்து
தன்னரு மகனோ டென்னையும் பார்த்துச்
சென்றிருப் பார்பொய் யொன்றினுல் அனைத்தையும்
நிகழாச் செய்தனன் இகழாப் பாவியேன்.
எந்தை எங்கே எங்கே எந்தை !
யாரென் தந்தை பேரென் ஊரெது ?
விடுத்திங்கு நம்மை அடுத்தெங்கு சென்றார் ?
எப்போ திங்கவர் தப்பாது வருவார் ?
எனவடிக் கடிகண் புனல்படக் கேட்கும்
கொங்குவேட் கேதேதோ அங்கவன் நம்பிடும்
வகையினிற் பலபொய் வகைபடக் கூறி
வந்தனன் நம்பி வந்தனன் அவனும்.
எத்தனை நாளைக் கித்தனை பொய்யை
இப்படி யேநான் எப்படிக் கூறி
வருவேன் உந்தை வருவார் வருவார்

என்றவர் பேரூர் அன்றிவே ருக.
எங்குசென் றுளரெனில், அங்குசென் ருரிங்கு
சென்றனர் என்றுமெய் கொன்றுபொய் கூறி
வருவேன்; உண்மை ஒருநாள் வெளிப்படின்
என்னென நினைப்பான் ? என்னையிப் படியேன்
பேசினை பொய்யென ஏசுவ னன்ரே !
அப்புறம் யானென் செப்புவன் அந்தோ !
மெய்யே சொல்லினும் பொய்யே என்றலோ
கொள்ளுவன் பொய்யையென் றெள்ளுமே இவ்வூர் !
ஏனிப் படிப்பொய் சொல்லினேன் தானே !
செய்துவிட் டிரங்கிப் பெய்தழு வோரின்
நேரிலாப் பாவி ! யாரது ? கொங்குவேள் !
வாடா கண்ணே ! பீடார் பெரியோன்
மகனே என்மனத் தகனே !

கொங்: அம்மா !
ஏனழு கின்றனை நானிங் கிருக்க ?
ஏன்கண் ணருவி வான்கண் ணிழியும்
மாரி போலச் சோரா நிற்ப
ஆற்ருப் பெருந்துய ராற்ரு தவளாய்
ஏனழு கின்றனை ?

காம: நானழ வில்லை.

கொங்: அழுது கொண்டே அழவிலை என்கிருய்
அழாதே யம்மா அழாதே சும்மா.
அகமிகு குறையெவ் மகனு னிருக்க ?
யாரென் சொன்னுர் யாரென செய்தார் ?
உனக்கிடர் செய்தரை நினைக்கு முன் ஒழிப்பேன்.
உள்ளதை யொழியா துள்ள படிசொல்'

காம: சொல்லுதற் கொருகுறை யில்லையென் கண்ணே !

கொங்: பின்னேன் அழுகிருய் அன்னுய் அதுசொல் !

காம: உள்ள உள்ள உளஞ்சுடு கின்றது
பிள்ளை மதியால் பேசிய ஒருபொய்

கொங்: எப்போ யாரிடம் என்னபொய் பேசினை ?

காம: அப்பா அப் பப்போ அறிவிலி உன்னிடம்
உந்தையைப் பற்றி உரைத்தேன் அப்பொய்.

கொங்: எந்தையைப் பற்றி என்னிடம் என்சொனுய் ?
தெளிவாய் அன்னுய் ஒளியா துரையாய் ?

காம: அயிற்றலைக் கெட்டா எயிற்றலைக் காட்டுக்
கங்கர் பகைவன் கொங்கர் தலைவன்
மழைமருள் வண்கைப் பழையன் மகனே !

கொங்: பழையன் மகனு ! அழகிது சொன்னுய் !
வாஅன் பொய்ப்பினும் தான்பொய்த் தறியா
வானி வளற்றக் கானுகர் பழனம்
விளைவரு விழவார் வளவட கொங்கின்
காவலன் பழைய னுவென் தந்தை !

காம: ஆமவர் தாம்உன் காமுறு தந்தை
நீயவர் மைந்தன் தாயுனக் கிழைத்த
கொடுமையைப் பொறுத்தருள் கடுமனப் பாவியால்
தந்தையை அறியா மைந்தனு வளர்ந்தாய்.
அப்பா மகனே தப்பா நினையேல்
எதிர்பா ராமல் எதிர்ப்பட் டவரை
உந்தையாக் கொண்டேன் மைந்தன் பிறந்தால்
ஆங்கனுப் பென்ன நீங்கினுர். ஆனுல்,
உனையங் கனுப்ப மனமிலா துன்னைப்
பெண்ணெனக் கூறி அண்ணலைப் பிரித்தேன்.
விளக்கமாச் செவிலிபால் துளக்கற அறிவாய்.

கொங்: அன்னுய் வருந்தேல். உன்னையவ் வாறுபொய்
சொல்லச் செய்தது வல்லதா யன்பு.
குற்றம் என்பாற் பற்றதே யாகும்.
அவரென் தந்தையென் றறிந்தும் அவரைக்
கண்ணுறக் கண்டு களித்திட எண்ணித்
துடிக்கு மென்னுளம் அடக்கிட முடிகிலை
கண்ணுற் கண்டு களித்திடா தினிநான்
உண்ணேன் அன்றி உறங்கவும் செய்யேன்.

காம: அன்புயர் செல்வா ! என்பிழை யதனுல்
முன்பின் அறியா அன்புயர் தந்தையை
எப்படிக் காண்பாய் ? அப்படிக் காணினும்
தன்மகன் என்றுனை மன்மகன் மருகன்

ஏற்றுக் கொள்வரோ ? மாற்றிப் பெண்ணென
நம்பிடச் செய்தனே அம்பினுங் கொடியேன்.

கொங்: பெயரினைக் கேட்கினும் செயலறப் பகைவர்
அஞ்சி நடுங்கி நெஞ்சு கலங்கி
நனவி னன்றிக் கனவினும் அஞ்சலால்
தூங்காக் கண்ணராய் ஆங்குபார்த் திருக்கும்
ஆற்ற லுடையவென் ஏற்றுறழ் தந்தையை
எப்படிக் காண்பேன் ?

காம: அப்பா மகனே !
மனந்தடு மாறேல், சினந்து நோக்கின்
ஆற்ற லிழந்து காற்ருய்ப் பகைவர்
பறந்திடு மாற்றல் நிறைந்தவுன் தந்தையைக்
கண்டு களித்திட உண்டோர் வழியதை
ஆங்குநீ செலுங்கால் பாங்கொடு கூறுவல்
உந்தையின் கட்டளை மைந்தனே அறிவாய்.

கொங்: உவந்தேன் அன்னுய்! நிவந்தவேல் வீரனை
ஈண்டுநின் றேகியான் காண்டிட விழைந்திலேன்.
போரணி வான்படை வீர கங்கன்
கொங்கர்பாற் கொண்ட பொங்கிய பழம்பகை
நீங்கின னில்லை ஆங்கவர் தமைவெலும்
காலம்பார்த் ததற்காச் சாலவே படையினைப்
பெருக்கி வருகிருன். பெருக்குமப் படையில்
சேர்ந்துநான் பயின்று காந்துவை வேலான்
போற்றிடும் வகையில் ஆற்றல் வாய்ந்து
மன்னவ னுவக்க முன்னணி வீரனுய்க்
கங்கப் படையொடு கொங்கை யடைந்து
காண்பேன் எந்தையை மாண்பார் அன்னையே!
வாழ்த்தி விடைகொடு தாழ்த்துத லின்றி
இன்றே செல்கிறேன். நன்றே பயின்று
படையொடு கொங்கின் நடைதரு காலை
திருவடி தொழுதிட வருகுவன் ஈங்கே.

காம: விரும்பிய படியே விரும்பவுன் தந்தை
பெரும்படை வீரனுத் திரும்பியே வருவாய்
கண்டென துள்ளங் களிக்க
உண்டொளிர் வேலோன் ஒருதிரு மகனே.

## ஏழாங்களம் இரண்டாங் காட்சி (34)

இடம்: கட்டி அரண்மனை காலம்: காலை

நடிகர்: பல்வேற்கட்டி, மழவன்.

மழவன், கட்டி மனத்தை மாற்றிப் பழையனிட மிருந்து ஆட்சிப் பொறுப்பைப் பறிக்கச் செய்தல்.

(நேரிசை யாசிரியப்பா)

ப-க: கடலெனப் பரந்து மிடலுறச் சிறந்து
எங்கெப் போதெனுங் கொங் கப் படைக்கு
நானென வமைந்த தானைத் தலைவ!
நிகரில வாக இகன்மிகு மழவ!
கானிருல் காக்கும் தேனினம் போலப்
படைகாப் புடைய இடையார் பிட த்தைக்
கருதலர் கனவினும் கருதார் என்பது
காவிரிக் காப்பால் மேவுற உணர்ந்தனம்
அன்ருே?

மழ: ஆமாம் வென்றிவேல் மன்னவ!
அடர்தர வேலி கடவில வாயின்
பயிர்நில மணுக முயலுமோ ஆடு?

ப-க: முயலு முயலா வெயில் நுழை கில்லா
அத்தகு நெருக்கு வித்துள தாயின்.
எனினும் மேற்பார்க் குநனின் ருயின்
முட்டி மோதிக் கட்டுக் கோப்பைக்
கலைத்தத னன்னிலை குலைத்தவ் வேலியிற்
புகுந்திட ஒருசிறு வகுந்துண் டாக்கிடு
மன்ருே ஆடும்! நன்ரு நாடின்
வெள்ளம் போலாள் உள்ளன ரெனினும்
தலைவ னின்றெனில் வலிபெற லமையா
அப்பெரும் படையெனச் செப்புவர் பெரியோர்.
அத்தகு பழையன் ஒத்துயர்ந் தமையத்
தலைமையே யத்தகு நிலைமையைத் தந்த
தென்பதில் ஐயம் என்பதும் உண்டோ?

மழ: இலையிலை கொற்றவ இலையதி லையம்.
ப-க: அன்னவ னேவள மன்னிய விந்நாட்
டாட்சித் தலைவன் ஆகிய பின்னர்க்
காட்சியே யன்றிக் கனவினும் பகையெனும்
பேரையு மறந்து சீருற மக்கள்
அச்ச மின்றி நிச்சமும் தத்தம்
செய்தொழில் முற்றி உய்தர நந்நா
டமைதிக்கோர் நிலைக்கள னாக அமைதர
அறிந்தின் புற்றுப் புறந்தரு கவலையை
ஒழித்தென் முதுமையைக் கழித்து வருகிறேன்.
இதனை யிதனால் இவன்செயு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடலென் பதனின்
உள்ளுறை யதனைத் தெள்ளத் தெளிய
உணர்ந்தனன் இதனிற் புணர்ந்ததென் எனக்கே!
மழ: உண்மையே இறைவா! உண்மையில் பழையன்
ஆற்றலை ஒத்தது சாற்றலை நிலப்பொறை
நோற்றலைத் தன்கட னாற்றலை மக்களைப்
போற்றலை யறைகுறை யேற்றலை வருபகை
மாற்றலைத் திசைதொறுந் தோற்றலை நிகர்த்தவர்
இலையொரு வருமிவ் வுலகினில். ஆனால்,
ப-க: ஆனால் என்ன?
மழ: நோனா ருட்கும்
வெள்வேல் மன்ன! கள்வார் கமலம்
குவிந்துதன் னிலையில் நிவந்துயர்ந் தோங்க
அல்லிக் கிடந்தரின் எல்லுற மலர்ந்து
மற்றதன் மதிப்பை எற்றிடு மன்றோ?
அல்லியைத் தானே புல்லுறும் வண்டினம்!
அங்ஙன மாயின் செங்க மலந்தன்
'பூவெனப் படுவது தாமரைப் பூ'வெனும்
பெருமையை யிழந்து வரவரக் குமுதம்
மற்றதன் நிலையைப் பெற்றிடு மன்றோ!
ப-க: உவமையின் பொருளைச் சுவைபட விள்வாய்!
மழ: நேற்று முன்னாள் மாற்றலர் ஆற்றா
வலிகெழு தோளாய்! ஒலிபுனல் வானி

அடைகரைப் பழனத் திடையினிற் சென்றேன்.
காதிடை யொருசொற் போதுறக் கேட்டேன்
உளந்திடுக் கிட்டேன்.

ப-க: விளைந்ததென் புகலாய் !

மழ: ஒருமர நீழல் இருவர் இருந்து
பேசின ரொருவர்க் கொருவர்.

ப-க: பேசின
தின்னெனப் பகராய் கன்னவில் தோளாய்.

மழ: பழையன் ஆட்சித் திறத்தின் கிழமையைப்
புகழ்ந்தனர் முதலில்.

ப-க: நிகழ்ந்ததென் பின்னர் ?

மழ: மன்னவன் முதுமை துன்னினன் இளவர
சின்னும் பிள்ளைப் பருவத் தன்னன்,
இன்றுபோற் பழையனே என்றும் ஆட்சிப்
பொறுப்பேற் றிருக்கின் சிறப்புறும் நாடு.
பகைதலைப் படாஅ, வகைபெற மக்கள்
அமைதியாய் வாழ்வர், சமைதர விதுநாம்
முயலுவோம்; முயலின் செயலுறும் என்று
பேசிக் கொண்டனர். ஆசறு தோன்றல் !
மக்கள் விரும்பின் தக்கவோர் பெரும்படை
என்செய வல்லது ! முன்செய விரும்பிய
அவனையே தலைவன் ஆக்குவர். அவனே
நிலைபெறு தலைவனு நிலவுவன் எனற்குப்
பலவர லாறு நிலவுதல் அறிவீர்.
அங்ஙனம் ஆயின் நுங்குலக் கொழுந்தின்
போக்கிட மெங்கே? ஆக்கமும் கேடும்
ஆக்குதல் அவரவர் போக்கென அறிவர்
மொழிவதை ஆய்ந்து வழியினைக் காப்பீர்.

ப-க: உண்மையே. உணர்ந்தேன். உண்மையில் பழையன்
நல்லவன் எனினும் எல்லையிற் புகழும்
ஆட்சித் தலைமையின் மாட்சியும் அவனை
அல்லவன் ஆக்கினும் ஆக்கும். கொல்லையில்
மேயவிட் டெருத்தை மேயும் போததை
ஆங்குநின் ருேட்டினுல் ஆங்கது நம்மைப்

பாய வருதலும் ஏயதொன் றன்றே !
மழ: படையும் அவன்சொற் படிதான் நடக்கும்.
ப-க: ஆமதற் கென்தடை ? காமுறு கின்ற
மக்களு மேயவன் பக்கமே நிற்பர்.
இன்றே அவனை ஒன்றிய ஆட்சிப்
பொறுப்பி னின்றப் புறப்படுத் துகிறேன்.
ஈதோ ஆணை போதரச் செய்கிறேன்.
காரணம், சிறுவன் எனினும் ஊரவர்
தம்மொடு பழகவும் எம்முறை யாளுதல்
என்பதை யறியவும் மன்பதை விரும்பவும்
இளவர சனுக்கு விளைதர வாய்ப்புத்
தருத லென்பதே. ஒருவுத லின்றி
ஏற்றமைந் தேயினி திருப்பன்
நூற்றுறை யாய்ந்து நுணுகிய அவனே.

—:O:—

ஏழாங்களம் மூன்றுங்காட்சி [35]

இடம்: தலைக்காட்டு அரண்மனை காலம்: காலை

நடிகர்: வீரகங்கன், தெற்காணம்பி, கொங்குவேள்.

வீரகங்கன் கொங்குநாட்டின்மேற் படையெடுக்கத் திட்டமிடல்.

(நேரிசை யாசிரியப்பா)

தெற்: பூவிரி பொழில்சூழ் காவிரி புரக்கும்
பழன மலிநீர்க் கழனி தோறும்
பாடுபெற விளையும் நாடுகிழ வோனே !
மங்குலிற் புரக்கும் கங்கர் கோனே !
உய்தி யொன்றுநற் செய்தி யொன்று
கேட்டனன்.
வீர: என்னது ?
தெற்: நாட்டரும் புகழோன்

கரவாது வானம் வரையாது பொழிய
வான மலைமான் ஈனரு மகவாய்ப்
பாற்பட வியன்று மேற்கரைச் செவிலி
சிறப்புற வளர்க்க உறப்பெறு செல்வப்
பொலிவுடன் போதரும் மலிபுனற் காவிரி
கூடிப் பெருகும் ஆடிப் பெருக்கைக்
கடக்கினும் எளிதில் கடக்க முடியாத்
தடையாய் நமக்கோர் உடையா எயிலாய்
இருந்தவன், நாம்வாழ்ந் திருந்திடத் தரியாப்
பழையன் தலைமையைக் கிழவன் கட்டி
பறித்துவிட் டனனும்

வீர: ஆட்சிப் பொறுப்பையா!

தெற்: ஆமாம் அதைத்தான்.

வீர: நாமெதிர் பாரா
வகையில் வந்தது பகைதெறு பெரும்பயன்.
ஏன்பறித் திட்டான்?

தெற்: மான்விழி யொருத்தி
இரவற் பட்டுடுத் துருகெழு பாவைபோற்
பொலிவது பொருந ஒலிகுழ லொருத்தி
உடையவ ளிடத்துன் உடையினை யுனக்கவள்
திருப்பித் தராளென உரைப்பவே நம்பிப்
பறித்துக் கொளல்போற் பறித்துக் கொண்டனன்.

வீர: யாருரை நம்பி. பேருரை நம்பி!

தெற்: பழையனுக் கெதிரா மழவன் என்னும்
புதுப்படைத் தலைவன் விதப்புரை நம்பி.
எனினும் பழையன் மனமுற அதையொரு
பொருட்டாக் கொண்டிலன் தெருட்டிய அறிவும்
ஆன்ற ஒழுக்கமும் சான்றோர் பழக்கமும்
உலகியற் பயிற்சியும் இலகுநன் முயற்சியும்
அழுக்கா ருமையும் இழுக்கா ஆண்மையும்
தன்னல மற்ற நன்னலப் பற்றும்
நடைப்பாட் டறிவும் கடப்பாட் டுணர்வும்
இன்னோ ரன்ன மன்னிய பண்பா

டுடையோ னுதலான் நடைமுறை யதனைக்
குறையா எண்ணாது நறையூர் நண்ணி
அரசியல் வாழ்வினின் றொதுங்கிய பரிசின்
உரிமையோ டிருந்து வருகின் றானும்.
குருட்டாம் போக்கில் உருட்டிய வட்டொரு
குழியில் விழுந்தது, மழவனை நம்பி,
உறுதுணை யாக மறுகரை சேரப்
பரிய வனையக் கரைசேர்ந் திடுமுன்
நட்டாற் றிற்கை விட்டவன் போல
விட்டே பழையனைக் கெட்டான் கட்டி.

வீர: கெட்டது நமக்குப் பட்டது நன்று.
பழையனை விட்டு மழவனை நம்பி
யிருப்பதாற் கட்டி எரிப்படு வைபோல்
அழிகுவன் என்பதை மொழிகுதல் வேண்டா.

தெற்: அழிகுவன் அடியோ டொழிகுவன் திண்ணம்.

வீர: புதியவப் பசுமண் குதிரையை நம்பி
இறங்கினன் ஆற்றில் உறங்கினன் பாவம்!
நமக்கேன் அதுபொதி சுமப்பவன் சுமக்க.
கற்பொரு தோளும் வற்பொரு தாளும்
மற்போர்த் தருக்கும் விற்போர்ப் பெருக்கும்
வாள்வேல் வீச்சும் ஆள்வினைப் பேச்சும்
பரிதேர் கரியூர் திறனும் அரியே
றன்ன ஆற்றலும் தன்னிகர் ஏற்றமும்
அஞ்சா நெஞ்சமும் எஞ்சா வஞ்சமும்
சுருங்கா ஊக்கமும் ஒருங்கே உடையநம்
கொங்குவேள் முன்னரக் கொங்கே வரினும்
பகலவன் முன்னிருள் புகலென லாகும்.
பழையனே எதிர்வர அழிகுவன் உளமெனில்
மழவனெம் மட்டோ! அழகிய தோற்றமே
வெந்நிடச் செய்யும் ஒன்னலர் தம்மை.
நேற்றவன் காட்டிய ஆற்றலைக் கண்டதும்
வெற்றி வெற்றியே வெற்றியென் றென்னுளம்
துள்ளிக் குதித்தது. புள்ளர சதன்முன்

தூதுணும் புறவினம் போதுறத் துணியுமோ !
கடுவளி முன்னர் நொடிபடு புள்புதம்
நிற்குமோ நிலைத்து ! தெற்கா ணம்பி !
பொங்கரிக் குருளையாம் கொங்குவேள் தன்னை
அடுத்துநிற் கொருபெரும் படைத்தலை வனுக்கொண்
டெடுபடை கொங்கு பொடிபட நாளையே.

**தெற்:** சொற்றவிப் புகழுரை முற்றிலும் ஒக்கும்.
முன்னமே எண்ணினேன் மன்னவ அன்னதே
தங்க ளெண்ணமு மானது. அங்ஙனே
கொண்டன னிவனை மண்டமர்க் கடக்கும்
செங்கதிர் வேலோய் ! கொங்குவேள் முன்னர்க்
காற்றெதிர் துரும்பாம் மாற்றலர் பெரும்படை.

**கொங்:** மாற்றலர் மங்கையர் ஆற்றொணாத் துயராற்
குழைதர உள்ளம் மழையெனக் கண்ணீர்
சோர்வுற எழுதெழில் மார்புடைத் தோயா
தழுதுநின் றேங்க அழலென வெகுளும்
வெஞ்சின வேந்தே ! விஞ்சிய மிகுபுகழ் !
தெரிதலிற் சிறியேன் ஒருசிறி தேனும்
தகுதி யில்லேன் மிகுதியு மிதற்கே.
படைவலோன் தங்கட் கொருபடி யேறினர்.

**தெற்:** இல்லை யில்லை உள்ளதே சொல்லினேன்.

**கொங்:** ஒன்றுக்கு முதவா என்றனை யன்புடன்
ஏற்றிந் நிலைக்கு மாற்றிய தங்கட்
கென்னகைம் மாறியான் செய்வேன் மன்னவ !
அடியனுக் கிட்ட கட்டளைப் படியே
ஓகையோ டேகி ஒன்னலர்த் தெறுத்து
வாகை சூட்டி மகிழ்வித்த லல்லான்
கங்கர்தம் பகைப்புலக் கொங்கம் பாழ்படச்
செய்கிலேன் என்னில் உய்கிலேன் இறைவ !
மழவனே யன்றிப் பழையனே எதிர்க்கினும்
ஏற்றுநின் றின்னுயிர் மாற்றுவன், அன்றிப்
பொன்றினும் பொன்றாப் புகழினை ஒன்றுவன்.

**வீர:** மெச்சினேன் உன்றன் அச்சமில் ஆண்மையை.

வீரனே இதோஇவ் வீர வாளினைப்
பெற்றுநீ சென்று பற்றலர் தம்மை
வென்றிவண் மீள்குவாய்.

கொங்: மன்றலந் திணிதோள்
மன்னவ ! உய்ந்தேன் பொன்னடி வணக்கம்.

வீர: அற்கா உரனுடைத் தெற்கா ணம்பி !
ஐந்நான் காண்டாப் பொய்நாள் படவே
பெருக்கிய பெரும்படைச் செருக்கினுக் கொன்னார்
இரையா கட்டும் நிரையா நின்று.
வஞ்சியும் தும்பையும் வாகையுங் கொஞ்சுறச்
சூடுக மறவர் பாடுக வென்றி
மண்டமர் வென்று வருதலைக்
கண்டுமே கங்கங் களிக்குற மன்னே.

—: O :—

ஏழாங்களம் நான்காங்காட்சி (36)

இடம்: தென்பாலி அரண்மனை அந்தப்புரம். காலம்: முற்பகல்

நடிகர்: காமஞ்சரி, கொங்குவேள்.

கொங்குவேள் தாயிடம் விடைபெறுதல்.

(நேரிசை யாசிரியப்பா)

காம: (தனி மொழி)
அம்மா எனக்கூய் அழையா திருந்தும்
சும்மா இரையைத் துறந்து பசியைப்
பொருட்படுத் தாமல் அருட்படு நற்ரு
யன்புக் கெடுத்துக் காட்டா இன்புற்
றணைத்துப் படுத்துத் துணைக்கை போர்த்துச்
சிரித்து முட்டைகள் பொரிக்கக் குஞ்சு
குப்பையைக் கிளறிய கப்படு மிரையைக்
கொக்கொக் கொக்கெனக் கூவிக் காட்டி
முக்கிடச் செய்து புக்கிடப் பருந்து

பகையதோ மறைவிற் புகுதரு வீரென
முன்புறத் தெரிவித் தன்பொடு வளர்த்த
குஞ்சினைக் கோழி நெஞ்சந் துணிந்து
பிரித்து முடுக்குதல் போல ஒருத்தி
புலப்படு மதனுக் கிலக்கிய மாக,
அன்புடன் பெற்றே இன்புடன் வளர்த்த
என்னருங் கண்மணி தன்னைவன் னெஞ்சினேன்
போவெனப் போக்கிய பாவிபொல் லாப்பழி
காரி இனம்பிரி நாரி ஓரி!
ஆண்டிரண் டாகியும் மீண்டிலன். கண்ணே!
எங்குசென் றனையோ? என்னு கினையோ?
தங்கமே! உன்முகந் தன்னையான் காண்பனோ!
கங்கஞ் சென்றக் கங்கனைக் கண்டையோ!
அன்னவன் அன்புடன் உன்னையேற் றனனோ!
அன்றியேற் காதுனைச் சென்றுவா என்றனனோ!
படைக்கலம் பயின்று கடக்கரி யானையோ!
எண்ணிய எண்ணங் கண்ணுறப் பெற்றையோ!
கொங்கஞ் சென்றையோ அங்குன் தந்தையைக்
கண்டு களித்தையோ கண்டிலை யோதான்.
ஒன்றுமே அறியா நன்றிலி யானனே!
எந்தைக்குப் பின்னர் இந்தநா டாளப்
பிறந்தஎன் செல்வ! புறந்தராப் பாவி
அறந்தலைப் பிரிந்து துறந்தனன் உன்னை.
பொய்யினுல் உந்தையை ஐயகோ பிரித்தேன்
மெய்யினுல் உன்னையும் அய்யனே பிரித்தேன்
உண்மையைக் கூறி எண்மைய ளானேன்.
இல்லையேல் விட்டெனைச் செல்லவா கண்ணே!
பொய்யினுல் விளைந்ததே ஐயஇத் தீமை
பொய்ம்மையின் விளைவினைக் கைம்மேற்கண்டயான்
மெய்ம்மையின் விளைவையும் பொய்ம்மைபோற் கண்டனே!
பொய்ம்மையும் நன்மை பயக்குமேல் மெய்ம்மை
யிடத்தவன் றுரைபுற னடைப்பொரு ளுணர்ந்திலேன்.
அப்பா மகனே! எப்போ துனைக்கண்
டாருத் துயரம் ஆறுவேன் கண்ணே!

அம்மாவந் தேனிதோ சும்மாஇ ரென்றோடி
வாராயோ டாமுகம் பாராயோ டாகண்ணே !

கொங்: அம்மாவந் தேனிதோ சும்மா அழாதிரும் !

காம: அப்பா மகனே ஒப்பிலா மணியே !
வந்தையா கண்ணே எந்தையே உய்ந்தேன்.

கொங்: அழாதே அம்மா அழாதே சும்மா
அழுதழு தரையுயி ராயினை தொழுதக
எம்பெரு மாட்டி ! நம்பியுன் சொல்லை
ஓடியான் வந்தேன் பாடியி னின்றே.

காம: என்னயான் சொன்னேன் ?

கொங்: அன்னையே அன்று
'வருந்திடேல் ஆங்கு பொருந்தவுன் தந்தையைக்
கண்டு களித்திட உண்டோர் வழியதை
ஆங்குநீ செலுங்கால் பாங்கொடு கூறுவல்'
என்றவச் சொற்றான் நன்றெனக் கருள்வாய்.

காம: சொல்கிறேன் கண்ணே ! சொல்குறு முன்னர்
கங்கம் சென்றதும் அங்கு நிகழ்ந்ததும்
இங்குநீ வந்தது காறுமொ ழுங்குற
அறிந்திட என்னுளம் அவாவுதும் அறிந்திட
விளக்கமாய்க் கூறுவாய் அளக்கரு மதியோய் !

கொங்: வீரருள் வீரன் வீர கங்கன்
அன்புடன் எனையேற் றின்புடன் முகமன்
கூறிப் போரரி யேறென ஆக்கிப்
படைத்தலை வனுக்கெனை அடுத்தவ னாகச்
செய்துமே வீ வாள் பெய்தனன் என்கையில்
வெல்கென வாழ்த்திச் செல்கென விடுத்தான்.
வஞ்சி சூடி எஞ்சா விருப்பொடு
கங்கப் பெரும்படை கொங்கினை நோக்கிக்
காரெனக் கடலெனப் பேரிடி யெனமுர
சதிர் தரச் செல்கின் றதுவிரைந் தன்னாய் !
எந்தையைக் காணற் கந்தநல் வழியை
அறிந்துசென் றிடவே வந்தேன் அறிந்திட
உரைத்தருள் என்னாய் !

காம: வரைத்தடந் தோளோன்
மைந்தஇக் குளிசம் உந்தையன் றென்னிடம்

தந்தனர் தந்து மைந்தன் பிறந்தால்
அவனையென் மகனென அறிதர அவன்கையிற்
கட்டி யனுப்பென இட்டனர் கட்டளை.
இட்டகட் டளையைத் தட்டியே பாவி
இங்ஙனம் செய்தனன் தங்கமே இந்தா !

(கொடுத்தல்)

கொங்: எந்தையின் உடைமை வந்ததென் கைக்கு.
கண்டனன் எந்தையைக் கொண்டனன் மகிழ்ச்சி
எந்தையின் உருவம் வந்ததென் கண்முன்
எந்தையைக் காட்ட வந்தஎன் துணைவன்.
இவனா என்மகன் எனக்கொளேல் ஐயம்
இவன்தான் உன்மகன் இவன்தாய் தந்த
நானுன் உடைமை தானெனக் கூறி
எந்தைக் கெனையவர் மைந்தனென் றறிமுகம்
செய்வித் தேயெனை உய்விக்க வந்த
ஒப்பருஞ் செல்வன் ! கைப்பட அன்னாய் !
கட்டுக என்கையில் விட்டது கவலை.

காம: மிகமிகப் பாதுகாப் பாக மகனே
வைத்துக் கொள்ளிதை மெத்தவெச் சரிக்கை
உந்தையைக் கண்ட உடனிதைக் காட்டு
மைந்தனே ஒருகால் உந்தையும் நீயும்
எதிரெதிர் பொருதிட நேரின் இதனையே
வாளெனக் கொள்வாய் கோளரி யேறே !

கொங்: அன்னையே தாங்கள் சொன்னதை மறவேன்.
வருகிறேன் அன்னாய் வணக்கம்.

பெருமகன்

காம: மைந்தனே சென்று வருவாய்
உந்தையைக் கண்டியான் உவந்திட மன்னே.

—:0:—

## எட்டாங்களம் முதற்காட்சி (37)

இடம்; கட்டி அரண்மனை காலம்: காலை

நடிகர்: பல்வேற்கட்டி, மழவன், குமரன், ஒற்றன், வாயிலோன்.

ஒற்றன், கட்டியிடம் கங்கர் படையெடுப்பைக் கூறல்,

(நேரிசை யாசிரியப்பா)

வா-ன்: மன்னவ ஒற்றன் துன்னினன்.
ப-க: வரச்சொல்.
ஒற்: வணக்கம் இறைவ !
ப-க: குணக்கெழு கதிரோன்
குடக்கெழு வதுபோல் நடக்கையில் மாற்றம்
இலையே ஒன்றும் ?
ஒற்: இலைவடி வேலா
காரும் கூதிரும் ஓரிரு பனியும்
வேனிலும் என்னப் போனது வருதலும்,
மாலை யாமம் வைகறை காலை
நண்பகல் எனவொரு நாளிலைந் தெண்பெற
மாறி வருதலும் கூறிரு பொழுதா
இயலுற மாறிய செயலுறக் காண்கிறோம்.
ஒருபத் திரட்டி வருமற் றோராண்
டாகியும் மாறுதல் ஆகுதல் இன்றென
எண்ணுதல் கூடுமோ அண்ணலே கங்கர்
ஆற்ற லிழந்து தோற்றோ டியதை
எண்ணி யெண்ணிப் புண்ணுற நெஞ்சம்
கணவரை யிழந்த மணமறு மகளிரும்
மைந்தரை யிழந்த கந்தறு மகளிரும்
அக்கையும் தங்கையும் ஒக்கலும் எழுப்பிய
பூசல் மயக்கத் தோசை கேட்டு
நெஞ்சுறு புண்ணில் நஞ்சுறு வடிவேல்
பாய்ந்தவ ராகப் போந்ததை நினைந்து
வெள்கியே தோல்விக் குள்கின ரெனினும்,
ப-க: எனினும் என்பதன் நினைவுறு பொருளென் !
ஒற்: தடியடி பட்ட கொடியவோர் பாம்பு

பட்ட அடியால் நெட்டுயிர்ப் பெறிந்து
தலையையும் வாலையும் அலைவுற ஆட்டி
இடப்பெயர் கில்லா உடம்பொடு கிடக்கினும்
பட்ட அடியின் முட்டறப் பட்டபுண்
ஆறிய பின்னர்ச் சீறி யெழுந்து
படமெடுத் தாடி உடையனைக் கடிக்கக்
காலம்பார்த் திருத்தல் சாலவும் இயல்பே.
ஆங்ஙன மேயவர் ஈங்கடி பட்டபுண்
ஆறிய பின்னர்க் கூறிய பாம்பின்
எப்படி யேனும் அப்படு தோல்வியைப்
போக்கிட எண்ணி ஊக்க மீக்குற
உடைகுளம் பட்டோர் அடைகரை எடுத்துப்
போகா நிட்டித் தாகா றகலச்
சிறுகச் சிறுகப் பெறுகுள நிரப்புதல்
போலவே அவரும் சாலவே அழிந்த
அக்குறை பாடு தக்காங் ககன்று
மேலு மேலுநீர்ச் சாலென நிரப்ப
ஓவா முயன்று மூவே ழாண்டாய்ச்
சுருக்கறப் படையைப் பெருக்கி வந்தனர்.
[illegible]-க: சுருக்கு நிமிரப் பெருக்கினர் பெருக்கி!
ஒற்: தேக்கிய நீரைப் போக்குவர் வயற்கு,
பூட்டிய வண்டியை ஓட்டுவ ரூர்க்கு,
எடுத்த அம்பைத் தொடுத்து விடுவர்,
ஈட்டிய ஆட்டைக் காட்டிடை மேய
விடுவர் என்பது நடைமுறை யாகும்.
அங்ஙன மேயக் கங்கரு முயன்று
பெருக்கிய படையை வெருக்கினம் போல,
மானுறப் பல்கிய யாணர்நன் னாட்டுக்
காப்புடை யோய்பெரு மாப்படை யோய்நம்
அரசியல் மாற்றப் பரிசினைக் கண்டோ
கடலெனப் பெருகிய படைவலி கொண்டோ
மன்னவ இன்னுயி ரென்னநீ ருன்னியே
காக்குநம் கொங்கை நோக்கியே விட்டனர்.

ப-க: படையெடுத் தனனா மடயன்! வரட்டும்
சீறிடும் நம்படைச் சூறா வளிமுன்
வாளையும் வேலையும் தோளையும் எறிந்து
பூளைபோற் பறந்து புறங்கொடுத் தோட.
கொங்கர் படைக்குக் கங்கர் படைதோற்
றோடி யோடி ஓடிப் பழகிய
பழக்க மானது வழக்க மாயிடும்
என்பதைத் தன்படை யின்பெரு மையினால்
மறந்தனன் போலும்! மறந்தில னாகில்
ஒன்றா இரண்டா ஒன்றே டிருபஃ
தாண்டுகள் துறவு பூண்டவன் இப்படி
இல்லறப் பட்டுச் செல்லாக் காசா
மீண்டுந் துறவு பூண்டிடத் துணிவனா!
வரட்டும் வந்திங் கிருட்டில் நுழைந்து
குருட்டுத் தனமாப் புரட்டித் தள்ளலைப்
பார்க்கலாம் பார்த்துப் பூக்கலாம் முன்போல்
கெடட்டும் கெட்டடி படட்டும் பட்டழு
தோடட்டும் ஓடிக் கூடட்டும் கூடிப்
பாடட்டும்! பாடிவாய் மூடட்டும் நமக்கென்.

மழ: அதிலென் ஐயம் மதில்மே லேறிக்
குப்புற வீழ்வோர் தப்புத லரிதெனக்
கண்டுங் குதித்துக் கொண்டிறப் போரை
என்னென எண்ணுதல், மன்னவ மேலோர்
கெடுமதி கண்ணிற் படாதெனுங் கூற்றை
ஆமென ஏற்றால் நாமென் செய்வது?

ப-க: செய்வது வேறென் செய்வதைச் செய்வது?

மழ: செய்வதைச் செய்து செய்வ தறியாப்
பற்றார் செருக்கை எற்றுதல் வேண்டும்.

ஒற்: மன்னர் பெருமான்! இன்னொரு செய்தி.

ப-க: என்னது?

ஒற்: கொங்குவேள் என்னுமோ ரிளைஞன்
தோற்றமும் ஆற்றலும் ஏற்றமும் மாற்றலர்
அறியாப் பயிற்சியும் குறியா முயற்சியும்

இன்ன பிறவும் உடையனுய் அன்னவன்
ஆணரிக் குருளைபோற் காணு கின்றனன்.
பெயரலால் நந்தமக் கயலாற் பட்டவன்.
தலைவ ! துணைப்படைத் தலைவனு அவனை
ஆக்கி அவன்றிறம் நோக்கிப் பெரிதும்
நம்பி அவனையே நம்பியோ டன்னுன்
நடத்திட இப்படை எடுத்தனை ன் ஆவான்.

ப-க; நம்பியை நம்பியே வெம்பினன் முன்னர்.
கொங்குவே ளென்ன கங்கனே வரினும்
அரிமா முன்குறு நரிமா வென்னப்
பரிமா வூர்ந்து பொரிமா வார்ந்தவன்
விக்கியெக் கியுயிர் திக்குமுக் க'டி
தொண்டை வறண்டு குண்டி யுடைய
ஒருவாய் நீர்க்கு விரைவா யோடுதல்
போன்றே ஓடுவன் சான்றே இவ்வாள்,
மழவன் முன்னரம் மழவன் ஆற்றல்
எரிமுன் சருகெனக் கருகி வெந்து
சாம்ப லாவது வீம்பன் றுண்மையே.

கும: ஐயமே இல்லை மெய்யே இறைவ.

ப-க: இன்றே படைபுறப் படட்டும்; சென்றே
வருபடை மதியாப் பொருபடை மழவா !
குமரனு நீயுங் கூடி அமரார்
படையெறிந் தோடி நடைமெலிந் தெய்தக்
கண்டே அன்னுர் ஒண்டொடி யாரழ
வென்று துரத்தி மீள்குவிர் நன்றே
மலையேல் வஞ்சியும் மிலையேல் தும்பையும்
வாகை யொன்றே ஓகையோ டணிந்து
வண்டமிழ்க் கொங்கு மக்கள்
கண்டுளம் உவகைக் கடலிடைப் படவே.

—: 0 :—

## எட்டாங்களம் இரண்டாங் காட்சி (38)

**இடம்:** வழியிடை. காவிரிக்கரை. **காலம்:** முற்பகல்

**நடிகர்:** தெற்காணம்பி, கண்டோர், வீரர்கள், பாணர்.

படைச்செலவு—கண்டோர் கூற்று

**திரை-1.** வழியிடை. கங்கப்படை

(நேரிசை யாசிரியப்பா)

**கண்-1:** பாரதோ பெரும்படை ஊரெதோ அழிபடும்
எங்குசெல் கின்றதோ பொங்கிய கடலென
எதிர்ப்படை எதுவோ அதர்ப்படு மிதற்கே

**கண்-2:** முரசும் வளையும் மாமும் கொம்பும்
காரென முழங்க வீரரின் பேரணி
ஓவென ஆர்த்துப் போவென வேர்த்துச்
செலுமிப் படையால் வலிகெழு வடகொங்
கென்னா குங்கொலோ முன்னா குங்கொலோ !

**கண்-3:** வானிடைக் கருமுகில் தானியங் குதல்போல்
மதிக்கோடு நீட்டித் துதிக்கை யாட்டி
இடியென முழங்கி எரிசினம் புழுங்கிக்
கடகளி றுகள்செல் காட்சியே காட்சி !

**கண்-4:** அலையெனப் பரந்து நிலைதபத் துரந்து
காரெனக் கனைத்தே ஊரின ரணைத்தே
விதிர்தர நுரைமண் அதிர்தர விரைந்து
கதழ்பரி கள்செலுங் காட்சியே காட்சி !

**கண்-5:** அகலிடத் தியலும் முகிலென முடுகி
ஊர்பரி முந்தப் பேர்வன போல
முடியிடைப் பறந்து கொடியசைந் தாடக்
கடிதினில் தேர்கள்செல் காட்சியே காட்சி !

**கண்-6:** கடலெனப் பாந்து மிடலினிற் சிறந்து
வாள்வேல் வீசித் தோள்வலி பேசிக்
கழல்கால் கறங்க அழல்விழி பிறங்க
முனைந்துமுன் நோக்கி முனைகெடக்
கனன்றுசெல் மறவர்தங் காட்சியென் கொல்லே ! 1

திரை-2. வழியிடை. கொங்கப்படை

கண்-1: விழைதகு பல்லியம் மழையென முழங்க
யானை குதிரை தானை தேரென
அணியணி யாகத் துணிபட வழியிடை
காலென விரைந்தே ஓலெழப் பாந்தே
இயங்குமிப் படையால் வயங்குமக் கங்கம்
யாதா குங்கொலோ மீதா குங்கொலோ !

கண்-2: இருப்பிடம் விட்டுப் பொருப்புகள் செலல்போல்
வெறிப்புனல் காலப் பிறைக்கை நாலப்
பிளிறியே காரெனக் கிளறியே ஏரெனக்
களிறுகள் செல்லுங் காட்சியைக் காணாய் !

கண்-3: காலெனக் கடுகி வேலென விரைந்து
நுரையுதிர் தரவே உருமெனக் கனைத்துப்
பொடிபட வழிமண் அடிபடப் பெயர்த்துக்
கடுகியப் பரிகள்செல் காட்சியைக் காணாய் !

கண்-4: அலைகட லிடைசெல் கலமெனக் கடுகி
புரவியின் முந்த விரைவன போல
நிணமுணச் செலுங்கழு கெனக்கொடி பறக்க
மணிபடச் செலுந்தே ரணியினைப் பாராய் !

கண்-5: வானெனப் பரந்து மீனெனப் பொலிந்து
மின்னென வேல்வாள் வீசி இன்னென
வெஞ்சினம் பெருக்கி வஞ்சினஞ் செருக்கி
ஒலிபடக் கழற்கால் உகைத்துக்
கலிகெழு மறவர்செல் காட்சியைக் காண்மே ! 2

(வஞ்சித் தாழிசை)

பாணர்:1 செங்கைவேற் செறுநர்காள் !
தங்குநும் தருக்கினைக்
கொங்கரின் கொடுஞ்சினம்
பொங்குபோற் பொசுக்குமே.

வீ–ள்: ஆம் ஆம் !

பாணர்-2: பொங்கியார் பொருநர்காள் !
இங்குநும் இகலினைக்
கொங்கரின் கொடுஞ்சினம்
நுங்குபோல் நுதுக்குமே.

வீ-ள்: ஆம் ஆம் !

பாணர்-3: பங்கனற் பகைவிர்நும்
சிங்கிலாச் செருக்கினைக்
கொங்கரின் கொடுஞ்சினம்
இங்கிலா திகக்குமே.

வீ-ள்: ஆம் ஆம் !

கண்-6: (ஆமாம் ஆமாம் ஆமாம்) இப்பெரும்
படையால் பகைவர் பாவம் !
அடைவே அழிகுவர் ஐயமும் இலையே. 3
(மூன்றும் அடியை- 'கங்கரின் கடுஞ்சினம்' எனக்
கொண்டு, இத்தாழிசைகளை இருபடைக்கும் கொள்க).

—:0:—

திரை-3. கங்கர் பாசறை-காவிரிக் கரை காலம்: மாலை

தெற்காணம்பி (தனிமொழி)

(நேரிசை யாசிரியப்பா)

இருபகை நாட்டின் எல்லையா யமைந்த
வருபுனற் காவிரி மடக்கொடி ! இன்றே
இருகரை யுதிர்தரு மரமுதிர் மலரும்
பொலந்தொடி மகளிர் கலந்தெறி மலரும்
ஆடிடு மகளிர் கூடிடு கலவையும்
தேனிமிர் குழலார் மேனியார் விரையும்
வஞ்சியர் பூசிய மஞ்சளும் பிறவும்
கமழ்தரப் பளிங்கின் இமிழ்தரு நன்னீர்
ஆடினை பண்ணை ஓடி யாடி
இன்புறு கின்றனை தென்புறு பாவாய் !

காண்போர் கண்ணைக் களிப்புறச் செய்யும்
மாண்புறு மணியே ! மாமலைக் கொழுந்தே
தேம்பாய் கோதாய் ! பூம்பா வாய்நின்
அகத்தெளி வினையுன் முகத்திடைக் கண்டு
களிப்புறு கின்றேன் அளிப்படு குழலி !
கயல்படு கண்ணி, அயில்படு பொன்னி,
தாள்படு கழனி, ஆள்படு சொல்லி !
சூழ்படும் இந்நீர் வீழ்பட நாளை,
கழிமுடை நாற்றத் தழிபடு பிணத்தின்
விழுக்கொடு கலந்த அழுக்குடைச் செந்நீர்
ஆடினை பெரிதும் வாடினை கலங்கிப்
படைக்கலம் போழ்ந்து விடுப்பட லான
முடித்தலை யாமையும் உடற்குறை முதலையும்
தொடிக்கை வாளையும் முடக்காற் சுருவும்
நெடுங்குட லாறலும் படுங்குட விருலும்
குழிக்கட் கெண்டையும் விழுக்குடை ஞெண்டும்
ஈரல் தவளையும் ஊரித் திரிதரக்
காணப் பொருது மாணெழில் குன்றி
விரும்புவா ரின்றிப் பெரும்புகழ்ப் பொன்னி !
வருந்துவை மன்னே தெரிந்ததைச் சொன்னேன்.
வாங்காப் பெருநீர்ப் பூங்கா விரியின்
வானத்து மீனினம் தேனைத் தருந்த
அலர்பூஞ் சோலை மலர்தூய் அழகுறச்
செய்குறு மிருகரை வைகுற வந்தென
அமைதரு பாசறை சமைதரு மிருபகை
நாட்டின் தலைநகர் கூட்டுற வந்தே
அக்கரை இக்கரை புக்குற வமைந்த
போன்மெனக் கூறல் தான்மிகை யாகா.
கூடார் கட்டூர்க் கூடா ரந்தொறும்
பட்டொளி வீசித் தொட்டசைந் தாடும்
எழிலுறு கொடிகள் விழைதகு மறவீர் !
விடிந்தால் பொருது மடிந்தால் ஒருநாள்
ஆகிடு மாகையால் மாகடன் கழிக்குமுன்

நன்றதா வாய்த்த இன்றிரா முழுதும்
வெஞ்சினந் தணிந்து துஞ்சுவீ ரமைதியா
எனக்கை காட்டிச் சினக்கை வீரர்க்கு
நேர்முகம் படவப் போர்மகள் அன்பொடு
சாற்றுதல் போலும். மாற்றியே காணின்
இரவுபோய் விடிந்ததும் பொருகளந் தன்னில்
படுபிணம் உண்டு கடும்பசி யாறலா
மென்ற அவாவினுல் ஒன்றியிங் கின்றே
காக்கையும் கழுகுர் ஊக்குதல் போலும்.
களிறும் இவுளியும் குளிறுபோர் முரசின்
பிளிறியுங் கணைத்தும் தெளிவுற முழங்குதல்
எப்படிக் கழிப்போம் இப்பெரு மிரவினை
என்றினி தெடுத்து நன்றுரைத் திடல்போன்ம்.
வெஞ்சின மறவர் வஞ்சினங் கூறித்
தத்தம் ஆற்றலை ஒத்துறக் காட்டி
இரவுபோய்ப் பகல்வரின் பொருதிடத் தொடங்குவர்
அன்னவர் போர்த்திறந் தன்னையாம் நேரிற்
கண்டு களித்திட விண்டுபோய் நாளை
விரைவினில் ஈங்கு வருகுவா மென்று
குடக்கினிற் கதிரவன் வெடுக்கெனச் செல்லப்
பகலவன் செல்லப் புகவிருள் கண்டு
மருள்படு மிரவில் தெருள்பட லின்றித்
துளக்குரு திருக்க விளக்குவம், அன்றியும்
கொலைத்தொழில் விலங்கின மலைத்திடா திருக்கவும்
காக்குவாம் என்ன ஊக்குறும் அருளால்
குணக்கினில் மதியவ னிணக்கமாய்த் தோன்றினன்.
ஆகையால் நானும் ஏகியே நாளைக்
காளுன கொங்கு வேளுடன் சூழ்ந்து
செய்குந செய்து வைகுறு காலை
புலர்ந்ததும் களத்தே மலைந்திக லார்புறந்
தன்னைமன் கண்டுவேந் தற்கு
மன்னிய வாகை மாலைசூட் டுவனே.

—: o :—

எட்டாங்களம் மூன்றாங்காட்சி (39)

இடம்: பாசறை காலம்: நள்ளிரவு

நடிகர்: கொங்குவேள், தெற்காணம்பி.

திரை 1: கொங்குவேள் கூடாரம்

கொங்குவேள் தனிப்போர் செய்ய முடிவு செய்தல்.

கொங்குவேள்: (தனிமொழி)

(நேரிசை யாசிரியப்பா)

நீர்நிறை சால்போற் பார்நிலம் புரக்கும்
மலிபுனற் காவிரி பொலிதரு வெள்ளம்
கால்வழிப் பரந்து நூல்வழிச் சிறந்த
சான்றோர் போல ஆன்றநற் சொற்படு
செய்யுள் வளம்படச் செய்யிய செய்து
கொடையுள மில்லாக் கடலிடைச் சென்று
தேங்குதல் போலப் பாங்குடன் ஈங்காங்
கிருகரை யினிலும் பொருபடை வெள்ளம்
தேங்கிநிற் கின்றன. தேங்குறு வெள்ளம்,
சூழ்தரு மிருளில் ஆழ்தரு முலகை
முகநக உவந்து பகல்வர நாளைப்
புலர்தரு காலை அலர்தரப் பொங்கி
ஆர்த்தாங் கெழுந்து பேர்த்துப் பெயர்ந்து
முற்பட நிற்றிடம் பிற்படக் கிளர்ந்து
நோக்கி எதிரெதிர் போக்குற ஊக்கி
நெருங்கி நெருங்கி ஒருங்குற முனைந்தே
சீறிச் சினந்து பாறிப் பேரொலி
ஒன்றை யொன்று கன்றிக் கனன்று
வன்றிற லோடு நின்றுதாக் குதற்குக்
கண்ணிய உளத்தொடு, வெண்ணில வெறிக்கக்.
கடும்பனி வருத்தப் படுங்குளி ரதனால்
அயர்ந்துகண் ணுறங்கு கின்றன. நயந்து
விடியலை நோக்கி மடிதுயி லூக்கி
அக்கரை யடையார் தொக்காங் குள்ளனர்.

கட்டாயம் எந்தை பட்டாங்கு கொங்குப்
படையினில் இருப்பர். கடமையிற் றவருப்
பெருங்குடிச் செல்வன் அருங்குணக் குன்றம்
முற்றிய நாட்டுப் பற்றுடை யண்ணல்.
ஒன்னலர் பெரும்படை துன்னிய தறிந்தும்
ஒதுங்கி நறையூர்ப் பதுங்கி யுறங்கி
வாளா இராஅர் கேளா முன்னர்
முன்னுறப் போந்து துன்னியீங் கிருப்பர்.
இலையிதி லையம் இலைவடி வேலனை
எங்ஙனம் காண்குவன் ? சங்கினந் தவழ்ந்து
நிரல்பட வயலின் வரைபட முத்தீன்
வளமலி கங்கக் களமலி படையைச்
சேர்ந்தவன் சிறியேன். நேர்ந்திரு படையும்
ஒன்றோ டொன்று கன்றிப் பொருங்கால்
காண்டிடக் கூடும் ஆண்டகை யவரை.
ஆனுற் பொருவற ஆனுப் பெருமறம்
நற்கமை யவரை எற்கடை யாளம்
தெரியா திதன்முன் ஒருவரை யொருவர்
கண்டதே யில்லை. மண்டுகட் குருடன்
கோலுகை யதனைப் பாலெனக் கொண்ட
வாறு முடியும் மாறுப் பெருந்திறல்
அன்னரைக் காணல்; என்னயான் செய்குவன்.
எந்தையும் யானும் தந்தைமைந் தனெனத்
தெரியோ மாகலின் ஒருவரை யொருவர்
எதிரெதிர் நின்றே அதிர்தரப் பொருது
புல்லென வல்லே கொல்ல நேரிடும்.
வெல்லுவோர் யாரெனச் சொல்லவோ இயலா,
அங்ஙன மாயின் எங்ஙனஞ் சிறியேன்
எண்ணிய எண்ணம் நண்ணுறக் கூடும் !
அல்லதூஉ மவர்க்குப் புல்லியேன் தன்மகன்
என்பதே தெரியா தாகையால், அன்புயர்
எந்தையே தங்கள் மைந்தனென் செய்குவேன் !
ஆரா அன்பால் பாரா தெதிர்வை

அன்னைபொய் கூறி என்னையென் தந்தை
தெரியா தவராய்ச் செய்தனள். பரியாப்
பொய்ம்மையின் விளைவே செய்ம்மன செய்தனை.
ஐயோ அம்மா ! எய்யா மையினாற்
செய்ததை எண்ணி மெய்தரி யாமல்
வருந்துதல் ஒழிக அருந்தமிழ்ப் பெரியோன்
அன்புக் குரிய என்பெரு மாட்டி !
இல்லை யில்லை வல்லே காண்குறும்
வழியொன் றுளது தொழுதக அவரை.
ஆமிது தக்க வழியே யாமே.
நம்படைத் தலைவர் தம்பாற் சென்று
நாளைக் காலை வேளை வந்ததும்
அடைதரு கொங்குப் படையது தன்னில்
துன்னிய வீரன் ஒருவன் தன்னுடன்
முனைப்போ டிகன்று தனிப்போர் புரிய
எப்படி யேனும் அப்பெருந் தலைவன்
இயைபினைப் பெறுதல் வேண்டும். இயைபினைப்
பெற்றிடின் எண்ணம் முற்றுறும். எங்ஙனம் ?
மற்றென் னோடு ஞற்றிடத் தனிப்போர்
வினைப்படு மொருவனை அனுப்புக என்று
மேவலர் தமக்கறை கூவல் விடுத்தால்
அத்தமிழ்ப் படையில் அத்தகு தியுள
வீரனென் தந்தையே யாவர். யாரவ
ரல்லால் என்னுடன் வல்லே பொருதிட ?
அவர்தாம் வருவார். சுவரொடு குறுநரி
மோதுமோ ! அவரே போதுவர் உறுதி.
அப்போ தென்றன் ஒப்புறு தந்தையை
யான்கண் டுவப்பேன் வான்கண் டுவக்கும்
மஞ்ஞையைப் போல. அஞ்ஞை கொடுத்துள
இக்குறி சத்தி னைக்கொடு காட்டி
நானவர் மைந்தன் தானென்ப தைத்தெரி
வித்துமே கொள்வேன். முத்தமிழ் வல்லார்
மகனென என்னை அகமகிழ்ந் தேற்றுக்
கொள்ளுவர் நான்மகிழ் கொள்ளுவேன் ஆம்இது

தான்நல்ல முடிவு. நானவர் தம்மிடம்
இப்பொழு தேயெழுந் தேகி
ஒப்புதல் பெற்றே உய்குவன் மன்னே.

—: o :—

திரை-2. தெற்காணம்பி கூடாரம் காலம்: நள்ளிரவு

நடிகர்: தெற்காணம்பி, கொங்குவேள்.

தனிப்போர்க்குப் படைத்தலைவன் உடன்படல்

(நேரிசை யாசிரியப்பா)

தெற்: யாரது ?
கொங்: நான்தான் ஐய !
தெற்: யாரது
கொங்கு வேளா ! இங்கேன் வந்தாய் ?
புள்ளு முறங்குமிந் நள்ளிர வதனில்
மிகுகுளி ரதனால் தொகுபடை வீரர்க
ளெல்லாரு மயர்ந்து வல்லாங் குறங்கத்
தாயைப் பிரிந்த சேயைப் போல
அலர்கதிர் ஞாயிறு மலர்தலை யுலகைக்
காத்திடக் குணக்கில் போத்தரு குறியாப்
புலர்வதன் முன்னர் நலிதரு குளிரில்
ஏனிங்கு வந்தாய் ? ஏனெங் கேனும்
வீக்குறு பகைவர் தாக்கின ராவென் ?
எல்லியி லுறங்கச் செல்லும் போழ்தில்
எங்குமே அமைதி தங்கிடத் தானே
இருந்தது ?
கொங்: தலைவ ! வருந்திடத் தக்க
அப்படி யொன்றும் தப்புற நிகழ்ந்திட
இல்லையெல் லாரும் நெல்லறு வயல்போல்
செயலற அமைதியாய்த் துயிலு கின்றனர்.
ஆனால் எனக்கோ ஏனோ இரவெலாம்

கண்பட வில்லை புண்படு நெஞ்சொடு
விழித்தே இரவைக் கழித்தேன் ஐய !
ஈங்கிதன் காரணம் பாங்குற ஒன்றை
எண்ணினேன் அதுவே கண்ணுறங் காமல்
இப்படி இருந்திடச் செய்தது.

தெற்: தப்பிலை.
என்னதஞ் சாமல் இன்னெனச் சொல்வாய்.

கொங்: என்பெருந் தலைவ ! அன்புடன் கேட்பீர்.
அன்னதைச் சிறியேன் இன்னதென் றோதுவன்.
நானிது காறும் தானிகர் தங்கள்
அன்புக் குரியவ னாக என்பணி
ஆற்றியே வந்துளேன் போற்றிட மன்னரும்.
தங்களாற் செறுநர் செங்கதிர் கண்ட
இருளென அஞ்சி வெரிநுற் றோடும்
அத்தக வரைய றுத்தபோர்த் திறனும்
பெற்றுளேன் எனக்கு மற்றொரு குறையிலை.

தெற்: மற்றெனு மச்சொல் பற்றிய தொன்றை
இற்றென எடுத்துத் தெற்றெனப் பகர்வாய்.

கொங்: அண்ணலே என்னுளங் கண்ணிய தென்னெனில்
நேரலர் தம்படை வீர னொருவன்
தன்னுடன் தனிப்போர் புரிய என்னுளம்
அவாவு கின்றது தவாவிசை யண்ணல் !
பெரும்பே ராற்றலும் அரும்போ ரேற்றலும்
படைக்கலப் பயிற்சியும் உடைப்பெரு முயற்சியும்
ஒருங்கே உடைய அருங்கே டன்நமைப்
பன்முறை வென்று துரத்திய வன்மையன்
வாளால் அணிபெறு தோளா நமக்குத்
தள்ளாப் பெரும்பகை யாக உள்ளவன்
பிழையா நறையூர்ப் பழையனே யாவன்.
முனைப்போ ரல்லாத் தனிப்போர்க் கழைத்தால்
என்னுடன் பொருத அன்னனே யன்றி
எவரும் முன்வரார் அவனே வருவன்.
வந்தால் அவனை இந்தா எனுமுன்

வெறிநுறச் செய்வேன் ஒருதலை ஐயமில்
அங்ஙனஞ் செய்யின் செங்கதிர் வேலோய் !
பேரும் புகழும் சேருமிங் கென்னை
மன்னவன் மார்பைத் துன்னுறும் வாகை,
இல்லை யன்னனால் கொல்லப் படின்யான்
பெருந்தகை யதற்கா வருந்த வேண்டா.
அப்புறம் அவனால் ஒப்பறும் போர்செய
இயலா அடைவான் செயலறு நிலையை.
தெற்: கொங்குவேள் நீயேன் அங்ஙனம் வலிய
உயிர்விடத் துணிகிறாய் ? பயிர்வினை யாமுன்
அறுக்கத் துணிவரோ குறிக்கொடு வளர்த்தோர் ?
போர்தொடங் கட்டும் ஏர்தடந் தோளா !
முன்னணி வீரரைத் துணனியே பொருது
வென்று களங்கொண் டொன்றிய அதனால்
இதைவிடப் பெரும்புகழ் அதிலுனக் குண்டாம்
கொங்: இல்லை ஐயா ! தன்னே ரில்லா
அப்பெரும் பழையனை ஒப்பரு மத்தனிப்
போரில் வெல்வதே பேரும் புகழும்
பெருமையும் என்னைப் பெருமையாச் சேரும்
தெற்: இங்குநீ நினைக்கிற படியவன் கொங்குப்
படையில் இருப்பான் என்பதோ அடைவில்.
ஆட்சிப் பொறுப்பின் மாட்சியி னின்று
போக்கறு கட்டி நீக்கிவிட் டதனால்
தன்னூர் புக்கு மன்னுறு தொழிலில்
நின்றே ஒதுங்கிவாழ் கின்றான் பழையன்
என்பதை யறிந்தே முன்பதை எண்ணி
வஞ்சி சூடி எஞ்சாப் பகைதெற
உற்றனம் என்பதைச் சற்றுநீ எண்ணலை.
கொங்: இல்லை யில்லை வல்லா ருருளின்
மாறி மாறி வருதரு வாழ்வை
ஆறறி வுடைய அவனன் குணர்வான்,
மன்னனுக் காக வாழ்பவ னல்லன்
தன்னரும் தாயகந் தனக்கா வாழ்பவன்,

தந்தையால் வெறுக்கப் பட்டவோர் மைந்தன்
தனியா வாழினும் அனைக்கோர் குறையுறின்
வாளா இருக்கின் ஆளெனப் படுவனோ !
நாட்டுப் பற்றுடைத் தீட்டரும் பெருந்திறல்
ஆணரி யேறனன் மாணார் பெரும்படை
தாயகங் கொள்ள மேயதை யறிந்தும்
வாளா ஒதுங்கி மீளா வெறுப்புடன்
உண்டு களித்துக் கொண்டங் கிருப்பனோ !
இரானொருக் காலும், அராப்பகை நிழல்
புற்கெனப் பிரிந்து நிற்குமோ தனித்து !
பகைப்படை யதனில் மிகைப்புடைப் பழையன்
கட்டாய மிருப்பன். தட்டாமல் எனது
வேண்டுகோ ளதனை ஆண்டருள் கூர்ந்து
தனிப்போர் புரிய எனைப்போ வென்று
விடையருள் தலைவ அடியிணை தொழுதேன்.

தெற்: அன்புடைக் கொங்குவேள் உன்பெரு விருப்புக்
கொருக்காலுங் குறுக்கே இருக்க விரும்பலன்.
ஒருப்பாடு கின்றனன் விருப்பம் போலவே.
ஆயினு மொன்று மேயது சொல்வேன்.
விழைதரு மாபோற் பழையனே போத
அத்தனிப் போரில் ஒத்தனர் பொருது
வென்றி யெய்துதல் அன்றியே தேனும்
நேர்தலுங் கூடுமென் றேதடு மாறுது
என்மன மாகையால் உன்மனப் போக்கை
மாற்றினை கொள்ளெதி ரேற்றிரு படையும்
போர்செய் யட்டும். நேர்செய் தெட்டும்
பகைப்படை தன்னினுந் தொகைப்படு நம்படை
அளவினிற் பெரியது களமெளி தினிற்கொள்
பயிற்சிபெற் றுள்ளனர் முயற்சி மிக்குநம்
வீரர்கள் என்பது சேரிய உயர்வு
நவிற்சியன் றியல்பு நவிற்சியே என்பது
நீயறி யாததோ ! மேயநின் போன்ற
முன்னணி வீரர்கள் எண்ணிலர் உள்ளனர்.

உறுதிநாம் வெற்றி பெறுவது வீரநீ
பொருதனிப் போரில் பொருதொரு வேளை
நீயுயிர் துறக்க நேரின் மேயநம்
வெற்றிக்குத் தடையாம், மற்ற தாகையால்
மல்லிவர் குரிசிலென் சொல்லைத்தட் டாதே.

கொங்கு: இல்லையெந் தலைவனும் சொல்லைத் தட்டிலேன்
என்னவோ எனக்குத் துன்னிய தனிப்போர்
புரிவதி லேயே பெரிதுமன் விருப்பம்
மனத்ததைச் சொன்னேன் இனித்தங்கள் விருப்பம்.

தெற்: விரும்பிய படியே பெரும்புக ழெய்துக.

கொங்: இக்கட மைக்கு மிக்க நன்றி.
பொள்ளெனப் போந்திந் நள்ளிர வதனில்
துயிலிணைக் கெடுத்துப் பயிலுறக் கொடுத்த
தொல்லையைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும்.
அல்லலற் றுள்ளம் அமைதி கொண்டது.
வருகிறேன் பெரியீர் வணக்கம்
பொருதுவென் றுவகை பொங்கவைக் குவனே. 2

(கொங்குவேள் போக)

தெற்: கொங்குவேள் கூற்றினும் தங்கியோ ருண்மை
உள்ளது நாட்டன் புள்ள பழையன்
கட்டாயம் வந்தெதிர்க் கட்டுரி விருப்பன்
பொங்குமப் போரிற் கொங்குவேள் வெல்லின்
அதுவே போரி னதுமுடி வாகும்.
வெற்றி நமதே ! மற்றப் போரிற்
களைத்த பழையனுற் களத்துமுன் னணியில்
முனைந்துநின் றெதிர்பொர முடியா
புனைந்துநாம் வாகை பொலிகுறு வோமே. 3

—:0:—

திரை-3. கொங்குவேள் கூடாரம் காலம்: காலே

## கொங்குவேள் தனிமொழி

(நேரிசை யாசிரியப்பா)

மிகமிக நல்லவர் தகுதிமிக் குள்ளவர்
விரும்பிய என்விருப் பரும்பு மலர்ந்து
பிஞ்சு முற்றி விஞ்சுதீங் கனியாக்
கனிந்திட அன்புநீர் பாய்ச்சி முனிந்திடா
தருளெரு விட்டுத் தெருளுற விருப்பெனும்
நற்பழ மரத்தைப் பொற்புற வளர்த்த
பெரும்படைத் தலேவர். விரும்பிய வாறே
தந்தையும் மைந்தனும் வந்தெதிர்ப் பட்டுத்
தீரா அன்பால் ஆரா வின்பால்
ஒருவரை யொருவர் பொருவது போலக்
கட்டிப் பிடித்து முட்டி மோதி
முழுவலி கொண்டு தழுவித் தழுவி
அகமொன்று பட்டு முகமொன்று தொட்டுக்
கண்டு களிப்பதைக் கண்டு களிக்க,
தூங்கா தெனக்கு நீங்காப் பகையாச்
சொல்லா விடர்செய்த பொல்லா இரவிஜன
வணக்கியே துரந்து குணக்கினி லெழுந்து
தன்போற் பிறரையும் இன்புறு மெம்மைக்
கண்டு களிப்புக் கொண்டிட எழுப்பி,
பிறந்து வளர்ந்து சிறந்து விளங்கித்
தோளொடு தோளுற ஆளொடா ளாயஇவ்
இருப தாண்டா ஒருவரை யொருவர்
இன்னு ரென்று முன்னல் நின்று
காணுது பிரிந்து மாணுர் போல
வறிதினில் தந்தையும் மைந்தனும் அறிமுகம்
இன்றி யிருந்தே இன்றெதிர்ப் பட்டு
நேரினில் நின்றே ஆர அமரக்
கண்டு களித்துக் கொண்டிட இன்பம்
இலகொளி பரப்பி மலர்முகங் காட்டி
அளியறக் கதிரவன் தெளிவுறத் தோன்றினன்.

இங்ஙனம் தந்தையும் மைந்தனும் அங்ஙனம்
கண்டு களித்தால் ஒண்டமர் நடவா.
ஆயிர மாயிர மாயிர வீரர்
இன்னுயி ரீயா திருப்பர்
மன்னுக எங்கள் மாணறி முகமே. 4

———

எட்டாங்களம் நான்காம் காட்சி (40)

**இடம்:** பாசறை **காலம் :** காலை

**நடிகர்:** மழவன், குமரன், தூதுவன், பழையன்.

**திரை-1.** மழவன் கூடாரம்.

**நடிகர்:** மழவன், குமரன், தூதுவன்.

**கங்கத் தூதுவன் மழவனிடம் தனிப்போர் பற்றிக் கூறல்,**

(நேரிசை யாசிரியப்பா)

**தூது:** உருகெழு வானி தருவளக் கொங்குப்
பெரும்படைத் தலைவ! கரும்படைக் கழனி
ஆலைப் புகைபோய் மேலைக் கருமுகில்
வெரிநுறப் பொரூஉம் பெருவளக் கங்கத்
தூதுவன் வணக்கம்

**மழ:** யாதிவண் போந்த
காரணம்!

**தூது:** நிறைந்த ஊருணி போல
மாற்றலர் கொளக்கொள மாற்றலா ஆற்றலன்
நிலவுதல் விடுத்திவ் வுலகொருங் குறினும்
இணைப்பட லொல்லாத் துணைபடைத் தலைவன்
பொங்குவேள் போரைக் கொங்குவேள் என்னும்
பேரான் பின்னிலை பேரான் வெற்றியைத்
தாரான் வாகையந் தாரான் வெந்நுறின்

ஊரான் மிகுபுக ழூரான் தகைமிகு
நீரான் தன்னுடன் யாரா கினுமொரு
வீரனை யன்னுன் நேரெதிர் நின்று
தனிப்போர் புரிய அனுப்பு மாறெம்
அருந்திறற் கங்கப் பெரும்படைத் தலைவன்
அற்கா உரனுடைத் தெற்கா ணம்பி
விடுத்தனன் என்னை அடுத்தது காறும்
இருபெரும் படையும் பொருதல் தவிர்த்தே
ஓய்ந்திருக் கட்டுமென் றேய்ந்ததும் கூறிவா
என்றது புகல ஒன்றினன் ஈங்கே.

மழ: அப்படி யாசரி அப்படி யேயனுப்
புகின்றனன் ஈதோ இகன்றவோர் வீரனைச்
சென்றுநீ யுடன்பு கன்றிடு வாயே.

தூது: வருகிறேன் தலைவ !

மழ: சரிசரி போய்வா.

(தூதுவன் போக)

ஏற்புடைத் ததுவாப் பாற்பட வகுத்த
நாற்படை நடத்தும் வேற்படைக் குமர !
வீரருள் வீரனும் தீரன் கொங்குவேள்
நம்பியோ டவனை நம்பியே கங்கன்
படையெடுத் துள்ளான். மிடலுடை யவனுடன்
தனிப்போர் புரிய முனைப்பட நம்மில்
தக்கவர் யாருளர் ?

கும: புக்கவட் காரை
ஒக்கவே யழிக்கத் தக்கபோர் மிக்க
பெரும்படைத் தலைவ ! வரும்படை தாங்கும்
வலிமிகு மழவ ! வலிதினி லொன்னர்
தேடிய பொருள்கை கூடுதல் போல
விடுமறை கூவலை விடினேற் காதது
பிழையா கொடுநமக் கிழிவா கும்மே.

மழ: யாரை யனுப்ப ! யாரவ னோடு
தனிப்போர் செயுமத் தனைவலி யுள்ளார்.?

கும: வாளெறிந் தேகொங்கு வேளிரிந் தோடப்
பழையனை யனுப்புதல் கிழமைய தாகும்.
மழ: அன்னவ னிங்கு துன்னின னல்லனே.
கும: தாயகப் பற்று மேயநம் பழையன்
மன்னவ னழையா னென்னினும் கங்குலில்
உற்றவன் தனியே சற்றதோ தொலைவில்
தங்கி யுள்ளான் செங்கதிர் வேலோய்
சென்றுநா னவன்பால் நன்று நவின்றே
உடன்படச் செய்து கடம்படு வெங்களி
றனையான் தன்னை இனிதே அழைத்து
வருகிறேன் தலைவ !
மழ: சரிசென் றவனை
எப்படி யேனும் கைப்பிடி யாக
உடனழைத் தேயிவ ணுறுதல்
அடல்வலிக் குமர நின் கடனா கும்மே. 1

—O—

திரை-2. பழையன் கூடாரம்
நடிகர்: பழையன், குமரன்.

பழையன் கொங்குவேளுடன் தனிப்போர் புரிய
உடன்படல்.

(நேரிசை யாசிரியப்பா)

பழை: (தனி மொழி) களப்போர் கண்டு களிக்குவான் வேண்டிப்
பனிப்பகை யெனும் பெயர் விணைப்பட ஒளிகால்
வெயிற்கை நீட்டிச் செயற்படச் செய்து
கைகால் விறைப்பும் மெய்கோள் மரப்பும்
நீக்கி மறவரை ஊக்கி முனைப்பட
எதிர்பார்த் துள்ளான் கதிரவன் மறவரும்
களத்திடைக் குதிக்க உளப்படு கின்றனர்.
முதையறு புட்போல் ஒதுங்கி யிருப்பதாய்
எண்ணியே என்னை நண்ணினன் பாவம் !

அறிவிலன் கங்கன் குறியெதிர்ப் பாகக்
கருதினன் விறலை. வருபகை நாட்டினைப்
பொறுத்தது மட்டுமா ? பொறுத்துள மக்கள்
ஒவ்வொரு வர்க்கும் ஒவ்விய பங்கதில்
உண்டெனும் உண்மையைக் கண்டில ரன்றே
ஒதுங்கி யிருப்பர் ? ஒதுங்கி யிருப்பரோ
ஊர்சுடு தீயவ் வூர்படு வீடுகள்
ஒவ்வொன் றனையும் கவ்விடு மென்னும்
உண்மை யுணர்ந்தோர் ? உண்மையில் நாட்டினைக்
காத்திடும் பொறுப்பு வாய்த்தவன் மன்னன்
மட்டுமே யல்லன்; ஒட்டியந் நாட்டில்வாழ்
மக்களெல் லோர்க்கும் தொக்கியே காக்கும்
இன்றி யமையா ஒன்றிய பொறுப்பாம்.
நானிந் நாட்டில் தானே பிறந்தேன் ?
அன்றியும் இந்நாட் டாட்சிப் பொறுப்பை
இன்றல பல்லாண் டேற்றே யிருந்தவன்.
என்றுய் நாடிது வென்றிடிற் பகைவர்
அங்ஙனம் கூறுவ தெங்ஙனம் கூடும் !
தானழைக் கவிலை நானிப் போரிற்
கலந்துகொள் ளேனென அலந்தனன் மன்னவன்.
பெற்றதா யினமும் பிறந்ததா யகமும்
கற்றுணர்ந் துள்ளங் கருதுதாய் மொழியும்
வளிமுதல் உடல்நிலை தெளிதரு நாடிபோற்
போற்றுதற் குறியன வாகும். மாற்றலர்
தாயகங் கொள்ளின் மேயமற் றிரண்டும்
தனித்துவாழ் கிற்குமோ ! இனத்தவ ரோடு
பகைத்தெதிர் நின்று வகைப்படப் பகைவர்
பொருதிடும் போது பெருவீர னாகிய
நான்றனித் திருந்து வான்றனிப் போரை
வேடிக்கை பார்த்தல் நாடொத்த செய்கையோ !
அடங்கட்டும் அமைதி தொடங்கட்டும் களப்போர்
வேலும் வாளும் மிழற்றும்
ஒலியைக் கேட்டே உவக்குவம் இனிதே. 2

கும: பெரியீர் வணக்கம்.

பழை: வருவாய் குமர!
உட்கா ரீங்கே வட்கா ராங்கே
எடுத்துள்ள போதனை விடுத்தீங் கெதற்கு
வந்தனை ?

கும: ஐயா ! வந்தனன் தங்கள்
இன்றி யமையா உதவி ஒன்றன்
பொருட்டா யீங்கே அருட்டிற முடையீர்.

பழை: என்னது பகராய் !

கும: கன்னவில் தோளாய் !
இன்றிரு படையும் வென்றி தோல்வி
இன்றிருக் கட்டும். மன்றத்துப் பலவின்
பழந்தூங்கு முழவின் கொழுந்தூங் கிருகண்
தென்காற் பூசொலி தன்கா துறவே
போர்ப்பறை முழக்கென் ருர்ப்புற் றெழூஉம்
அத்தகு மறக்குணம் ஒத்துள தோன்றல் !
உலகமே எதிர்க்கினும் இலவெனக் காணும்
ஆற்றல் மிக்க ஏற்றுரு மன்ருன்,
அயின்றிடல் போற்படை பயின்று பயின்று
தெருளுறும் ஆணரிக் குருளை போன்ருன்
மங்கா மறப்புகழ்க் கொங்குவேள் என்னும்
பேரா னொருதனிப் போரிட அவனிகர்
வல்லா னொருவனை வல்லே தேர்ந்தெடுத்
தனுப்புக என்ற முனைப்பொடு கங்கப்
படைவலான் அறைக்கு விடைகா ணுதற்கே.
உற்றனன் பெரியீர் மற்றவ னோடு
தனிப்போர் புரிந்து மனப்பால் குடிக்கும்
அன்னவன் றன்னை வெந்நுறச் செய்து
படைவலான் வெள்க விடைதந் தருளல்நும்
நடையொடு பட்ட கடமை யாகும்.

பழை: அப்படி யாஅக் கைப்படு சிறுவனை
வெலநா னெதற்கிங் கிலையோ ஒருவன் !

கொங்குவேள் போல்விறல் தங்கிய ஒருமகன்
ஈங்கெனக் கிருந்தால் ஆங்கவன் தன்ெடு
தனிப்போர் புரிய அனுப்புவன்; எனக்கோ
ஆண்மகன் இல்லை. ஆண்மக ஞெருவனைத்
தேர்ந்தனுப் புங்கள். ஓய்ந்திருப் பேனை
ஏனழைக் கின்றீர் மானரிக் குமர !

குமः இல்லை ஐய ! வல்லஅவ் விளைஞன்
புலியொடு புலிநேர் வலிகொடு பொரல்போல்
தங்க ளொடுதான் அங்கவன் தனிப்போர்
புரிய விரும்புகின் றனனும், பெரியீர் !
ஆனல் தாங்களோ ஏனே அதனை
ஏற்க மறுக்கிறீர். நாற்கை யொடுபொர
இருகை வயமா வெருவுறல் காணின்,
மருவலர் வெருவுறு பெருவிறற் பழையன்
இவறினன் போல அவனது பெருமையைத்
தன்னள வேவைத் தென்னே ராணரிக்
குருளையை எதிர்த்துப் பொரவர விலையென
நன்னுட் டுறுபுகழ் இந்நாட்டு மக்கள்
பேசுவ ரன்றே ஆச்று புகழோய் !

பழை: நானு இவறன் ! நானெத் தகையவன்
என்பதை இதோஒ முன்புறக் கண்டுநீ
களித்திடச் செய்கிறேன், அளித்தகு குமர !
ஆனல் பகைவர்க்கு நானர் என்பது
தெரிவது கூடா. தெரியவே கூடாது
கொங்குவே ளுக்கியான் அங்கவன் தன்ெடு
தனிப்போர் புரிய முனைப்போ டுள்ளதாய்த்
தெரிவித் திடுக.

கும: தெரிவித் திடுகிறோம்
மிக்க நன்றி, தக்கோய் வருகிறேன்.

(போக)

பழை: கொங்குவேள் அங்குளான் இங்குளோன் நானே.
சிறுவன் உலகியல் அறிவிலன் பாவம் !
ஏன்றனித் தென்ெடு தான்றனிப் போர்செய

விரும்புகின் றனனே? கரும்பெனக் காய்ந்த
இரும்பினைத் தீண்ட விரும்புநன் போலும்!
படுவது படுவான் பாவம்
தொடுகுறை யுள்ளார் துணிகுவ தியல்பே. 3

---

திரை-3. மழவன் கூடாரம்.

நடிகர்: மழவன், குமரன்.

பழையன் உடன்பட்டது கேட்டு மழவன் மகிழ்தல்.

(நேரிசை யாசிரியப்பா)

மழ: (தனிமொழி)
என்னசொன் ஞனே பழையன், மன்னவன்
மனத்தை மாற்றிப் புனத்துறு காவற்
காரனை விலக்கி வேரறப் பயிரைத்
தின்னென விலங்கினைத் துன்னுறச் செய்தவோர்
ஏவலன் போல நாவலர் போற்றும்
விழைதகு பெரும்பேர்ப் பழையனை விலக்கிப்
பகைவரை நாட்டிற் புகுதரச் செய்தேன்.
ஏனிவ் வாறு தானிதைச் செய்தேன்?
நானு செய்தேன்? நானிதைச் செய்திலேன்.
பின்னுர் செய்தார்? என்னழுக் காறு
செய்த திப்படி உய்தியி லாதெனை.
அப்பெரும் பழையன் ஒப்பரும் பெருமை
காணப் பொருது நாணப் படாத
அழுக்காற் றினுலிவ் விழுக்காற் றினையான்
செய்தேன் அந்தோ! செய்தற் கரிய
தீச்செயல் தன்னை மாச்செய லாகச்
செய்தேன் எய்யா துய்தியி லாளன்.
அழுக்கா றெனுமொரு பாவி ஒழுக்கா
றதனைக் கெடுத்துப் பதராக் கியதெனை.
பொல்லாப் பொருமை இல்லா திருந்தால்
நானிருப் பிடத்தவன் தானிருப் பானலோ!

அங்ஙனம் இருக்கின் இங்ஙனம் கங்கர்
படையெடுத் திடுநிணைப் புடையவ ராவரோ !
வண்ணவண் கொங்கை எண்ணியே யிராஅர்.
பொருளையின்கொமடுமையாற்பெருவிடர்பெற்றேன்.
ஏனினுங் குமரன் தானுற வில்லை ?
வரமுடி யாதென மறுத்துவிட் டானோ ?
இருவரு கிறேனென இருத்திவிட் டானோ ?
ஒன்றுமே புரிகிலை.

கும: நன்றதே கொண்டு
வந்தனன் பழையனி யைந்தனன் தனிப்போர்
செய்திட ஏற்றது செய்திடச் சொல்லி
யனுப்புக.

மழ: மகிழ்ச்சி, அனுப்புகின் றேனவன்
என்னதான் சொன்னான் ?

கும: என்னதான் சொல்லுவான் ?
ஒல்லார் வலிய வல்லா னொருவனைப்
பொரவனுப் புகவென வரவிலை நானென
மறுத்திட அவனென வெறுத்திடு மத்தக
இழிமக னுநான் மொழியுமுன் சரியென
ஒப்புக் கொண்டனன் ஒப்பறு பெரியோன் !

மழ: பெற்றனம் வெற்றியாம் பேணார்
உற்றனர் தோல்வி ஒழிந்தது பகையே ! 4

—:O:—

திரை-4. தெற்காணம்பி கூடாரம்

நடிகர்: தெற்காணம்பி, பழையன்.

பழையன் தனிப்போர்க்கு இயைந்தமை அறிந்து
கொங்குவேள் மகிழ்தல்.

கொங்: அன்புடை ஐய ! அன்புடன் என்னை
(வந்து) அழைத்தமை எதற்கோ தழைத்ததென் உள்ளம்.
தெற்: தழைத்துக் காய்த்துப் பழுத்ததுன் உள்ளம்.
கொங்: பிழைத்தனன் பெரியீர் மொழித்தொடர் தெளிப்பீர்.

தெற்: பெரும்பெயர் இளைஞநீ விரும்பிய வாறே
ஒத்தனர் கொங்கர்த னித்துநின் னேடு
பொரவொரு வீரனை வரவிடுப் பதுவாய்.
உனக்கெதிர் பொரவரு வனுக்கிணை யவனும்,
களித்திட நம்மவர் களத்திடை யியல்வாய்.
கொங்: மகிழ்ந்தனன் ஐயநீர் வாழ்த்தப்
புகழ்ந்திடப் பகைவர் பொருதுவெல் குவனே. 5

—: O :—

## எட்டாங்களம் ஐந்தாம் காட்சி (41)

இடம் : காவிரிக்கரைப் போர்க்களம் காலம் : காலை

நடிகர் : பழையன், கொங்குவேள், காமஞ்சரி,
முரசறைவோன், கொங்குமறவர், கங்கமறவர்,
கண்டோர், பாடலம்.

பழையன், கொங்குவேள் தனிப்போர்.

திரை-1: முரசறைதல்

(நேரிசை யாசிரியப்பா)

மு-ன்: கங்க வீரன் கொங்கு வேளும்
கொங்கு வீரன் ஒருவனும் இங்கு
களிறும் களிறும் குளிறி யிகன்றும்
அரியும் அரியும் எரிசினங் கான்றும்
புலியும் புலியும் வலிகொடு முயன்றும்
எதிர்தர நின்றே அதிர்தா முழங்கிப்
பொரவரு குநபோல் எரிசினங் கான்று
தனிப்போர் புரிய முனைப்பொடு சீறிக்
களத்தினை நோக்கிக் களித்துளம் ஊக்கிப்
போதரு கின்றர் ஆதலி னலே,
பொருகை தவிர்ந்தே இருபடை மறவரும்
ஓய்வின ராக வாய்வரு மமைதியா
நண்ணுறும் ஒருதனி ஞாட்பைக்
கண்ணுறக் கண்டு களித்திடு வீரே. 1

திரை-2. கண்டோர் கூற்று

இருபெரு வீரரும் பொருகளம் நோக்கி வருதல்,

க-ம1. அதோபார் வருகிறுன் இதோவந் தேனெனச்
சினப்புலி போல விணைப்ப முணைஇ
ஏறு போல வீறுடன் நடந்து
நேருற நோக்கிப் போரரி யேறுபோல்
தையிய எஃகு மெய்யுரை தயங்கக்
கையினில் வேல்வாள் வையுற விளங்கக்
கட்டழ கோடு விட்டொளிர் திருமுகம்
காண்போர் கண்ணைக் கவர்தரும் மாண்பார்
தோற்றமும் ஏற்றமும் ஆற்றலு முடைய
அவனோ டவனது குதிரையும் அவனைப்
பின்றொடர் கின்றது துன்றிய நிழல்போல்.
உளை நிமிர் ஏறுபோல் உடையநம் கொங்குவேள்
இளைஞனே எனினும் எதிரிலா வீரன்
இவனுக் கவனிளைத் தவனலன் மன்னே.

கொ-ம-1 இழந்த மணியால் உழந்தர வதனை
அடைந்தது போலும். மடந்தபு மலடி
உற்றொரு பிள்ளையைப் பெற்றது போலும்
புதைய லெடுத்த முதுபொருள் கண்டான்
தண்டா உவகை கொண்டது போலும்
தற்பிரிந் தகன்ற அற்புடைக் காதலன்
பிரிவால் வருந்திய சுரிகுழ லொருத்தி
ஆற்று மையினால் மாற்றுக் கண்ணொடு
துன்புறு காலை அன்புறு கணவன்
வரக்கண் டுவக்கும் முருக்கித ழவள்போல்
நெடுநாட் பிரிந்திருந் தடல்வேற் பழையன்
இங்குறல் கண்ட கொங்கு மறவர்
நிவப்புற முகமலர்ந் துவப்பதைப் பாராய்.

கொ-ம-2 ஆணரிக் குருளைபோல் மாணெழில் பொலிதரப்
பழையனை நோக்கி மழைமருள் குகைநின்
றொருபுலி கண்டு வருபுலி மான

வாளொடு வேல்கொடு காளைபோல் நடந்து
வருகொங்கு வேளொரு பெருவீர னேகொலாம்.
இந்நிலை யினில்முடி வென்னாகு மோகொல் !

கொ-ம-1 என்னாகும் அவனுடல் மண்ணாகும்.

கொ-ம-2 அங்ஙனம்
அன்னனை எளிதா எண்ணுதல் தவிர்க.

க-ம-2 ஆராப் போர்வெறி தீரா வெஞ்சினம்
கொண்டநம் கொங்கு வேளைக் கண்டு
புன்னகை தவழ மின்னொளி யென்ன
நேர நோக்குமவ் வீரனின் ஏற்றமும்
அஞ்சா நெஞ்சமும் எஞ்சா ஆண்மையும்
என்னே ! போர்முடி வென்னா குங்கொலோ !

க-ம-1 என்னாகும் மழையிடி மின்னாகும் மன்னே !

கொ-ம-3 இருபடை வீரரும் பொருகை தவிர்ந்தே
தனிப்போர் வீரரைக் குனிப்பொடு நோக்கி
ஆங்காங் கமர்ந்து பாங்கோ டிருப்ப,
இருபெரு வீரரும் பொருகள நாப்பண்
திமிர்ந்து நேர்தலை நிமிர்ந்து நிற்றல்,
வளம்படு கழனியிற் களம்பட முதிர்ந்த
செந்நெற் கதிர்கள் பொன்னெனச் சாய்ந்து
தரையிடைக் கிடப்ப இருபெரு நெற்றாள்
பொற்கதிர் தாங்கிநேர் நிற்குந போலும்
நண்ணுறு காட்சியைக் கண்ணுறக் காணாய் !

க-ம-3 இருபெரு குன்றம் வருமிரு கால்கொண்
டுற்றெதிர் பொருத நிற்றல் போல
இருவரு மெதிரெதிர் பொரநிற் கின்றனர்.
இப்பெருங் குன்ற மிரண்டும் ஒப்புற
முட்டி மோதிக் கட்டித் தழுவி
உருண்டுபுரண்டு தெருண்டெழுந் தொன்றையொன்
றாக்கித் தாக்கித் தூக்கிப் போக்கிப்
பற்றிக் கிட்டி எற்றிக் கொட்டிக்
கடுத்துப் பேசி எடுத்து வீசி
அடுத்துப் பிடித்து மடுத்து நொடித்து

வெட்டிக் குத்தித் தட்டுக் செட்டுப்
பாறிச் சீறி மீறி நூறி
வல்லிது மெல்லிதை வெல்லுங் கொல்லே!
இனிநமக் கிங்குவே லையிலை
கனிபெற முயறலைக் காண்டிடு வோமே. 2

---

திரை - 3:

இருபெரு வீரரும் எதிர்ப்படல்

நடிகர்: பழையன், கொங்குவேள்.

பழை: குமரன் கூறிய தமையவும் உண்மையே.
தோற்றமே ஏற்றமி காற்றலைச் சாற்றும்
ஆணரிக் குருளைபோல் மாணுறு வடிவம்
உருக்கெழுப் போன்ற வெருக்குறு கட்டுடல்
காண்போர் கட்புலம் மாண்படும் அழகன்
யார்மகன் கொல்லோ போர்முகத் தென்முன்
அஞ்சாது போதரும் வஞ்சமில் இளைஞன்.
திருவுற வமைந்த ஒருபெருஞ் செல்வி
பசும்பொற் கம்பளத் தசும்புற நின்று
முட்டிற் றிலவா அட்டிற் பணிசெய்
திடையிடை வந்து விடைபெற நிற்கும்
ஏவ லாளனை ஓவுத லின்றி
வாளன கண்ணால் ஏளனமாக
நோக்குதல் போல நோக்குநன் கொல்லே!
சுற்றுறச் சூழ்தரு மற்றிகல் மறவரை
மதியான் சிறிதும் பதையான் உள்ளம்
கண்டெனை விண்முட் டுண்டவொ ரரண்மனைப்
பூங்கா நாப்பண் ஓங்கி வளர்ந்த
செழுசெழு மரம்போற் கொழுகொழு வென்னப்
பொலிவுற நிற்குநன் வலிகெழு குரிசில்!
அப்பூங் காவின் வைப்பா யமைதரு
பசும்புற் றரையில் விசும்பிற் றிகழ்தரு
வெண்ணில வென்னத் தண்ணென விழும்
ஊற்றுநீ ரோசை போற்றமி ழின்குரற்

கிள்ளைபோற் பேசுமித் துள்ளணற் காளையைப்
பார்த்ததும் ஏனோ நீர்த்தக என்னுளம்
எரிகாண் இழுதென ஒருவா றென்னையும்
அறியாது நெகிழ்ந்து குறியா தொன்றும்
தடுமாறு கின்றது விடுமா றறிகிலன்.
அன்னவன் பாலெனக் கின்னவென் றறியா
அன்பும் இரக்கமும் தன்புதல் வன்றனைக்
கண்டாற் போல உண்டா கின்றன.
'கொங்குவேள்' செம்பொருள் தங்குறு நற்பெயர்.
உயிரினை யுருக்கியிப் பெயரே அவன்பால்
முன்பின் னேவறி முகமிலா திருந்தும்
அன்புணர்ச் சியைவுண் டாக்கிய தெனக்கு.
கங்கவேள் என்பதே கொங்குவேள் என்னத்
திரிந்தென் னுளத்தை வருந்துகிற் கின்றது
போலுமிவ் வாறொரு போதும்
மாலுற்றி யானும் வருந்திய திலனே. 3
கொங்: என்னுடன் தனிப்போர் புரியத் துன்னி
எனையெதிர் பார்த்துத் தனைநேர் ஓரரி
யேற்றினை யெதிர்பார்த் தாற்றிடைத் தனியே
நின்றிடும் பெருவலி யொன்றிய ஆணரி
யேறுபோல் நிகரில் வீறுடன் நிற்கும்
அப்பெரு வீரனின் ஒப்பறு தோற்றமென்
உள்ளக் கிடக்கையைக் கொள்ளைகொண் டதனால்
கண்டதும் அவனை விண்டிட இயலா
இனம்புரி யாதவோர் தனியன் புணர்ச்சி
தந்தையைக் கண்ட மைந்தனுக் குளவாம்
அத்தக வன்பெனு ளத்தினி லுண்டா
கின்றது. நிலைபெயர் குன்றென ஆங்கு
நிற்பவர் மற்றுங் கெற்பயந் திட்ட
எந்தை பழையனு இருக்க லாமோ!
தந்தையை யறியா மைந்தனை யிவ்வா

றெண்ணிடச் செய்குதென் புண்ணுறு நெஞ்சம் !
என்னிதன் காரணம் தன்னையா னறிகிலேன்
எய்யா தெண்ணிய எண்ணம்
செய்யா நின்றதிச் செயலினைப் போன்மே. 4

தந்தையும் மைந்தனும் உரையாடல்

(நிலைமண்டில ஆசிரியப்பா)

பழை: கொங்குவேள் ! அங்கேன் இங்குவா !நானே
களம்பல கண்டவன் உளம்படத் தோல்வி
என்பதை யறியா முன்புயர் வீரன்.
ஒழுக்குடைத் தமிழர் வழக்கினி லேயே
இல்லாத ஓரயற் சொல்லாகு மஃதே.
குழந்தாய் ! பொருதிட விழைந்தனை என்னுடன்
ஒல்லார் தம்மெதிர் வல்லே சென்றியான்
வென்றிகா ணுதபோர் ஒன்றுமே இல்லை !
வெல்லாப் பகையே இல்லையிவ் வுலகில்.
மற்றுநீ யோமிகச் சிற்றிளஞ் சிறுவ
னுகவுள் ளனையேன் சாகத் துணிந்தனை !
வாழப் பிறந்தநீ வேழத் துடனெதிர்
கேழலைப் போலே ஏழைமை யாலே
மாளத் துணிந்தனை மீளத் தரேனுனை
ஆளுக்கா ளல்லாப் பாளைச் சிறுவா !
விரும்பத் தக்கது விரும்பத் தகாதது
வாழ்வும் சாவும் ஊழ்வகை யிரண்டும்
ஒருவர் வாழ்வினில் ஒருமுறை யேதான்
வாய்க்கும். ஈன்றநின் தாய்க்குனை இழக்க
ஒவ்வா உள்ளம் செவ்வே அறிவாய்.
இளைஞ ! என்னுடன் வளமார் கொங்கு
நாட்டுக்கு வந்து விடுநின் பாட்டுக்
குரியதாம் எனக்குத் திருமக னுகநீ
இருநினைக் கண்டியான் பெருமிதங் கொள்வேன்.
கொங்குவே ளாகவே அங்குநீ வாழலாம்.
கொம்புங் காலுடை வம்பரிக் குருளை

அவையிற் குகையுறல் நவையுடைத் தன்றோ ?
மற்றவண் நீயென் கொற்றக் குடைக்கீழ்
நின்றன் பொடியான் பொன்றுங் காறும்
என்னுடன் கூடித் துன்னமர் புரிந்து
வீரநீ வென்றி வீரனு விளங்கலாம்.
உன்னையான் கண்டதும் என்னவோ என்மனச்
சான்றவா றெண்ணத் தோன்றுதும். எனக்குப்
பகைவனு உன்னை வகைபட எண்ண
என்மனம் ஏனோ இடந்தர வில்லை
உன்மனப் போக்கை உணர்கின் றிலனே. 5

(நேரிசை யாசிரியப்பா)

கொங்: தங்களைக் கண்டதும் அங்ஙனே எனக்கும்
தோன்று கின்றது வான்றரு புகழோய் !
க-ம-1 அங்குபார் அங்குபார் ! கொங்கு வேளுமக்
கொங்கு வீரனும் தங்கிய பகைவிடுத்
தொருவரை யொருவர் இருபெரு நண்பர்கள்
விண்டுபன் னுட்பின் கண்டது போலத்
தழுவிக் கொள்வதை.
க-ம: 2 உழுவலன் புடையரோ !
கொங்: அன்புடை யண்ணல் ! இன்புடைத் தாங்கள்
பழையன் என்பவ ரல்லவா ?
க-ம-1 தொழுதனன்,
கொங்குவீ ரன்கையைக் கொங்குவேள் பிடித்து
வேட்புடன் என்னவோ கேட்பதைப் பாராய்.
பழை : ஏன் நான் யாரா யிருந்தால் தானென் ?
அறிவுடை யோயிது முறைகொண் டாடும்
இடமா ? பழைய னுடன்பொர உனக்கு
விருப்ப மில்லையா ?
கொங் : விருப்ப மிலா திலைச்
சீரிய தாங்கள் யாரென அறிந்து
கொளற்கியான் கேட்டேன் துளக்கறு பெரியோய் !
பழை: வீரனே நானொரு வீரன் என்பது

தெரிகிலை யுனக்கேன் வரிசழற் பழையன்
மறுக்கவோ அல்லது பொறுக்கென அடைக்கலம்
புகவோ எண்ணுகின் றனையோ பகைவனை ?
இல்லையேல் அவனெனில் வல்லையென் றவனை
மகிழ்ந்திடப் பலவாப் புகழ்ந்து பேசிப்
பரிசுகள் பலபல வரிசையின் வழங்கிப்
பீடுடைப் பழைய னோடுடன் பாடு
செய்து கொண்டுநீ உய்தியே சென்று,
‘ முன்னொரு நாள்யான் என்னொடு தனிப்போர்
செய்திடக் கொங்கர்க் கெய்துக எனவறை
கூவல் விடுத்தேன் மேவினன் பழையன் ;
ஆனால் அவனும் நோனா மையினால்
என்பாற் பரிசுகள் அன்பாய்ப் பெற்றே
என்னுடன் உடன்பா டன்னான் செய்து
கொண்டிக லின்றி விண்டனன் ' என்று
கொங்கரை யிகழ்ந்து கங்கர்பா ராட்டைப்
பெற்றிடச் சூழ்ச்சியு ஞற்றுகின் றனையா ?
புரிந்தனன் நன்குநீ புரிந்திடுஞ் சூழ்ச்சியை.
சிறுவநீ விடுத்த அறைகூ வலையேற்
றுன்முன் வந்து தென்மலை போன்று
நிற்கிறேன். நிற்கக் கற்பொரு தடந்தோட்
பழையனைப் பற்றியேன் விழைதக வினவு
கின்றனை இளைஞ ! என்றனோ டன்றிப்
பொருவறு பழையன் ஒருவ னுடன்றான்
புரிகுவை யோபோர் ? புரிகழற் பழையனைக்
கண்ட வுடனே அண்டர்கள் வெருவிப்
புலிகாண் கலைபோல் வலியிழந் தோட்டம்
எடுக்குவர் என்பதைத் தொடக்கற அறிவாய்.
வாங்குவிற் பழையன் ஈங்குறிற் போரே
நடவா வென்பதை அடைவா யறிவாய்.
உன்னறை கூவலை உன்னதாக் கொண்டே
என்னிடம் புகலெனத் துன்னுவா யாக.

கொங் : இல்லைநீர் பழையன் அல்லவா ?

பழை : இல்லை.
பழையன் பழையன் பழையனென் றேன்நீ

பழை : கையினில் இல்லையேல் மெய்யினில் உள்ளது.
கொங் : மெய்யினில் உள்ளது பொய்யினில் இல்லை
என்ப துண்மையே. மன்பதை என்பது
வாழ்க்கைக் கடலில் நீக்கற நீந்திடும்,
அங்ஙன நீந்தப் பொங்குவன் றிரையால்
எடுத்துயர் மேட்டில் படுத்துள அதனை
அடுத்தவோர் நொடியில் மடுத்திடும் நீரில்.
மாறி மாறி வருந்தாழ் வுயர்வினைக்
கூறு படுத்துக் கூறயார் வல்லார் ?
திரைநமை எடுத்துத் தரையிற் கிடத்துமோ
நீரிற் படுத்துமோ யாரிதை யறிவார் ?
அளிப்பட நிகழ்ந்தபின் வெளிப்படு முண்மை.
மொய்குற மற்போர் செய்குவம் முதலில்.
பழை : சரிசரி யுன்கை வரிசையை முதலிற்
காட்டுக.
கொங் : ஈதோ காட்டுநன்
வாட்டமும் பணிசெய் வலந்தோ ளோயே ! 6

மற்போர்

கொ-ம-1 யானைமேல் ஒருசிறு பூனைபாய் வதுபோல்
மழையமல் மலைநிகர் பழையன்மேற் சிறுவன்
பாய்கிறுன் பாவம்! ஒய்குவான் எளிதில்.
க-ம-1 மலையும் தகரும் இலைசிற் றுளியால் !
உருவும் வலியும் ஒருநிறை யன்றே.
கொ-ம-2 அடடா சிறுவா ! விடடா பிடியை.
க-ம-2 பாரதோ கொங்குவேள் வீரமே வீரம் !
காழ்த்தபே ரெழுப்போல் வீழ்த்தினுன் கொங்கனை.
க-ம-1 விழுந்தவக் கொங்கன் எழுந்தனன் குன்றுபோல்.
பழை : புன்கா இதோபார் என்கை வரிசையை.
க-ம-2 அடடா இளவலைக் கடாநிகர் கொங்கன்
பந்துபோல் தூக்கியெ றிந்தனன் வீசி.
கொ-ம-1 முடியொடு பெருமலை படியிடை உருளல்போல்
இருவருந் தரையினில் உருளுதல் பாராய்.
க-ம-1 ஒட்டியே இருவரும் நெட்டுறை யினைச்சம்

மட்டியால் அடித்தல்போல் விட்டுவன் கையினுல்
அடியடி யடியென அடிக்கும்
கொடுமையைக் காணக் கூசுதும் விழியே. 7

வேல் வாட் போர்

பழை: எடுவேல் வாளைப் படுபோர் செய்வோம்.
கொ.ம-1 எறிந்தான் வேலை இறந்தான் சிறுவன்.
கா-ம-1 தப்பினுன் கொங்குவேள் எப்படிப் போர்த்திறம் !
கொங்: வல்லவன் மிகவுமுன் சொல்லிய படியே
வலிகொண் டெறிந்தவேல் புலியின்மேற் படாது
புலந்துபோய்ப் பாவம் கலந்தது மண்ணில் !
பழை: விழித்தகண் வேல்கொண் டெறியின் அழித்திமைத்
திடினேட் டென்னப் படுவது தமிழ்மறம்.
ஆனுல் நீயோ நானெறி வேல்கண்
டஞ்சினை யோடி எஞ்சினை பாவம் !
இதுவே கங்கர் புதுமறம் போலும் !
கொங்: இவ்வேற் கென்ன செவ்விறை பகர்வாய் ?
பழை: என்கேடயமே உன்கை வேற்கு
விடையிறுத் திட்டதுன் வடிவேல் மண்ணைக்
கவ்வியே கிடக்கும் செவ்வியைக் காணுய்.
கொ-ம-2 ஆஆ ! ஒழிந்தான் ஒஓ! சிறுவன்
அப்பெருந் தண்டுக்குத் தப்புவ தெங்ஙனம்.
க-ம-2 ஒழிந்தான் கொங்கன் ஒழிந்தான் தண்டை
ஓங்கி எறிந்த விசையைத் தாங்காது
தட்டுக் கெட்டு வெட்டிய மரம்போல்
திருகிக் கொண்டு தரையில் விழுந்தனன்.
தப்பினுன் கொங்குவேள் அப்புறஞ் சாய்ந்தே.
கொங்: ஏனே என்னுளம் காஞற் றம்புபோல்
ஒருநிலைப் படாஅது பரபரக் கின்றது.
மாகடும் பகைவன் ஆகிய உன்பால்
எணையறி யாத அனகழி விரக்கம்
உண்டா கின்றது தண்டா லெறிந்துமென்
மறக்குணம் ஏனே பிறக்கிடப் பார்க்குதும்,
என்னெலும் புகளிப் பொன்னியின் மணலிற்

கலந்து விடுமென வலந்தனை ஆனால்,
உன்குறுந் தடிதான் புன்குறை யாளர்போற்
கவ்வியம் மணலை அவ்வுடன் கலக்க
அப்பொறை தாங்காக் குப்புற விழுந்தனை.
என்பால் சினங்கொளா உன்பால் எனக்கும்
இலையுண் டாக உலையெரி சீற்றம்.
வல்லவன் பழையன் அல்லனான் என்கிறாய்
அவனிலை யாயின் எவனென் உளத்தில்
உன்பால் இவ்வள வன்புறக் காரணம்
என்னவோ என்றனக் கின்னென விளங்கிலை.
ஆனால் நீயார்? ஏனோ பேசாய்.
இளைஞனே எனினுநான் களம்பல கண்டவன்
உன்னனை யபல முன்னணி வீரரின்
அதர்படு பொறையன முதுகினைக் கண்டுளேன்
அடுகளம் பட்டுயிர் விடுமார் தம்மழு
குரலினைக் கேட்டு மருளுறு நெஞ்சினன்.
ஒட்டுற இகலார் பட்ட களத்துக்
குருதிவெள் ளத்தில் வருகா விரிநீர்
ஆடுதல் போல ஓடியு லாவி
யுள்ளனன் கழல்சேந் தொள்ளழல் பூப்ப.
ஆனால் உன்மீ தேனோ எனக்குத்
தனியோ ரன்பு கனியா நின்றது,
கட்டுக் கடங்கா விட்டதவ் வன்பே.
அன்னதன் காரணம் இன்னென விளங்கலை.
இல்லையேல் இவ்வேல் வல்லவுன் உயிரைத்
தீப்பட வேகுடித் தேப்பமிட் டிருக்கும்

கொ-ம-1 ஏனோ இருவரும் வானா ரெழிலி
பெய்தோய்ந் தாற்போற் செய்வினை தவிர்ந்து
வாளா உள்ளனர் கேளா னாற்போல்.

கொங்: போரை விடுத்திரு வோருமிம் மணல்மேல்
இருந்தே ஒருவர்க் கொருவர் பொருந்திய
உரிமையும் நட்பும் பரிமா றிக்கொண்
டன்புறு தகவா இன்புறு கிற்போம்.

பாரிய பழையன் வீரச் செயல்களைக்
கேட்டுநா னின்புற ஏட்டெழுத் ததுபோல்
எடுத்துக் காட்டுடன் படுத்து விளக்கமாக்
கூறுக கொண்ட மாறினை விடுத்தே.
என்னுடன் பொரவே உன்னுடைப் படையினும்
உன்னுடன் பொரவே என்னுடைப் படையினும்
உளர்பலர் வீரர். வளவிய அன்பு
நிலவுவ தாகப் பொலிதர வேநம்
இருவர்க் கிடையினும் பொருகதிர் வேலோய்!

கொ-ம-2 எழுந்தனன் பழையன் கொழுந்தினைக் கிள்ள.

கொ-ம-1 கண்ணொளி மங்கும் வண்ணம் இடியொடு
கூடிய மின்னல் ஓடியே வந்தவன்
கையிடைப் பட்டபோல் வையிடைப் பட்ட
தாகிய வேலினை ஓங்கிய வாறு
விட்படு கொள்ளிபோற் கட்பொறி பரக்க
அங்கெதிர் நின்றிடுங் கொங்குவே ளோடு
போக்குயிர் நடுங்கரி மாக்கடுங் குரலிற்
கூறுகி றானெவ் வாறு முடியுமோ!

பழை: சிற்றிளஞ் சிறுவ! பொற்றொடி ஒருத்தி
அலுக்கிக் குலுக்கிப் பிலுக்கி நலுக்கி
ஆடிப் பாடி ஓடிக் கூடிப்
பிள்ளை மழலையிற் கிள்ளையைப் போல
இனிமொழி பேசி எனைமயக் கின்றனை;
காரணம் நீயொரு வீரனே யல்லை.
வீரனா யிருந்தால் போரினி லிப்படி
நயமொழி பேசிச் செயலற நிற்பையோ!
கோழை யல்லனான் ஏழையுன் சொல்லால்
அறிவு மயங்கச் சிறுவனே உன்னிடம்
காட்டிய அன்போ ஓட்டம் பிடித்தது.
மஞ்சனே இனிநீ என்சின வெறிக்குக்
கொஞ்சியே பேசி நெஞ்சறை போக்கித்
தப்ப முடியா திப்பொழு தப்படி.
என்படைக் கலங்க ளின்பகைக் கஞ்சி
ஒதுங்கி யிருமுறை பதுங்கி யெனக்கிவ்

விருபெரும் படைமுன் ஒருபே ரிழிவை
உண்டாக்கி விட்டனை. துண்டாக்கி யிருப்பேன்.
வேடிக்கை யாக்கூத் தாடிக் குதித்து
நீடிய என்னடிக் கீடு கொடுக்கா
தேமாற்றி விட்டனை யாமாற்ற லில்லாய்.
கேட்கவுன் அறிவுரை வேட்கிலேன் இனிநாம்
இருவரும் பொருதீங் கொருமுடி வெய்துவோம்.
எடுவேல் வாளைத் தொடுகழற் சிறுவா !
கொங்: எடுத்தேன் வேல்வாள் ஈதோ
அடுத்தேன் காட்டுநின் ஆற்றலை மன்னே !

### போர்

(குறள்வெண் செந்துறை)

கண்-1 வீரர் இருவோரும்
தீர முடனே திர்ந்தார்
கொங்கப் படைவலியும்
கங்கப் படைவலியும்
நேருக்கு நேராஇவ்
வீரர்க்கு ளோராக
எதிர்ந்து பொருவனபோல்
எதிர்ந்தா ரிருவர்களும்
நீலமலை யோடிகன்று
பாலமலை மோதுதல்போல்
கொல்லிமலை யோடமூன்று
வெள்ளிமலை காதுதல்போல்
கோடைமலை யோடுவட
நீடுமலை சாடுதல்போல்
ஆனைமலை யோடுகுட
வானமலை யீடுதல்போல்
விந்தமலை யோடுபொதி
யந்தகைந்து முட்டுதல்போல்
வாடையொடு தென்கால்போ
ராட எதிர்ந்ததுபோல்

கொண்டலொடு கோடைவெ
குண்டெழுந்து பாயுதல்போல்
மூண்டெழுந் திருநெருப்புத்
தீண்டியெதிர் காயுதல்போல்
திசையந் திசையுமிகன்
றிசைய வெதிர்ப்பதுபோல்
இடியே றுடனிடியே
றிடறி யெதிர்ப்பதுபோல்
மின்னொடு மின்னிகன்று
துன்னிப் பொருவதுபோல்
காரொடு காரிகன்று
போரிட முந்துதல்போல்
அரியே றுடனிகன்றோர்
அரியே றெதிர்ப்பதுபோல்
களிறோ டிகன்றுவெறிக்
களிறொன் றெதிர்ப்பதுபோல்
புலியோ டிகன்றுசினப்
புலியொன் றெதிர்ப்பதுபோல்
கோளரி யோடிகன்றோர்
வாளரி தாக்குதல்போல்
நச்சரா வோடிகன்றோர்
நச்சராச் சீறுதல்போல்
பொரமுனைந் திட்டனர்காண்
இருபெரு வீரர்களும்
பாரதோ தாக்குவதைப்
பாரதிர நேரெதிர்ந்து
மாரி பொழியுமிரு
மஞ்செதிர்ந்து விஞ்சுதல்போல்
யாரிந்த வீரர்கட்கு
நேரிந்தப் பேருலகில்
கண்டதுண்டோ இன்றளவி
ரண்டுபெரு வீரரைப்போல்
கேட்டதுண்டோ இன்றளவிவ்
வாட்டொழி லாளரைப்போல்

கண்டதில்லைக் கேட்டதில்லை
கண்டன மின்றேதான்!

(நேரிசை யாசிரியப்பா)

கண்-2 வெல்லுவோர் யாரெனச் சொல்ல முடியா
வல்லவர் யாரெனச் சொல்ல வியலா
வீரமும் ஆற்றலும் ஓரெடை யுடையர்
எப்படிச் சொல்லுவ தொப்புடை வீரரின்
வெற்றி தோல்வியை இற்றென எடுத்தே.
கண்-3 பாரதோ பார்பார் வீரரின் கைத்திறம்!
வெட்டினான் வாளால் வெட்டினான் வாளை
முட்டி மோதிப் பட்ட விரண்டும்.
கண்-4 எறிந்தான் வேலினால் எறிந்தான் வேலை
மறித்தவ் விரண்டும் தெறித்திடல் காணாய்.
பழை: காலெனப் போதுமிவ் வேலுக்கு விடைசொல்.
கொங்: உன்கதிர் வேலுக் கென்கே டயமே
சொற்றது விடைநீ மற்றிவ் வாளுக்
கென்சொல் கின்றனை வன்சொல் வேண்டா.

பழை: தலையுறை யணிதரு சிலஇற குகளைக்
கவ்வியே சென்ற தவ்வள வாவல்.

(குறள்வெண் செந்துறை)

கண்-3 எங்குபோய் நின்றிடுமோ
இங்கிவர் கைப்போக்குத்
தங்கு தடையின்றிச்
செங்கரத் தோடுதல்போல்
ஓங்குவதும் வாங்கியதைத்
தாங்குவதும் ஊங்குமதே.
வெட்டுவதும் குத்துவதும்
பட்டனவாள் வேலயக்கம்.
சீறுவதும் சீறியிளைப்
பாறுவதில் லாதுருள்போல்
சுற்றுவதும் சுற்றிமுனைந்
தெற்றுவதும் நிற்றிலவே.

தோளாலே பற்றுவதும்
தாளாலே யெற்றுவதும்
பற்கறித்து நோக்குவதும்
முற்குறித்துப் போக்குவதும்
கொவ்வைப் பழங்கண்ணைக்
கவ்விக் கனல்தெறிக்க
வெஞ்சினங்கட் காலுவதும்
வஞ்சினமாய் ஆலுவதும்
ஓயா இவர்க்குவமை
ஆயோ ரவர்க்கவரே

(ஆ—தொடர்ச்சி)

கண்-2 மறங்களித் திருவரும் கறங்குபோற் சுழன்று
தோள்கா லோச்சி வாள்வேல் வீச்சினால்
எழுந்தீக் கொழுந்து செழுந்தீப் பட்டு
மண்டிய புகைதி ரண்டுமேற் சென்று
திரண்டெழு காரின் இருண்டது வானம்.
கதிரவன் உவாநாள் மதியென ஆனான்.
பொருதொழில் வீரர் இருவருங் காண்போர்
கண்படு நிழல்போற் கண்பட லானார்.
படைக்கல மிடுக்கொடு படக்கனன் றெழுந்த
மின்கொடி விளக்க முன்கருத் திருண்ட
இருள்கெடுத் தவிரொளி உருவெளிப் படல்காண் ?
இளைத்தவ ரில்லைக் களைத்தவ ரில்லை
இதுவரை யாங்கண் டிலமே இதுபோல்
எதுவரை சென்றீ திருமோ அறியேம்.

கொ-ம1 அடித்தான். அடடா ! இடித்தெனக் கொங்குவேள்
பட்டது பழையன் தலையில்.

கொ-ம2 பட்டதும்
பொடிப்பொடி யானது வடுப்படத் தலையுறை.

கொ-ம1 அங்ஙனம் அடித்த கங்கன் கைவாள்
முறிந்து விழுந்தது. செறிந்தவன் கையில்
வாட்பிடி மட்டும் காட்புற உள்ளது.

கொங்கன் சினவெறி முன்னரிக் கங்கன்
என்படு வானே கொன்படு வானே !

கொ-ம-2 உடையவன் தலையுறை பொடிபடக் கண்டதும்
பரிவுறு பாடலம் அரியே றென்ன
உருமே றஞ்சப் பொருமிய குரலில்
கேட்டநங் காதுகள் ஓட்டை யாம்படி
கனைத்தலைக் கேளாய் எனைத்தின் அன்பே !
அன்பினுக் கடைக்குந் தாழிலை யென்பது
துன்னிய பொருளுடைப் பொன்னுரை யன்றோ !
நாற்கா லுயிரெனல் ஏற்கா திதனை
ஆறறி வுயிரெனக் கூறுதல் பொருந்தும்.
ஆனால் கங்கன் ஆனைச் சினத்தால்
அதைப்பொருட் படுத்திலன் இதுமறக் குணம்போன்ம் !

கொ-ம-1 எழுந்தனன் கொதித்துக் கொழுந்தெரி பரக்க
மின்னொளி சமைய இன்னென இமையாக்
கண்ணொடு பழையன் விண்ணென வெகுண்டு
கெட்டான் சிறுவன் கிளந்து
பட்டான் என்னப் பகர்தலு மிகையே. 9

(இணைக்குற ளாசிரியப்பா)

பழை: ஆஅ! நாஅன் பழையனு!

கொ-ம-2 ஓஒ!
ஒழிந்தான் ஒழிந்தான் !
இளைஞன் நெற்படு களைஞன் பாவம் !

கொ-ம-1 அடங்காச் சினத்தோ டடங்காப் பழையன்,
இழிதகு பொருளிற் பழையனு நானெனப்
பேரிடி யிழுக்கக் கூரிட முழக்கிய
கனல்போற் குரலைப் புனல்போற் கொண்டு
புன்னகை புரிந்து முன்னுற நிற்குமிவ்
இளைஞன் உளக்கோள் தெளிந்திலம் கொல்லோ !

கொ-ம-2 விழுந்தது தரையில் கொழுந்தன் கேடயம்
மருண்டனன் களத்தில் உருண்டிடும் பருவுடல் !

பழை: ஈடுகொ டிந்தப் பாடுறு படைக்கு!

க-ம-1 பட்டது பகைவன் விட்டது மார்பில்!

கொங் : ஆஅ !
க-ம-2 ஐயோ கோஒஎன் செய்கம் !
அடியற்ற மரம்போற் படிமேற் சாய்ந்தனன்.
இதற்கா தனிப்போர் ! இதற்கா வளர்ந்தாய் !
எங்குலக் கொழுந்தே ! கொங்கன் ஈட்டிக்
கிரையா வதற்கா தரையிற் பிறந்தாய் ?
ஈன்றவ ளறிந்தால் வான்றரு புகழோய் !
உயிர்தரிக் குவளா ! செயிரறு பொன்னே !
உருகெழு பொன்னுடல் புரளுதே மண்ணில் !
அப்பா கொங்குவேள் ! ஒப்பிலா மணியே !
என்னெனப் பகர்வோம் மன்னவற் கந்தோ !
(மார்பில் பாய்ந்த வேலைப் பிடித்துக்கொண்டு)

கொங் : ஒட்டலன் கொன்று விட்டனன் ஆஅ !
பழையன் ! பழையன் !

பழை : பழையன்இங் கில்லை.
கொங்குவேள் நீயொரு கொங்கர் பெரும்படைத்
தலைவ னென மலைநிகர் மாபெரு
வீரனைக் கொன்றவ் வீரன் தலையை
உன்னர சனுக்கு மன்னிய கையுறை
யாகவே கொண்டு போகத் துணிந்தனை.
எனநீ கண்ட கனவுகை கூடிலை.
எண்ணிய எண்ணம் மண்ணுறச் செய்தது.
சிறுவநீ முன்பின் அறியா ஒருவன்
கையினுற் பாவம் ! மெய்பிறி தானய்.
நாய்க்கும் நரிக்கும் வாய்க்குண வாக
ஆனதுன் உடம்பு. தேனலர் வாகை
சூடிநீ செல்லக் கூடிமுன் நின்றுன்
பெற்றரும் சுற்றமும் மற்றுமுன் ஊரரும்
கண்டு மகிழ்வது விண்டுநாய் நரிகள்
உண்டு மகிழக் கொண்டனை முடிவு.

கொங் : வீரனே இந்தப் பாரில்நீ எனக்கு
முன்பின் அறிமுகம் இலாதவன் என்பது
சற்றுமே ஐயமில் முற்றிலும் உண்மை.

எனினும் நீயெனை உனதுவல் லமையால்
வென்ற தாகவோ கொன்ற தாகவோ
திரிதர வேவீண் பெருமைகொள் ளாதே,
உன்போற் பந்து வீரர்கள் என்பால்
எதிர்த்துப் பொருதிருந் தாலும் முதைத்தினைத்
தாள்போல் எளிதில் வாள்போழ்ந் தவர்கள்
என்போற் கிடக்க உன்போன் றேநான்
மன்றல் கமழத் தென்றலிற் பொலிந்து
செயிரற நிற்கும் உயர்மரம் போல
நின்றுகொண் டிருப்பேன் வென்றி வீரனா.
ஆனால் என்றனக் கேனிந் நிலையெனில்,
உன்னையான் கண்டதும் என்னையு மறியா
துன்பால் எனக்கோர் அன்புறு கவர்ச்சியுண்
டானதஃ தென்னுளந் தானெகி ழச்செய்
திட்டதைப் பாடு பட்டுமென் னாலதை
மாற்ற முடிய வில்லையென் ஆற்றலை
யெல்லா மடக்கி விட்டது வல்லே
அறியெனக் கதுபோர் வெறியுரு வண்ணம்
செய்து விட்டது செய்தவந் நிலையில் !
சினவெறி கொடுநீ இனவெறி யூட்டுமப்
‘ பழையன் ’ என்ற விழைதகு பெயரைச்
சொன்ன தாலே அன்னதோர் இன்சொல்
என்செவி புகுந்ததும் என்செய, எஞ்சிய
என்னாற் றலையும் கொன்னே போக்கி
விட்டதச் சிறப்பிற் பட்டஅப் பெயரே
என்னை மயக்கி உன்னையிவ் வெற்றி
கொண்டிடச் செய்தது, கண்டஅச் சொல்லென்
உணர்ச்சியைப் போக்க உணர்ச்சியற் றென்கை
விட்டது நழுவத் தொட்டகே டயத்தை.
வெறுங்கை யோடு பிறங்கிட நின்ற
என்றனைக் குத்திக் கொன்றனை. இதுவா
தீரமிக் குடையவோர் வீரனுக் கழகு !
இன்னுங் கேட்டிநீ பன்னிய அச்சொல்
என்முன் நிற்பது தொன்முது பெரும்புகழ்ப்

பழையனே யென்று விழைதரச் செய்தது.
பழையன் அல்லைநீ. பழையனு இருந்தால்
பொருக்கென எனைக்கொன் றிருக்கவே மாட்டாய்.
துன்னரும் பழையன் என்னருந் தந்தை
ஆவார். அவரென் சாவினை யறியின்
பழிவாங் காதுனை ஒழியார் வெஞ்சினம்
என்பதில் ஐயம் என்பதே இல்லை.
யாரையான் காணவிப் போரினை முன்னிட்
டுற்றனே ஈங்கு மற்றஅவ் எந்தை
பழையன் கட்டாயம் ஒழிதர நீபழி
வாங்கியே தீருவார் ஈங்கதி லையமில்.

பழை: இல்லைநீ கூறுவ துண்மை யில்லை.
மாண்புயர் பழையனுக் காண்பிள்ளை யொன்றும்
பிறக்கவே இல்லை. மறக்குண மிக்க
அவன்பழி வாங்குவான் என்பது, கவணெறி
கையிலான் கற்படும் என்றுரை பொய்யினும்
விதப்புறக் கூறும் புதுப்பொயி தன்றோ!

கொங்: பொய்யிலை ஐய! மெய்யே பழையனுக்
காண்பிள்ளை யொன்று மாண்புறப் பிறந்த
துண்மையப் பிள்ளையுன் கண்முமுனே உள்ள
நானே யாவன். ஆனால் எந்தை
எங்குளா ராயினும் இங்கியான் இறந்த
செய்தியன் னார்செவி எய்திடு மானால்
உனைப்பழி வாங்குவ துறுதி எனக்கொளாய்.
ஆயினும் அன்பு மேயவென் தந்தையைக்
காட்டினும் பெற்று வேட்டெனை வளர்த்த
மென்பால் புடைசூழ் தென்பாலி நகர்வாழ்
தாய்கா மஞ்சரி வாய்கா வாநிலை
தன்னை நினைந்தே இன்னலுற் றினைந்து
மிகவருந் துகிறேன். அகமகிழ் வுறவினி
எனையவள் காணல் நனிமிக வரிதே.
மறந்தரு போரில்யான் இறந்தது கேட்டால்
ஆற்றாத் துயரால் போற்றா தின்னுயிர்
ஆரா வன்பால் வேரறு கொடிபோல்

துறந்திடு வாள்கொல் மறந்தறி யாதவள்
என்பதற் காகவே துன்புறு கின்றனன்.
என்னுயிர்க் காயான் இன்னலுற் றில்லேன்
அன்னையின் துயர்க்கே அலமரு கின்றேன்.

பழை: தென்பாலி யாநீ! அன்பால் உனையீன்
றவள்கா மஞ்சரி யாவமர் பெருநோய்
தினக்கவல் தோட்பழை யனுக்காண் குழந்தை
இலையுனைப் போன்றோர் தலைமகன் பிறந்திருந்
தாலவன் பெருமிதத் தாலுயர்ந் திருப்பான்.
நீயவன் மகனெனல் வாயல ஆண்மக
னேவிலை பழையனுக் கேவொரு குழந்தை
பிறந்த துண்மையே பிறந்தது பெண்ணே.
மறந்திகழ் செல்வ அறைந்தது பொய்யே.

கொங்: விரைவினில் என்னுயிர் பிரிவுறும், இதுவரை
யாதொரு பொய்யும் ஓதிய தில்லை.
இறக்கப் போகிறேன் இறக்குமிந் நிலையில்
என்றுமே பொய்சொலா திருந்தும் பொன்றிடும்
இந்நிலை தனிலேன் புன்னெறி படும்பொய்
பேசுதல் வேண்டும்? பேசிடில் அதனால்
வாழவா போகிறேன் ஏழையேன்! இதோஇக்
குளிசத்தைப் பாரும்! வளிசெத்த ஆற்றல்வாய்
எந்தையி னுடையது; தந்தையென் தாய்க்குத்
தந்தனர் எனக்கவள் தந்தனள் இதனை.

(பழையன் அக் குளிசத்தைப் பார்த்து)

பழை: அப்பா மகனே! தப்பா மைந்தா!
கொங்குவேள்! என்னுயிர்க்கொங்குவேள்! இங்குபார்
நான்தான் உந்தை, வான்றோய் புகழோய்!
கொழுந்திணைக் கிள்ளிக் கழுந்தென நிற்கும்
இவன்தான் பழையன், இவன்தான் உந்தை.
நீயென் மைந்தன், சேயுனை ஈன்ற
அன்னைகா மஞ்சரி என்னுயிர்த் துணைவி.
எண்ணியே பார்க்கும் நுண்ணறி வென்பதி
லாமிஞ்சு பழையன் காமஞ் சரியின்

மகனே ! என்னுளத் தகனே ! அந்தோ !
மைந்தனைக் கொன்ற இந்தமா பாவியைக்
கண்கொடு பாரேல் புண்படுங் கண்ணே !
என்னரு மகனே முன்னமே இதனைக்
காட்டலா காதா ? கேட்டனை பன்முறை
பழையன் பழையனென் றழகிய குரலில்
ஆமெனச் சொல்லா தேமுற லானேன்.
குத்திக் கொன்றுவிட் டொத்துக் கொண்டமா
கொலைஞன் குழந்தாய் ! கொலைஞன் ஐயோ !
நான்பெற்ற மகனே ! (தரையில் விழுதல்)
‘ நான்பெற்ற மகனே ’

க-ம-1 இவனவன் மைந்தனா !
கொ.ம-1 இவனவன் தந்தையா !
க-ம-2 பழையனு இவன் ! பிழைபடக் கொண்டனம்
பிறனொரு கொங்கு மறவ னென்றே.
கொங் : எந்தையே வருந்தா தீர்கள், மைந்தனுன்
வணங்கு கின்றேன். (நகர்ந்து சென்று காலைத்
தொட்டுக் கும்பிடுதல்)
கொ.ம-2 அணங்குவாட் கையால்
உயிர்செலத் துடிக்குமிச் செயலறு நிலையினும்
உடம்பால் நகர்ந்துபோய்க் கிடந்திடுந் தந்தையைக்
கிட்டியே காலைத் தொட்டு வணங்கும்
அன்பின் பெருக்கை என்புகல் கின்றது !

பழை : ஐயோ மகனே ! எய்யாப் பாவி
மைந்தனைக் குத்தியெ றிந்தனன் மண்ணில்.
எத்தனை முறையென் கொத்தலர் மலரே !
பழையனு உன்பெயர் பழையனு என்று
வற்புறுத் திக்கேட் டனையே எற்பெயர்
காமுறு வாயா ஆமெனப் பாவி
பொருக்கெனச் சொல்லி யிருக்கக்கூ டாதா ?
மைந்தனைக் கொன்ற இந்தமா பாவி !
இனியுயிர் தரியேன் தனைநிகர் மகனே !
உனக்குமுன் ஈதோ எனைக்கொலை காரன்

ஆக்கியென் உயிரைப் போக்கிக் கொள்கிறேன்.
(உடைவாளை உருவல்)
கொ.ம-1 அடடா! பழையன் உடைவா ளுருவித்
தற்கொலை செய்துகொ ளற்குமு யல்கிறுன்.
கொ.ம-2 தடுத்தனன் மைந்தன் மதித்திடா துயிரை.
கொங்: எந்தையே வேண்டாம் மைந்தனுன் கெஞ்சிக்
கேட்டுக் கொள்கிறேன் மீட்டுயிர் பெற்று
நானெழு வேனு ஏனது செய்தால்?
மைந் தனுக் காகத் தந்தை யிறந்தால்
மைந்தனு யிர்பெற் றெழுந்தன னேனும்
தந்தைக் காக மைந்த னிறத்தல்
கடப்பா டன்ருே? படத்துணிந் தீரேல்
ஒருகொலை யதனுல் இருகொலை யாமே.
தற்கொலை யென்பது முறப்படு செயலோ?
யாக்கை நிலையாப் போக்கினை யுணர்ந்த
தாங்களே இப்படி ஈங்கென் யாக்கை
இழப்புக் காக விழிப்புனல் சோர
மகளிர் போலத் தகவல கூறி
அழுதல் தகுமோ தொழுதக எந்தாய்!
அழிந்துளம் புலம்பிக் கழிந்ததற் கிரங்குதல்
களத்திடைப் புகுந்தே அளித்தொகை போல
ஆயிர மாயிர மாயொரு நொடியில்
அரிக ளுடம்பை நரிநா யுண்டு
கொழுக்க அளிக்கும் விழுக்கொடை வீரனுக்
கழகிய தாமோ அழிவது தவிர்க.
ஏழையர் போலழல் கோழையின் பாலதே.
மைந்தனி றந்தத றிந்தென தன்னை
ஆற்ருெணுத் துயர மாற்றில ளாகி
இன்னுயிர் தாங்காத் தன்னுயிர் நீப்பள்.
தாங்களு மிறப்பின் ஆங்கவள் தன்னைத்
தேற்றுவர் யாவர்? போற்றுயிர்க் கணவன்
மாய்ந்திடில் மனைவியும் மாய்ந்திடல் இயல்பே.
தன்னருங் கணவன் இன்னுயிர் நீப்ப
மாதுயர் தாங்க மாட்டா ளாகிக்

காதற் கயிற்றின் கட்டறுக் ககிலாள்
மாண்டனள் பூதப் பாண்டியன் தேவி
எனுந்தலை யன்பு தனையறிந் திலிரோ ?
ஆங்ஙன மாயின் ஈங்குநீர் துணிதல்
ஒருகொலை மூன்றாப் பெருகிடு மன்றோ ?
தற்கொலைக் கெந்தாய் முற்பட வேண்டாம்.
மைந்தனென் றென்னை யறிந்தபின் தாங்கள்
வேண்டுமென் றேயென்னை மாண்டிடச் செய்திலீர்.
நிகழ்ந்தது தற்செய லாகவிந் நிகழ்ச்சி.
முன்பே தாங்கள் என்பெயர் பழையன்
என்றிருந் தால்நான் பொன்றியி ரேனே.
பழை: பொல்லாப் பாவி சொல்லா திருந்து
மைந்தனே யுன்னையி றந்திடச் செய்தேன்.
கொங் : இல்லை நான்தான் வல்லிதின் மாய்ந்தனன்.
முன்னரே குளிசந் தன்னையுங் கட்டுக்
காட்டி யிருந்தால் மாட்டீர் கொல்ல.
பழை: கொல்வனா பெற்ற செல்வனே உன்னை.
கொங்: என்னருந் தந்தையே ! துன்னருங் களத்தில்
முதல்முதல் தங்களை எதிரினிற் கண்டது
முதலே ஓர்ஈர்ப் பாற்ற லதனால்
எந்தையே தாங்களென் தந்தை யாக
இருக்கலா மென்றே கருக்கொள நினைத்தேன்.
உள்ளத்தை விட்டது விள்ளவே இல்லை.
என்பால் தாங்களும் அன்பு காட்டினீர்.
தங்களைப் பற்றித் தங்கள் மைந்தனான்
கேட்டிருந் தளவு வாட்டொழி லாற்றலைக்
கண்டு களித்திலேன் கண்டு கண்ணாரக்
களிக்கவே தனிப்போர் புரிய உளத்திடைக்
கொண்டனன் அங்ஙனே கண்டு களித்தேன்.
இதுவே என்னரும் பெரும்பே றதுவே.
பெருமைசே ரெந்தைநா மிருவரும் ஒருவரை
ஒருவரின் னாரெனத் தெரிதரா நிலையே
ஏதுவாம் இப்படி யாதலுக் கையமில்.
ஆகையால் தற்செய லாகவிங் ஙன நிகழ்

இயற்கை நிகழ்ச்சி செயற்படு முறையை
ஊழென மொழிவர் உயர்மொழிப் புலவர்.
வாழு முறையின் வகையறி யெந்தாய்!
எந்தையைக் காணயான் முந்துற முயன்றேன்
மைந்தனைக் காண்டிட எந்தையே சிறிதும்
முயன்றிலீர் அங்ஙன மியன்றதா லுளத்துப்
போதவந் நினைவே ஏதுவில் லாத
நிலையினி லிருந்தீர் இலையெனை மகனென
அறிந்திருந் தாலெனக் கிறந்திடு மிந்நிலை
ஏற்பட் டிருக்குமா! பாற்பட்ட என்னைக்
கன்றினைப் பாய்ந்து கொன்றிடுந் தாய்போல்
கொன்றிருப் பீரா குன்றுறழ் தோளோய்!
பழை: ஐயோ குழந்தாய்! உய்யே னுன்னை
அறிந்திருந் தாற்கொல் வேனு இறந்திட!
கொங்: எந்தையே தாங்களென் தந்தையென் றெந்தாய்
சொன்னதி லிருந்து முன்னுறத் தங்களைக்
கண்ணுற எண்ணிய எண்ணமுற் றுற்றது.
மற்றதும் எதிரெதிர் உற்றபோர்க் களத்தில்
வீரத் தந்தையா நேருறக் கண்டு
களிக்கப் பெற்றேன் களிக்குமிவ் வுலக
வாழ்வினி லெனக்கினித் தாழ்வுறு குறையென்?
ஒருநாள் வாழ்வுக் கிருநில மீமிசைத்
தோன்றிய ஆம்பியும் ஈயலும் தோன்றிய
பயன்பா டான வியன்சே ருலகைக்
கண்டது முவகை கொண்டுதாம் போந்தது
முடிந்ததா லமைதியா மடிந்திடு மதுபோல்
என்பிறப் பின்பயன் இன்புறப் பெற்றனன்
இனுமீங் கிருத்த லினையேன் விரும்புகேன்?
துறையார் பழன நறையூர் நாட்டுத்
தலைவன் தனைநேர் மலிபுகழ்ப் பழையன்
மைந்தன் கொங்குவேள் என்பதை இந்த
உலக மறிந்து கொண்டதவ் வுலகம்
இனியெனை அங்ஙனம் கனிதர அழைக்கும்.

ஒருநொடி முன்நாம் இருவரும் பகைவர்
எந்தையே இப்போ தந்தையும் மைந்தனும்.
இத்தகு மாற்ற முடையதே ஒத்துயிர்
மேவிய வாழ்வும் சாவும். ஆய்வுறின்
நெருநலீங் குள்ள ஒருவன் இன்றிலை
எனுமோர் பெருமை தனையுடைத் துலகம்
என்பதை யறியா தவரா! மன்பதை
முற்படு நீர்ப்படு புற்புதம் அனையதே.
ஆதலால் எந்தாய் மாதுயர் விடுத்தே
இறக்குமுன் என்னைச் சிறக்கவே மடிமேல்
வைத்தே அன்பொடு முத்தமிழ் வாயால்
தெளிவுற என்செவி குளிரஎன் மகனே
கொங்குவேள் என்றழை யுங்களின் புறவே.

பழை: என்னரு மகனே கன்னலின் மொழியாய்!
குத்தியே கொன்ற அத்தகு கையால்
எடுத்து மடிமேற் கிடத்திடும் பாவியைத்
தந்தையென் றழையேல் மைந்தனே கொங்குவேள்!
ஐயோ மகனே உய்யவோ கொடியேன்!
அப்பா மகனே! ஒப்பறு செல்வா!
அன்னையேன் பெண்ணெனக் கூறினாள் உன்னை?

கொங்: என்னைப் பிரிய மனமிலா அன்னை
செப்பினாள் அப்படி ஒப்பறு தாயன்
பாலவள் பிழையை வாலறி வுடையீர்
பொறுத்தருள் செய்குவிர்.

பழை: பொறுத்தலென் கடனே.
ஈன்றதா யன்புக் கான்றதோர் சான்றவள்.

கண்: அதோபார் பழையன் குதிரையின் நிலையை
அருகினிற் சென்றே இருகணீர் மல்க
மைந்தனைப் பார்த்து நொந்தழு தேங்கும்
தலைவனைப் போன்றுக வலையினில் மூழ்கித்
துன்பமே வடிவா அன்புடன் பார்த்து
நிற்பதைப் பாரும் கற்படு சிலைபோல்.

பழை: என்னுயிர்ப் பாடலம் ஏன்வருந் துகிறாய்!
என்னயாம் செய்குவம் இனிமேல் வருந்துவ

தாற்பய னென்ன காற்பட வந்த
மைந்தனை யிழந்துவ ருந்துகி ரேம்நாம்.
கவிழ்ந்தபால் கலயம் புகுந்திடு மோதான்.
உதிர்ந்தகாய் கொம்பில் எதிர்ந்துபோய் ஒட்டுமோ ?
கனிந்தா உதிர்ந்தது ? கனியா முன்னர்
வம்பிலே பறித்தேன் வெம்பியே வாட.
தீக்குண முடையனைப் போர்க்கள முருமல்
தடுத்தனை யிருந்தால் கெடுத்திருக் கேனே
ஐயோ படுகொலை செய்யவேன் விட்டனை !

க-ம: அங்குபார் அப்பரி கொங்குவேள் கையை
நக்கியே அவன்பால் மிக்குள அன்பைக்
காட்டிக் கொள்ளுதல் காணுய் !
ஊட்டுமன் புருவம்
ஐயறி வுடையதா பொய்யுரை உண்மையில்
ஆறறி வினிலும் மீறறி வுடையதே.

கொங்: எந்தையின் அறிவுள செந்தமிழ்ப் பரியே !
வருந்தவேண் டாமினி வருந்துவ தாற்பயன்
உண்டோ உடைந்தகல் ஒன்றுவ துண்டோ ?
உன்றனைப் பற்றி என்ருய் எனக்குச்
சொல்லி யிருக்கிருள் நல்லறி வுடையாய் !
பல்லாண் டுகளா வல்லோ ஞன
எந்தையோ டிருந்துநீ வந்திருக் கின்றனை,
அறிவுடைப் பாடலம் ! நறையூ ரதனில்
இருந்து வருகிருய் இருந்திலன் யானே.
அடுத்தெனைக் காட்டிலும் கொடுத்துவைத் தவன் நீ.
எந்தையைப் போல உன்னையும் அந்தோ !
இன்றுதான் கண்டேன் பொன்றுறு நிலையில்.
அன்பொத்த பாடலம் துன்பத்தை விடுக.
எந்தையின் துணைவநம் சொந்த ஊரைநான்
பார்த்ததே இல்லை.

பழை: பார்த்திடச் செய்கிறேன்.
அருங்குணக் குன்றே ! ஒருங்குணர் வில்லேன்
கொங்குவேள் எனும்பெயர்க் குறிப்பினைக் கூட
இங்கியான் எண்ணிப் பார்த்தேன் இல்லை.
கங்கன் எதற்காக் கொங்குவேள் எனப்பெயர்

வைத்துக் கொள்கிருன் என்பதை ஒத்துப்
பார்த்தே னில்லை ஓர்த்தறி வில்லேன்.
சற்றதை எண்ணி உற்றுப்பார்த் திருந்தால்
இங்ஙனம் ஏற்பட் டிராதென் தங்கமே !
வழிவரு மதலாய் ! பழிவரு பாவியான்
இத்தனை காலமாக் கொத்தலர் தேனின்
மடுத்தசொற் கேட்கக் கொடுத்துவைக் காத
பாவியா னேனே ஆவென் கண்ணே !
பழகுதம் மக்கள் மழலையைக் கேளார்
குழலும் யாழும் இனிதென மொழிப.
உளமதைக் கொள்ளை கொளவெழு மழலையை
விடவா இன்பம் படுமவை ! குழந்தாய்
இருக்கநீ நான்செத் திருக்க வேண்டும்.
கொங்: வருந்தலிர் எந்தாய் இருந்துநன் ருக
வாழ்குவீர் இன்பத் தாழ்குவீர் மேலும்
களம்பல கண்டே உளங்களி கூர்வீர்
கொற்றவை மகிழப் பற்றலர்த் தெறுத்து
வெற்றி வீரரா விளங்குவி ருலகில்,
தந்தையின் புகழே மைந்தனின் புகழாம்.
உலக முதன்மொழி உயர்தனிச் செம்மொழி
அலகில் கலைமொழி ஆகுநந் தாய்மொழி
தன்னே ரிலாத தமிழ்மொழி யதனை
முன்னேர் போல முறையுடன் போற்றி
வாழ்வாங் கினிது வாழ்குவி ரெந்தாய் !
என்னுயிர் போமுன் இன்னெரு வேண்டுகோள்.
கங்கருக் கெதிராத் தங்கள்பே ராற்றலைக்
காட்டுதல் தவிர்க நாட்டினை நோக்கிப்
போகட்டும் அமைதியாய் ஏகட்டும் போர்ப்பகை.
இனுஞ்சில நொடியில் இறக்கப் போகிறேன்
இனுமொரு வேண்டுகோள் யாதெனில் எந்தாய் !
என்னுடல் தன்னை அன்னவர் தம்பால்
ஒப்படைக் காதீர் அப்பா வோவிது
தங்கள் உடைமை நங்கள் நறையூர்க்
கெடுத்துமே சென்று கடுத்தலர் கமழும்
பாங்குறும் அரண்மனைப் பூங்கா வதனிற்

புதைத்து விடுங்கள். புதைத்த அவ் விடத்தில்
தகைதங்கு பழையன் மகன்கொங்கு வேளெனப்
பொறித்தொரு நடுகல் சிறப்பொடு நடுங்கள்.
இன்னு மொன்றென் அன்னையை அன்புடன்
அழைந்துவந் திங்கு பிழைத்ததை மறந்து
கலப்புற வுள்ளம் மலைப்பற முன்போல்
அமிழ்துறழ் கிளவி கமழ்துறழ் தமிழின்
சொல்லும் பொருளும் போல, மல்லலந்
தொடைத்தோள் அத்தியும் மடக்கொடி ஆதி
மந்தியு மென்ன முந்துறத் துன்னி
இன்புற்று வாழ்வீர் அன்புற் றினிதே.
இவையே எனது நவையறு வேண்டுகோள்.
பழை, செருப்புகல் செல்வஉன் விருப்பப் படியே
சமைதரச் செய்குவேன் அமைதி யுறுக.
கங்கர் படையினித் தங்கள்நா டேகுக.
பிறையார் நுதலி நறையூர்த் தலைவி
ஆகுக தனித்துயர் ஏகுக. கொடியேன்
மைந்தனே உன்னை அந்தோ கொன்றனன்
அறியாது செய்பிழை யதனைக்
குறியாது பொறுத்தருள்.
கொங்: குழந்தையின் கடனே. 10

## காமஞ்சரி குதிரையில் வருதல்

கண்-1. பாரதோர் பெண்மணி காரினுங் கடுகப்
பரியினி லேயதி விரைவினில் வருவதை !
களத்தினை நோக்கியே வளித்தென வருகிருள்.
கண்-2. நீட்டெரி பட்டதன் வீட்டினை நோக்கி
விரைகுநன் போல விரைகுநள் ஆஆ !
கண்-1. குதிரையி னின்று குதித்ததோ கொங்குவேள்
குத்துண்டு கிடக்கு மிடத்தினை நோக்கி
ஓடுகி ருள்இவள் பாடுறு கொங்குவேள்
தாயா யிருக்கலாம்,
கண்-2. தாயே தாய்தான் !

கண்-1 ஓடுதல் பார்பார் பாடுகாண் புள்ளெனப்
பறந்துதன் மைந்தன் இறந்து கிடக்கும்
இடத்தினை நோக்கி.

கண்-2 துடித்தழு தோடி
வருவது கண்டு பரிவுட னப்பரி
மைந்தன் இறந்தனன் வந்துபார் என்றழு
தழைத்திடல் போற்றழு தழுத்த குரலிற்
கணைக்கிற தடடா! தனிப் பிறப் பிப்பரி!

காம: கொங்குவேள்! அடாஅ கொங்குவேள்! அப்பா
பறந்தெனை அந்தோ இறந்தையா மகனே!

கண்-1 மகனே கொங்குவேள் மகனே மகனே
என்றழு தோடிச் சென்றவன் மேல்விழுந்
தழுகிருள் பாவம்! எழுகவா போகிருன்!

காம: கொங்குவேள்! கொங்குவேள்!
ஐயோ மகனே!

கொங்: அம்மா! வந்தையா அம்மா!

காம: வந்தே னடாஎன் மைந்தா உன்னை
இந்த நிலையினில் அந்தோ கண்டிட
நான்பெற்ற மகனே! வான்பெற்ற செல்வா
அப்பா மகனே! ஒப்பா ரில்லாக்
கொங்குவேள்! கண்ணே! இங்குபார் என்னைப்
பாரடா என்னை! யாரடா இனியெனை
அம்மா என்பார் இம்மா நிலத்தில்!
மகனே! பெற்ற மகனையே கொன்ற
பாவிநான் தானடா ஆவிபோ கின்றிலேன்
ஐயோ! அப்பா!

பழை: இலையிலை நான்தான் கொலைபுரி பாவி!
நான்பெற்ற மகனை நான்தான் கொன்றேன்.
வான்பெற்ற செல்வனை மாய்த்தவன் நான்தான்
முதல்முதல் அம்மா! புதுமதி போலக்
கண்டதும் இவனைக் கொண்டதென் உள்ளம்
மைந்தனைக் கன்டன அந்தவோ ருணர்ச்சி.
அதையும் எண்ணிலேன் மதியிலாப் பாவி!
ஓரிரு முறையா ஒருநூறு தடவை
ஆரமிழ் தனைய அழகிய குரலில்

பழைய ஞநீர் ! பழையன் அல்லவா ?
எந்தை பழையன் அல்லா திருந்தால்
உன்பால் என்மனம் அன்பால் பட்டதேன் ?
என்றின்ன வாறு கன்றிய அன்பால்
பழையன் பழையன் பழையன் பழையனென்
றடிக்கடி அடிக்கடி துடிக்குறப் பறவாப்
பறந்தான் அதனை அறிந்தே ஆமெனச்
சொன்னே னில்லை கொன்னே கொன்றேன்.

காம: அலையிலை தாங்கள் கொலவிலை நான்தான்
கொன்றேன். கண்ணே! அன்றுனைப் பெற்றதும்
உந்தையின் சொல்லை அந்தோ தட்டிப்
பிறந்தது பெண்ணென அறைந்தனன் படுபொய்.
பொய்யின் விளைவோ ஐயோ உன்றன்
கொலையில் முடிந்ததே! மலைபோல் மகனே !
மண்ணிடை யுருண்டு புண்ணு உடம்பு
நொந்தனை யோடா அந்தோ மைந்தா!
ஐயிரு திங்கள் மெய்யுறச் சுமந்து
பெற்ற வயிறு பற்றி யெரியுதே !
இருபெரு நாட்டுக் கொருபெறு மகனுப்
பிறந்தனை யழவிட் டிறந்தனை யோடா!
தந்தையோ மைந்தனை அந்தோ கொன்றிடத்
தாயே செய்தனன் மேயதோ மகனே!
ஆஎன் தலைவா! ஓவாப் பாவி
தங்கள் சொற்படி தங்கள்பால் அனுப்பி
இருந்தால் எதற்கு வருந்தக் கொல்கிறீர்?
மகனை ஐயோ மகளென்று கூறிப்
பேதையா னன்ரே ஆதகா செய்தனன்.
குலைதர மகனைக் கொன்ற வேலினுல்
கொலைகா ரியையும் கொன்று விடுங்கள்.

கோங்: அம்மா! அப்பாவைச் சும்மா பெருந்துயர்க்
கடலிலாழ்த் தாதே.

காம: உடையஎன் ஐயா!
தங்கள் தவறன்று மங்கையான் பேசிய
பொய்யே இன்று மெய்யே போல

என்மகன் பிரிவிற் கேதுவா யிற்றே.
பொய்யையே மேலும் மெய்யதாக் கொண்டிருந்
தேனெனில் ஈங்கு தானுறான் ஆங்கு
நான்கண் டிருப்பனே.

பழை (மெல்லிய குரலில்) நான்கண் டிருப்பனா ?

காம: காணா விடினும் வீணாக் குத்திக்
கொன்றிருக் கீரே குன்றுபோல் ஐயோ!
என்மக னேயினி என்னடா செய்வேன்!
பொய்மையின் விளைவைக் கைம்மேற் பெற்றனே.
'காரிகை! கொங்கு வீரனோ டுன்மகன்
தனிப்போர் புரியப் போகிறான்' எனக்கேட்
டதுமே யானும் விதிர்விதிர்ப் பெய்தி
என்மக னோடு முன்வந்து பொருதத்
தக்கவர் கொங்கரில் மிக்கவர் தாங்களே
ஆதலால் இருவரும் மோதுற வேநேர்ந்
திருந்தாலும் இருக்கலாம் என்றெணி யுள்ளம்
வருந்தியே ஓடி வந்தேன் ஐயோ!
எண்ணிய படியே ஆனதே அண்ணால்!
ஐயோ அன்று தையால்! ஈங்கவன்
இருந்தால் ஒருகால் எதிர்ந்தே இருவரும்
ஒருகள மதனிற் பொரநேர்ந் தாலும்
நேரலா மென்ற சீரிய தங்கள்வாய்ப்
பட்டசொல் உண்மையாப் பட்டதே இன்று
செய்குவ தறியேன் உய்கவோ ஐயா!

பழை: ஆஎன் உயிரே! காவியங் கண்ணே!
இணைதரு வாழ்க்கைத் துணையெனக் கொண்ட
கைப்படு முன்னை ஒப்பிலாப் பாவியான்
தனியே விட்டுத் தனியே வந்து
வருந்தமிழ்க் கொருபெரு விருந்தா னவளே!
இறந்தபல் லாண்டா மறந்திருந் திட்ட
பாவியை ஓவியப் பாவையே தேவி!
மன்னித்து விடுவாய் தன்னொத்த மாபெரும்
வீரனா கியபழி காரனுன் பொருட்டுக்

கோழையா னேனே: வாழப் பிறந்த
உன்னையான் பகைப்புல மன்னவன் மகளென
அஞ்சிநந் நகர்க்கு வஞ்சியே யுன்னை
இட்டுவ ராதங்கு விட்டுமே வந்தேன்.
ஈங்கதன் பயனைப் பூங்கொடி எய்தினேன்.

காம: என்னுயிர்க் குயிராய் என்னருங் கணவன்
தன்னுயிர்க் குயிராய் மன்னிய பாடலம்!
காட்டினிற் களவாற் கூட்டினை எங்களைக்
கூட்டிய நாங்கள் ஈட்டிய பொருளைக்
கொட்டியே மணலிடைப் பட்ட மரம்போல்
இட்டடி பெயரா திட்டிடைப் பட்டு
மணலிடைக் கொட்டிய இணிதரு பொருளை
அரிபரித் தெடுக்க தெரிப்படா தந்தோ!
வருந்துகின் றனரரு கிருந்துநம் தலைவர்
என்செய்கோம் என்னரும் பொன்செய் பாடலம்!
அவரொடு நாமும் உவரிடைக் கவிழ்ந்த
கலங்கெழு மாக்கள்போற் கலங்கிநிற் கின்றோம்.
மார்பினில் தைத்தவேல் கூர்புணல் வருந்தி
அவனழ மூவரும் அவனொடு சேர்ந்தழ
நால்வர்கண் ணீரும் கால்வரு காவிரி
மடையெனத் தேங்கப் புடையம ரிருபடை
வீரர்கண் ணீரும் சேரவே அம்மடை
உடைபடுங் கொல்லோ! உடைபட உள்ளம்
அழுவதால் நம்மகன் எழுவனோ ஐயோ!
உழாஅப் புலம்போல் அழாஅ திருக்கக்
கூடுறுங் கொல்லோ பாடுறு பாடலம்!

கொங்: என்னரு மைப்பெற் றோர்களே! இன்னுத்
துயரிடைப் பட்டுச் செயலரு தீர்கள்.
ஈண்டென் பிரிவுபல் லாண்டுக ளாகப்
பிரிந்து தனித்து வருந்திய உங்களைப்
பண்டுபோ லொன்றுகூட் டியது கண்டு
மிகமகிழ் கின்றேன். அகமதில் அதனை
எண்ணியின் புறுகிறேன். மண்ணிடைப் பிறந்து
தந்தைதா யோடு மைந்தனு ஞென்று
பட்டுவா ழாது கெட்டிருந் ததுபோய்த்

தோன்றவோ ரிடத்திரு சுடர்காண் பதுபோல்
ஈன்றவர் தமையொன் றாக்கண் டின்புற
ஏதுவா கியஇக் கோதறு சாவினை
நான்மன மாரத் தான்வர வேற்கிறேன்.
யாக்கை நிலையாப் போக்கறி கிற்பீர் !
பிறந்தவ ரிறப்பது கறந்தபா லனைத்தே,
வாள்போழ்ந் தடக்கும் நாள்வீழ்ந் தன்றி
ஒப்புயர் வற்ற இப்பெரு வீரனோ
டெதிர் நின்று பொருது பதர்கொன்று நிகழ்தரு
மறப்புகழ் எய்திச் சிறப்புறு மைந்தனைப்
பெற்றனிர் பெறும்பேறு மற்றினி என்கொல் !
கணவனும் மனைவியும் இணைபிரி யாமல்
அன்புற் றினிதீங் கின்புற்று வாழ்வீர்.
தாய்வயிற் கங்கமே ! ஆய்தமிழ்க் கொங்கமே !
என்னுயி ரனைய என்னரும் பாடலம் !
அன்பொடு பெற்றே இன்பொடு வளர்த்த
அருமைப்பெற் றோர்களே ! வருகிறேன் வணக்கம்.
(மார்பில் தைத்திருந்த வேலைப் பிடுங்கினான். உயிர் பிரிந்தது)

காம: ஐயோ மகனே !
பழை: பொய்யாய்ப் போனையோ !
(இருவரும் மகன்மேல் விழுந்தழுதல்)

கண், மகனென அறியா முன்னே பகையெனத்
தந்தையே கொன்றான் மைந்தனைப் பாவம் !
மார்பினி லிருந்த கூர்வேல் வாங்கிப்
பொன்னுடல் நின்றே இன்னுயிர் பிரியப்
பொன்றாப் புகழினை நன்றிவண் நிறுத்து
நந்தா விளக்கின விந்தான் கொங்குவேள்.
தந்தையும் தாயும் மைந்தன்மேல் வீழ்ந்து
மலைமிசை யிருந்து நிலமிசை யுருட்டி
விட்டவோர் துறுகல் மீது
வெட்டிவீழ் மரம்போல் விளங்குநர் மன்னே !

—: O :—

# குறிப்புரை

பாயிரம்:

தரவு-1. பிற உலகமொழிகள் போல உரப்பியும் கனைத்தும், மூச்சுத் திணறியும், எளிதில் உச்சரிக்க முடியாதும், இடர்ப்பட லின்றி, எல்லா எழுத்துக்களும் எளிதில் உச்சரிக்கும் தன்மை வாய்ந்த எளிமையும் இயல்பும் உடைய மொழி தமிழ் மொழி என்பது.

தரவு-2. பின் எழுந்தமொழி-தமிழுக்குப் பின் தோன்றிய உலகமொழிகள். மின்எழுந்த சுடர்-ஒளி பொருந்திய ஞாயிறு பொறியின் மிடைந்து எழுந்த-ஞாயிற்றினின்று சிதறிய பொறியானது குளிர்ந்து இறுகி உண்டான. நின் எழுந்த மொழி-தமிழ் மொழி திரிந்துண்டான கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலிய மொழிகள்.

தாழிசை 1-3. முச்சங்கமும் முறையே நிகழ்ந்த இடங்கள்.

முதற் காட்சி : அடி 8. கலைமதி - நிறைமதி - வெண் கொற்றக் குடையின் உருவகம், 7. வடகொங்குடையோர், 8. விற்றிருந்து. 30. ஓம்பும் என முடிக்க. 121. குறள்-1032. 122-5. உலகம் ஒருவயல். அவ்வயலில் உள்ள பாத்திகள் போன்றன உலக நாடுகள். ஒரு பாத்தி போன்றது ஒரு நாடு. அப்பாத்தியிற் பூத்துள்ள மலர்கள் போன்றவர் அந் நாட்டில் வாழ் மக்கள். அம் மலரின் மணம் போன்றது அம் மக்கள் பேசும் மொழி என்பது. 136. தெற்கு, கடலானதால் கேட்டிலது, 152. புறம்-289, குறள்-231. 215. நகராகிய, 221. சத்திய மங்கலம் எனக் கொள்க.

காட்சி 2: அடி 3. குறள்-63. 12. புறம்-312. 16. குறள்-67. 21. குறள்-70. 43-4. குறள்-814. 45. இது முதற் சிலேடை: அரி-அரிவாள், குதிரை. அறுத்தல்-அரிதல், கொல்லுதல். பரி-செலவு, குதிரை. குழி பறிக்கும் பரி-சுவடு உண்டாகும் படிசெல்லுதல்,செலவு-செல்லுதல்.குழிபறித்தல்-கொல்லுதல். 46. கிள்ளை-கிளி, குதிரை. இதழ்ப்பால் கொள் கிள்ளை-மகளிர் இதழ்ப்படக் கொஞ்சும் கிளி. இதழ்ப்பால் கொள் கிள்ளை-

வாயால் கடிக்கும் குதிரை. பாடலம்-சிலம்பு, குதிரை. கால் கொள்-காலில் அணிதல், காலால் மிதித்தல். 47. வாசி-வேறு பாடு, குதிரை. உடல் உயிர் வாசி-உடலும் உயிரும் வேறுபடுதல், இறத்தல். உடலுதல்-வருத்துதல். உடல் உயிர்-உயிரை வருத்தும். தூசி-புழுதி, குதிரை. அடர்தரு-மிக்க. அடர்தரல்-அடர்த்தல்-கொல்லுதல். 48. மா-மாமரம், குதிரை. வடுகாய் தருமா-பிஞ்சுக்காய் தரும் மாமரம். வடு-பிஞ்சு. காய்தரு அடுமா. காய்தரல்-சினத்தல். அடுதல்-கொல்லுதல், சினந்து கொல்லும் குதிரை. இவுளி-மாமரம், குதிரை. மாய்தல்-மறைத்தல். மாய்தல் - மாய்த்தல் - கொல்லுதல். மாய்தரும் இவுளி-வெயிலை மறைக்கும் மாமரம், கொல்லுங் குதிரை. 49. கொக்கு-கொக்கு, குதிரை. மடை-நீர்நிலை. வாய் - இடம். மடைவாய்க் கொக்கு - நீர்நிலையில் உள்ள கொக்கு. மடை-உணவு மடை. வாய்-தீனிபோலக் கடித்துக் கொல்லும் வாயை உடைய குதிரை. குந்தம் - ஈட்டி, குதிரை. படை வாய்-போர்க்கருவியாக உள்ள ஈட்டி. படைவாய்-படையில் எதிர்ப்பட்டது போலக் கொல்லும் குதிரை. 50. கொய்யுளை-விலங்குகளின் பிடரி மயிர், குதிரை. உளை-இடம், சேறு. மெய்-உடம்பு மெய் உளை படுக்கும் கொய்யுளை - உடம்பின் கண் உள்ள பிடரிமயிர். மெய் உளைப் படுக்கும் - உடம்பைச் சேற்றிலிடும் குதிரை. கோடை - மேல் காற்று, குதிரை. வெம்பி - வெதும்பி. பிஞ்சுகள் வெம்பி வாடும்படி வீசும் மேல் காற்று. வெம்பி-சினந்து. வாட-வருந்த. வீசும் - வீசியெறியும் குதிரை. 54-5 குறள் - 26. பெய்து ஊண் - ஊண் பெய்து-உண்டு.

காட்சி-3: அடி 18-40. குதிரையை நன்கு பார்த்து விட்டு, ஒரு வாழைத் தோட்டத்திற்குச் சென்று, வாழைப்பூ, தண்டு, குருத்து, இலை, கிழங்கு முதலியவற்றைக் கொண்டு உவமையை ஒப்பிட்டறிக. ஒரு குதிரையினையே அங்கு கொண்டு செல்லின் மிகவும் நல்லது. பூநார்-பூக்கட்டவும், புகையிலைப் பிடி கட்டவும் பயன்படுவது. 41. நாலடி-220.

காட்சி-4: அடி 25. உறழ்நடை-விகற்ப நடை. மூவாறு-பதினெண்வகை விகற்ப நடை. செலவு ஐந்து-மல்லநடை,

மஞ்ஞை நடை, குரங்கு நடை, புலி நடை, காளை நடை. செலவு-நடை, கதி. 29. மடையமை ஏணி-அகழ்நீர்போல் மிதக்கும் படி பலகை பொருந்திய ஏணி. மடை-பலகை. 30. குடுமி கொள்ளல் - பகைவர் மதிலைக் கைப்பற்றி அங்கு முடி சூடிக்கொள்ளல்.31. புறத்தோன்-புறத்துழிஞையோன், மதில் முற்றினோன். 37. குறள்-517 58. குறள்-466. சுழிகள்: 107. காதுகளுக்கு நடுவில் சிறிது பின்புறமாக உள்ள இரண்டு சுழிகள் - தலைச்சுழி எனப்படும். 118. மேலுதட்டில்-புல்லு வெட்டி. 112. முன் தோள்களிரண்டன் உட்புறத்தில் - முன் பறவை-2.பின்தொடை இரண்டினுட்புறத்தில்-பின்பறவை-2. ஆக 4. 113. ஊடு-நடுவில். உந்தி-கொப்பூழ். கொப்பூழுக்கு அருகில் இருபுறமும் உள்ள இரண்டு - தொந்திச் சுழிகள். தொந்தி-வயிறு. அவற்றினிடையில் உள்ளது-உந்திச்சுழி.114 பின் கணுக்கால் இரண்டினும் பின்புறம்-கணுக்காற் சுழி-2. ஆகச் சுழி-15. 119. உள பிறவும் இவைபட அமையும்- இன்னும் பல சுழிகள் உள்ளன. அவையெல்லாம் இப் பதினைந் தனுளடங்கும், இப் பதினைந்துமே சிறப்புடையவை. 129. விரல்-விரலளவு. 12. விரல்-ஒரு தாளம், அல்லது சாண் எனப் படும். 147. இரண்டு மூக்குத்துளை-மூக்குத்துளையின் அகலம் 2 விரல். அதன் உட்பால்-மூக்குத்துளையின் உட்பகுதி. 150. மேலிதழ் மூக்கின் பாலிடை-மேலுதட்டுக்கும் மூக்குத்துளைக் கும் இடைப்பகுதி.164.தோள் முதலிடம்-தோள்தொடங்கும் இடம். இடை-தோளின் இடைப்பகுதி. 169. சுற்று நீளம்- சுற்றளவும் நீளமும் .175.முதுகுப் பின்புறம்–வால் தொடங்கு மிடத்தின் இருபுறமும். (இவ்வளவை - ஸ்ரீகுமாரனின் 'சில்பரத்தினம்' என்னும் வடமொழி நூலில் கண்டது.) 222. ஒரு பருவத்திற்கு 3 ஆண்டு, 2 மாதம், 12 நாள் ஆக, பத்துப்பருவங்கட்கும் 32 ஆண்டாதல் காண்க. 231. புகை நிறம், பொன்னிறம் எனக்கூட்டுக. 233. கத்தக்காம்பு ஈ. கத்தக்காம்பு என்னும் பொருளை வெற்றிலை யொடு இட்டு மென்றால் ஒருவகைக் கருநிறமுண்டாகும். 235. களைவுறல் விழுதல்.

காட்சி-5. அடி 28-9. குறள்-706. 51-2. குறள்-476.

காட்சி-6: அடி 73. குறள்-574. அடி 74-6. குறள்-879

காட்சி-8: அடி 137-44 படையைத் தமிழ்ப் பாவாக உருவகம். வீரரால் நடத்தப்படுவனவே தேரும் குதிரையும் யானையும். தளையால் தளைத்துச் சீர்கள் அடியாக்கப் படுகின்றன. மோனை எதுகைத் தொடைகளும் தளையப்படுவனவே. எனவே, வீரரைத் தளையாகக் கொண்டதன் சிறப்பை உணர்க. சீர், தளை, தொடை மூன்றும் அடியின்கட் பட்டனவே. 140. அணியா -அணியாக. இது செய்யுளணி. நாற்படையும் நாற்பா ஆனதால், படையே தமிழானது. எனவே, வீரர் தமிழைக் காத்தல் தற்காத்தலாகும். 143. குறள்-766. 221-2. குறள்-780. 223. குறள்-776. 230-52 இவற்றின் விளக்கத்தைப் புறநானூறு முதலிய சங்க நூல்களிற் காண்க. வள்ளைப்பாட்டு என்பது-தம் படைப் பெருமை கண்டு பகைவர் நாடழிதற் கிரங்கி, நெல் முதலியன குற்றும் மகளிர் பாடும் பாட்டாகும்.

காட்சி-10: 96-101. குறள்- 774. 108. ஆர்-வண்டிச் சக்கரத்தின் ஆரக்கால்கள். குடம்- சக்கரத்தின் நடுவிலுள்ள அவ்வாரக் கால்கள் பொருந்தியுள்ள குடம் போன்ற பாகம். இது இன்று கும்பம் என வழங்குகிறது. கும்பம் - குடம். வீரன் உடம்பு அக் குடம்போல நிலத்திற்படாமல் அவ்வுடம்பில் தைத்திருந்த வேல் அம்புகளின் மேல் நின்றது.

காட்சி-11: 47-51. குறள்-770. 62-76. கொங்கு நாடு ஒரு மண் விளக்காக உருவகஞ் செய்யப்பட்டுள்ளது.

காட்சி-12: அடி 32. குறள்-236. 51-2. குறள்-879. 68. குறள்-780. 144. பதிற்-22. தொல். புறத்-2. 158. பாலொடு நால் - பால், தயிர், மோர், வெண்ணெய்.

காட்சி-13: 19. பொருபடை - கலப்பை முதலிய உழவு கருவிகள். 20. அடுதல் - சமன் செய்தல் - பரம்படித்தல். 19-22. விற்போர்க்கும் நெற்போர்க்கும் உள்ள நயங் காண்க. 41-6. காணி - பழைய மூன்று காசு. முந்திரி - பழைய முக்காற் காசு. நாமுந்திரி - காணி. நூறு நூருயிரம் - கோடி.

சங்கம், விந்தம், குமுதம், தாமரை, குவளை, நெய்தல், வெள்ளம் என்பன தமிழ்ப் பேரெண்கள். கோடி எட்டுக் கொண் டுறழ்ந்தது, அல்லது கோடியைக் கோடியால் பெருக்கினது - சங்கம் எனப்படும். இவ்வாறே சங்கத்தைக் கோடியால் பெருக்கினது - விந்தம் எனப்படும். இவ்வாறே விந்தம் முதலிய எண்களையும் கோடியால் பெருக்கவேண்டும். அவ்வெண்ணின் மேல் எண்பெறுதல், வெள்ளத்தை வெள் ளத்தால் பெருக்கிய அவ்வளவு பொருள் பெறுதல். 'சக்கரச் செல்வம் பெறினும்' என்னும் நாலடியார் (346) பார்க்க வெம்குவளை, வெம்மை - விருப்பம். 'வெள்ளத்தின் மேலும் பல'(நீதிநெறிவி - 28). 50. குறள் - 484,490. 54 - 6. குறள்- 550, தொல். எழுத்ததிகாரம் - 393 சூத்திரம் பார்க்க.

சிந்து: வயலுக்கும் தமிழுக்கும் சிலேடை. வயல்:-ஏரினுல் புலத்து. பழந்தமிழ் வயலை உழுவோம். புலம் - விளைநிலம். விளைநிலமாகிய பழைய இனிமையான வயலை உழுவோம். தமிழ் - இனிமை. பழஞ் சேறு சிறந்து. தமிழ்:- புலம் - அறிவு ஏர் - கருவி. உழுதல்-ஆராய்தல். புலத்து ஏரால் பழந்தமிழ் உழுவோம் - அறிவாகிய கருவியால் பழந்தமிழை ஆராய் வோம். செந்தமிழ்ச் சொல்லையும், சம்பா நெல்லையும் தெள்ளு தல் - ஆராய்தல், புடைத்தல். வயல்:-நறும்தீம் தொடையா பாரும் மணி சேற்றில் - நறுமணமுள்ள ஒழுங்காகப் பரவி யுள்ள அழகிய சேற்றில்: நறும்தீம் -மிக்கமணம்- ஒருபொருட் பன்மொழி. தொடையா - தொடையாக - ஒழுங்காக. பாரு தல் - பரவுதல். மணி - அழகு. தமிழ்:- சேறு - இனிமை நறும்தீம் தொடை யாப்பு ஆரும் அணி சேற்றில் நடுவோம்- இனிமையான தொடையமைந்த அணியோடு கூடிய இனி மையான பாட்டுப் பாடுவோம். நடுதல் - பாடுதல். வயல்:- முந்துற நன்னீர் பாய்ச்சிக் காத்து வருவோம். முந்துற - முற் பட - ஏற்ற காலத்தே. தமிழ்:- முந்துற - முதன்மையாக. நல் நீர் பாய்ச்சி - நல்ல தன்மை காட்டி. நீர் -தன்மை. பாய்ச்சு தல் - காட்டுதல், செலுத்துதல். அன்பு காட்டி - அன்பாக, காத்தல் - பாதுகாத்தல், போற்றுதல். வயல்:- சொல் அயல் மொழிக் களைகளை-நெல்லம் பயிருக்குப் பக்கத்தில் உள்ள

கணுக்களையுடைய புற்களை. களைந்து எறிகுவோம் - பிடுங்கி எறிவோம். சொல் - நெல். அயல் - பக்கம். மொழி - கணு. களை - புல். தமிழ்:- அயல்மொழிச் சொல் களைகளைக் களைந்து எறிகுவோம் - தமிழுடன் கலந்துள்ள அயல் மொழிச் சொற்களாகியக் களையத் தக்கவற்றை நீக்கி விடுவோம். வயல்:- செய் உள் ஆம் நால்வகைத் தமிழ்ச் சோறு-வயலில் விளைந்த நால்வகைப்பட்ட இனிய சோறு. தமிழ் - இனிமை, நால்வகை உணவு-உண்ணல், தின்னல், நக்கல், பருகல் என்பன. தமிழ்:. தமிழ்ச்சோறு தமிழாகிய சோறு. மற்றவை வெளிப்படை- வந்த விருந்தாளிகள் - கேட்போர். 'ஏரினு நன்ருல்' என்னும் குறளை (1038) ஒப்பு நோக்குக. 65-6. குறள் - 1034. 69. குறள் - 1036. 76. புறம் - 18. 95. நெய்யணி - பிள்ளை பெற்றவள் முதல் முதல் எண்ணெய் தேய்த்துக் குளித்தல். அன்று ஊர் மகளிர் வந்து குழந்தையைக் கண்டு மகிழ்வர்.

காட்சி - 14: கலித்தாழிசை-2. கீழ்ப்பூவானி-மேற்கு மலையில் தோன்றி வந்து காவிரியோடு கலக்கும் ஓராறு. வானியாற்றுக்கு - பூவானி என்ற பெயரும் உண்டு. வானியாற்றின் கீழ்த் தோன்றுவதால் இது, கீழ்ப் பூவானி எனப்பட்டது, இன்று இது - கெப்பினி எனத் திரிந்து வழங்குகிறது. 113. குறள் - 101

காட்சி. 15: 28-36, இங்கு குளத்திலுள்ள மலர்கள் முதலியவற்றைப் பெண்ணுக உருவகித்தலை அறிக. 33. சிலை - புருவங்கள். வில் - நெற்றி. 41. குறள் - 1088. 55, குறள் - 1094. 55-7 'புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல்' (மெய் - 13) என்னும் மெய்ப்பாட்டுக் குறிப்பு. 65. கா மஞ்சரியை. சோலையில் மலர்ந்த பூங்கொத்தினை. கா - சோலை, மஞ்சரி - பூங்கொத்து.

காட்சி-16: 25-6. தொல். களவு - 20, 24. 35. 'என்னடா' என்றது - மகனை விளிக்கும் செல்லப் பெயர், 36. அன்னை- நற்ருய்.

காட்சி-17: அடி 15. ஆதிமந்தி - இரண்டாங் கரிகாலன் மகள். அத்தி - ஆட்டனத்தி, ஆதிமந்தி கணவன், இவன்

ஒரு சேர மன்னன். காவிரியில் நீராடும்போது இவன் வெள் ளத்தால் அடித்துச் செல்லப்பட்டான். அதுகண்டு ஆதிமந்தி அழுது புலம்பி அலைந்து திரிந்தாள். முடிவில் கணவனை அடையப் பெற்ருள்.

காட்சி-18; 10-1. வேலன் - வேலைக் கையிற் கொண்டு வெறியாடுவதால் பெற்ற பெயர். வேலர் - குறி சொல்லும் ஒரு குறிஞ்சிநில வகுப்பார். கட்டுவிச்சியர் - வேலர் மகளிர். வெறி-காதல் நோய். வேலன் கழற்சிக் காய்களைக் கொண் டும், கட்டுவிச்சி முறத்திலிட்ட நெல்லைக் கொண்டும் குறி சொல்வர். இதன் விளக்கம் - 'தொல்காப்பியர் காலத் தமிழர்' என்னும் எனது நூலிற் காண்க.

காட்சி-19:73. குறள் -1082. 79. 86-8. குறள் - 1100.

காட்சி-21: 12. குறள் - 319. 59. தாய் மகள் - செவிலித் தாயின் மகள்.

காட்சி-22: 32. குறள் - 773. 56-7. தொல்.புறத் -24.

காட்சி-23: 6. கண்ணீர் - கள்நீர். 10. எண்சுவை-நகை' அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன. (தொல் மெய் - 3). 19. பெயரினை நினைப் பூட்டல் - காமஞ்சரி - பூங்கொத்து. 34. அயில் - வேல்போல் மிக்க. வெயிலினை - எயிலினை. எயில் - மதில். பகலவன்- ஞாயிறு, மதில் முற்றிய புறத்தோன், ஞாயிறு முற்றிய வெயி லினை விடுத்து. மறம்கெடப் புறங்கொடுத்து ஓட-மிக வெயில் காய்வதை விட்டுநீங்கிப்போக. புறத்தோன் முற்றிய எயிலினை விடுத்து மறங் கெடப் புறங்கொடுத் தோட -மதில் முற்றுதலை விட்டு வலி கெடத் தோற்ருேட.

அகத்துறை மக்கள் - அகத்து உறைமக்கள்-கோட்டைக் குள் உள்ளவர்- அகத்துறை மக்கள் — களவொழுக்கம் ஒழுகுவோர் என நயங்காண்க. அகத்தோன்-மதிலுக்குடை யோன். ஆசிரியத் தாழிசை-1. கூராய்மதி-மிக்கமதியே. ஆ-தா-3. குயிலின் குரலே இன்பந் தருவது, அழகன்று. 77. வரிவாய்- இசைப் பாட்டினுல். வரி-இசைப் பாட்டு. 91-9

'புதுமுகம் புரிதல்' முதலிய மூன்று மெய்ப்பாட்டுக் குறிப்புக்கள் (மெய்-13). 102-2. தொல். களவு-11. 103-6. 'கூழை விரித்தல்' முதலிய நான்கு மெய்ப்பாடு (மெய்-14). 116. தொல். களவு-8. 178-9. குறள்-1120.

காட்சி-24: 10 மணாளன்-கணவன்; மண் ஆளன்; ஆளன்-கணவன். மண் ஆளனை-மண்ணாகிய கணவனை. 25. வாய் ஒன்றுபடல்-பேசல். 27. தொல். அகத்-43-4. 45. வரைவுடன் படுதல்-மணஞ் செய்து கொடுக்க உடன்படுதல்.

காட்சி-25: 101-6. கிள்ளை முதலிய பன்னிரண்டும் குதிரையின் பெயர்கள். இவை பிற பொருளையுங் குறிக்கும் பலபொருளொருசொற்களாகலான், சிறப்புச் சொல்லோடு சேர்த்துக் கூறப்பட்டுள்ளன. பேசுங் கிள்ளை-கிளி. வீசுங்கோடை-மேல் காற்று. கொக்குப் பறக்கும்- பிடரிமயிர் நறுக்கப்படும். பாடலம்-சிலம்பு, அணியப்படும். கோணம்-முக்கோணம். கோணம் கணிக்கப்படும்; கணித்தல்-அளத்தல். பரி-பருத்தி; பருத்தி வெடிக்கும். குந்தம்-ஈட்டி; ஈட்டியால் குத்தப்படும். தூசி-புழுதி-சருகு. புழுதி பரவும். வாசி-தன்மை. கரத்தல்-மறைதல். இவுளி-மாமரம். மாங்காய் கனியும். மாம்பழம் இனிக்கும்.

காட்சி-26: 10. ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். 31. இயற்கைப்புணர்ச்சிக் கேற்ற இலக்கணம் அமையவில்லை. மெய்தொட்டுப்பயிறல் முதலியன அங்கு நிகழவில்லை. 39. உயிரென்றது-குதிரையை. 44.களவுப் பொருள்கள்-உள்ளமும், குதிரையும், உளங்கொள் கள்வன்-காமஞ்சரி. 74-5. குறள்-277.

காட்சி-27: 13. கெடுமதியாளன்-திங்கள்; தலைவனையும் குறிக்கும். 13-20. இரவு நீட்டித்துப் பிரிவுத் துன்பம் ஆற்றாளாய தலைமகள் (காமஞ்சரி) பகலவனைப் பற்றிக் கூறுதல். 17. வான்வந்த புகழோன் - பகலவன், தலைவன். 20. குணக்குன்றினை அணுகாது-கிழக்கில் தோன்றாது. தலைவன் நற்குணமின்றி. 33. இருவகைக் குறி - பகற்குறி,

இரவுக்குறி. (தொல். களவு-16). 34. மனைப்படு செறிவு-இற் செறிப்பு. 37. நாலும்-நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு.

காட்சி-28: 25-8. ஒப்புமை பத்து (மெய்-25).

காட்சி-29: 41-2. குறள்-667. 109. சொட்டைப் படை-செம்மறிக் கிடாய்க் கொம்பு போலத் திருகி, இடையில் கைப் பிடியுடையதாய், இருபுறமும் கூராக உள்ள ஒரு கருவி. 126-9. குறள்-486. 143-குறள்-776. இக் குறளின் விளக்கமே இவ் விளையாட்டு.

காட்சி-30: 1. புகுமுகம் புரியா-தலைவன் தன்னைப் பார்த்தலை விரும்பாத. 10. கைப்படு பொருள்-தலைவன். 33. புதர்க்குள் அம்புலி காட்டல்-முகங்கோணல். அம்புலி-நிலா. 78-9. காமஞ்சரி என்னும் பெயரையுடைய, காமஞ்சரி அணை-சோலையில் பூத்த பூங்கொத்தினைப் போன்றவளே, காமம் சரி எனப்பட்டது-நாம் கொண்ட காதல் உன் பெற்றோரால் சரி என ஒப்புக்கொள்ளப்பட்டது. அணை-அனையவள். 81-3. பழையன் மனைவி காமஞ்சரி என. 107. குறள்-467. 112. செயிர்அறு காட்சியர்-குற்றமற்ற அறிவினையுடையார். 157-8. ஆசு-பற்று. பொன்துண்டுகளை இணைக்கப் பயன் படுத்தும் பற்று-பொடி எனப்படும். ஓராசிடை இரு குறள் நேரிசை வெண்பா எனக் காண்க. ஆக்குநர்-பொற் கொல்லரும், புலவரும்.

காட்சி-31: 2. இரு மூன்றுயிர்-ஓரறிவுயிர் முதல் ஆறறி வுயிர் ஈருக ஆறு. 26. குறள்-390. 29. காவிரி ஆர்-காவிரி யால் வளம் பொருந்திய. 5-15. தமிழைப் பெண்ணாக உருவகம். சங்கர்-கூட்டம். மூன்று-நற்றாய், செவிலி, தோழி. நடத்தல்-பாராட்டல். பாவகை கூடி-படிப்படியாக வளர்ந்து. பாவுதல்-வளர்தல். வீற்றிருத்தல்-போற்றுதல். 30. ஓ-ஒழிவு. முகம்-எதிர்த்தல். ஓமுக-பகைவரை எதிர்த் தொழிப்பவனே.

காட்சி-33: 10. குறள்-299. 95. செவிலி-கொங்குவேள் செவிலி, மாலதி.

காட்சி-34: 19-21. குறள்-770. 35-7. குறள்-517. 38: இதனிற் புணர்ந்ததென்-இதைவிட வேறு பேறு என்ன.

காட்சி-35: 8. வானமலை என்பது. பாலக்காட்டுக் கணவாய்க்கு வடக்கிலுள்ள மேற்குமலைத் தொடரின் பழம் பெயர். வானமலையில் தோன்றுவதனாலேயே அவ்வாற்றுக்கு வானி என்ற பெயர் ஏற்பட்டது. 9. மேற்கரை-இன்று மர்க்காரா என்று திரிந்து வழங்குகிறது. ‘உறப்பெறு மலிபுனல் செல்வப் பொலிவுடன் போதரும் காவிரி’ எனக் கூட்டுக. அடையப் பெற்ற மிக்க நீராகிய செல்வப் பொலி வுடன் வரும் காவிரி. 26. பேர் உரை நம்பி-பெரும் புகழை யுடைய தெற்காணம்பி.

காட்சி-36: 40-1. குறள்-292. 98. வாள் எனக் கொள்ளல் முதலில் காட்டுதல்.

காட்சி-37: 2. இருபனியும் இருவேனிலும் எனக் கூட்டுக. 9. இருபொழுது - பெரும்பொழுது, சிறுபொழுது. 37. குறள் 47.

காட்சி-38: 66. அளி - வண்டு. அளிபடு குழலி - வண்டு மொய்க்கும் கூந்தலையுடையவளே. குழல்-கூந்தல். ஒருவகை மீன்-67. கயல்படு கண்ணி-கெண்டைமீன் போன்ற கண்ணை யுடையவளே. கயல்படும் கண்ணியை-வலையை உடையவளே. அயில்-அழகு. அயிலை-ஒருவகை மீன். 68. கழல் - சிலம்பு. நீ - குறுக்கல் விகாரம். தாள்-கால், வாய்க்கால். கழனி-வயல். ஆள்படு-ஆளப்படும்-பேசும். சொல்-நெல். ஆள்படு ஆள்மட்டம் வளரும். 66-8-இவ்வடிகளின் நயங்காண்க 76. ஆறல். இருல்- இரண்டும் மீன்வகை. 83-6. விண்மீனினம்-பாசறைக் குவமை. 86-9 இருபகை நாடுகளின் தலைநகர்கள்-சத்தியமங்கலமும், தலைக்காடும் - இருகரையினும் அமைந் துள்ள பாசறைக்குவமை.

காட்சி-39: 4-5. சொல்-சொல். நெல். செய்யுள்-பாட்டு. செய்உள்-வயலின் கண். செய்-வயல்.

காட்சி-40: 87. வளிமுதல் நாடி-காற்று, தீ, நீர் என்னும் நாடிகள். இவற்றுள் எது மிகினும் குறையினும் நோய்செய்

யும். உணவு நடக்கை முதலியவற்ருல் இவற்றை அளவாக வைத்துக் கொள்ள வேண்டும். குறள்-941. 1(6-8. பலவின் பழம் தூங்கு முழவு - பலாப் பழம் போலத் தொங்குகின்ற மத்தளம். முழவு-மத்தளம். கொழுந்து ஊங்கு-கிளையில். 179. குறள்-168.

காட்சி-41: 166. கொம்பும் காலும் (கொங்குவேள்). கொ- 'ொ.' அவை அல்லாத குகை - கங்கநாடு. 'க'. 246. குறள்-667. 254. கால்-நாலிலொன்று. நம் உடம்பின் நாலிலொரு பாகமே நமது கால். முக்கால்- மற்றபாகம் - உடம்பு. 267. 274. வாழ்வியல் விளக்கம். 275. அளிப்பட-சொன்னபடி. 283. 'கல்லும் தகரும்'- நீதிநெறி விளக்கம்-14. 292.முடி-கொங்குவேள். மலை - பழையன். 304-5. குறள்-775, குறள் வெண் செந்துறை- 3. இருபடை வலியும் இவ்விருவராக எதிர்ந்து பொருவது போல். 410. வெட்டின வாளை வெட்டி ஞன். குறள் வெண் செந்துறை-30. செங்கரம்- 'தட்டுக்கரம் என்னும் விளையாட்டில் உள்ள நேர் செங்குத்துக் கோடு. கட்டுவோன் இதில் அங்குமிங்கும் ஓடுவான். 436. வடுப்பட-இழிவுண்டாக.447. குறள்-71, 574. அமர்பெறு நோய்தின-போர் பெற விரும்பும் வருத்தம் வருத்த, கவல்-வருந்துகின்ற. 622. என் கொத்து-காமஞ்சரி, அலர்மலர்-பெற்ற மகன். 636 ஏனது-தற்கொலை. 698. ஊழ் - திருக்குறள் குழந்தையுரை பார்க்க.7 34-5. குறள்-336. 763. கால்பட வந்த-கால்வழியாக வந்த. 803. கொத்தலர் தேன் - காமஞ்சரி பெற்றமகன். தேன் மடுத்த சொல்-இனிமையான சொல். 805-6. குறள்-56:

—:0:—

# அருஞ்சொற்பொருள் அகரவரிசை

அஃகுதல்-சுருங்குதல்,குன்றுதல்
அகல்-அகலம்
அசும்பு-நீர்ப்பொசிவு
அஞர்-துன்பம்
அஞ்ஞை-தாய்
அடங்கார்-பகைவர்
அடுதல்-கொல்லுதல்
அடையலர்-பகைவர்
அட்டில்-சமையலறை
அணல்-தாடி
அண்டர்-பகைவர்
அண்டுதல்-பொருந்துதல், அடைதல்
அதரிதிரித்தல்-ஏர்க்களத்தில் தாம்பாடுதல்
அதர்-வழி
அதிர்த்தல்-நடுங்குதல்
அமரார்-பகைவர்
அமர்-போர்
அமலுதல்-நிறைதல்
அமை-மூங்கில்
அம்பு-நீர்
அம்-அழகு
அயர்வு-தளர்ச்சி, மறதி
அயிலல்-உண்ணல்
அயில்-வேல், கூர்மை
அயில்-அயிலை-ஒருவகைமீன்
அரசுகட்டில்-அரியணை
அரம்பை-வாழை
அரி-குதிரை, வண்டு, கோடு, சிங்கம், பகைவன்
அரிமா-சிங்கம்
அரிஏறு-சிங்கம்
அலமரல்-மனந்தடுமாறுதல்
அலர்-மலர், பழிச்சொல்
அள்ளுதல்-எடுத்தல், மிகுதல்
அழுக்காறு-பொறாமை
அளி-வண்டு, அன்பு
அறல்-கருமணல்
அறை-பாறை, அறைகூவல்
அறைபோதல்-பகைவரைச் சேறல்
அற்றம்-தக்ககாலம்
அன-அத்தகைய
ஆ-மாடு
ஆசு-குற்றம், பற்றுசு
ஆடு-ஆடுதல், கொல்லுதல்
ஆம்பி-காளான்
ஆயம்-விளையாட்டு மகளிர்
ஆர்-வண்டிச்சக்கர ஆரக்கால்
ஆர்தல்-உண்ணுதல் பொருந்துதல்
ஆழி-கடல், மோதிரம்
ஆற்றறுத்தல்-இடையிற் கைவிடல்
ஆறு-ஆறுமை-குறையாமை, பொருந்தாமை, நீங்காமை
இகத்தல்-நீங்குதல்
இகலார், இகலர் -பகைவர்
இகல்-பகை
இகன்று-மாறுபட்டு
இக்கட்டு-இடையூறு
இடித்தென-இடிபோல்
இமிழ்தல்-ஒலித்தல்
இரலை-மான்
இரிதல்-அஞ்சுதல்,ஓடுதல்
இவர்தல்-பாய்தல், செல்லுதல்
இவறுதல்-ஈயாத்தன்மை
இவறன்-ஈயான்
இவுளி-குதிரை, மாமரம்
இழுக்காறு-தீநெறி
இழுது-வெண்ணெய்
இறந்த-மிக்க, கடந்த
இறல்- தேன்கூடு, ஒருவகைமீன்
இறுவாய்-இறுதி

இறை-முன்கை, விடை, நேரம்
இன்னலர்-பகைவர்
இன்னல்-துன்பம்
ஈயல்-ஈசல்
உகப்பு-மகிழ்ச்சி
உகைத்து-செலுத்தி
உஞற்றல்-செய்தல்
உடு-விண்மீன்
உட்குதல்-நாணுதல், அஞ்சுதல்
உணக்குதல்-உலர்த்துதல்
உந்தி-வயிறு. கொப்பூழ்
உந்தை-உன் தந்தை
உய்தல்-வாழ்தல்
உய்த்தல்-செலுத்தல்
உய்ப்பாடு-இயக்குமுறை
உரு-பெருமை, அச்சம்
உருப்பு-முழுதும்
உலைக்குருகு-உலைத்துருத்தி
உவர்ப்பு-வெறுப்பு
உவா-அமாவாசை
உழுவலன்பு-இடையறாத அன்பு
உளை-பிடரிமயிர், சேறு
உள்குதல்-மனங்கலங்குதல்
உறைப்ப-விளங்க
உன்னுதல்-நினைத்தல்
ஊடு-நடு. நடுவில்
ஊரலர்-ஊரார் பழித்தல்
ஊருணி-ஊர்க் கிணறு
ஊர்தல்-மேற்சேறல்
ஊழ்த்தல்-உதிர்தல்
ஊழ்வகை-முறையாக
எங்கை-தங்கை
எடுத்தல்-படையெடுத்தல்
எண்ணலர்-பகைவர்
எண்-எண்ணம்
எண்மை-எளிமை
எந்தை-என் தந்தை
எயில்-மதில்
எய்த்தல்-சோம்புதல்
எய்யாமை-அறியாமை
எல்லி-இரவு
எல்-விளக்கம்
எவன்-ஏன்
எழிலி-முகில்
எழினி-திரைச்சீலை
எழு-தூண்
எற்றுதல்-தாங்குதல். உதைத்துத் தள்ளுதல்
ஏணை-தொட்டில்
ஏது-காரணம்
ஏமம்-பாதுகாப்பு
ஏர்-அழகு, கலப்பை
ஏலது-இயன்றது
ஏழை-அறிவிலான்
ஏறிட்டு-உற்று, கவனித்து
ஏற்றுருமு-இடி
ஏனவர்-பகைவர்
ஏனையும்-எதையும்
ஐம்பால்-கூந்தல்
ஐயன்-முதியவன்
ஓசிதல்-வளைதல்
ஒட்டலன்-பகைவன்
ஒரீஇ-நீக்கி
ஒருதலை-துணிவு
ஒருவுதல்-நீங்குதல்
ஒல்லார்-பகைவர்
ஒல்லுதல்-இயலுதல்
ஒவ்வும்-பொருந்தும்
ஒளிறுதல்-விளங்குதல்
ஒள்-ஒளி
ஒள்குதல்-தளர்தல், ஒளிர்தல்
ஒன்னலர், ஒன்னூர் -பகைவர்
ஓர்த்தல்-எண்ணுதல்
ஓல்-ஓசை
கங்குல்-இரவு
கஞலுதல்-செய்தல், விளங்குதல், பொருந்துதல்
கடவு-நுழைவழி
கடம், கடாம் -யானைமதம்
கடி-மிக, மணம்

கொய்யுளை-பிடரிமயிர், குதிரை
கொழுதல்-பறித்தல்
கொற்றம்-வெற்றி
கொன்-பயனின்மை
கோடல்-கொள்ளல்
கோடு-கொம்பு
கோடை-மேல்காற்று, குதிரை
கோட்டுமா-யானை
கோது-குற்றம்
கோலுகை-வளைந்த கை
கோலுதல்-செய்தல்
கோல்-அம்பு, தண்டு
கோழ்-செழிப்பான
கோளரி-சிங்கம்
சமைதல்-அமைதல்
சாரி-வட்டமாயோடுதல்
சார்பலர்-பகைவர்
சால்-மிடா
சிங்குதல்-குன்றுதல், அழிதல்
சிலை-வில், கற்சிலை
சிவல்-கவுதாரி
சினை-கிளை-உறுப்பு
சுடர்-ஞாயிறு
செத்த-போன்ற
செப்பு-சிமிழ்
செர்பஞ்சு-செம்பஞ்சுக் குழம்பு
செயான்று-தொழில் செய்து
செயிர்-குற்றம்
செய்-வயல்
செலீஇ-சென்று
செவ்வி-தக்கபடி, நிலைமை
செவ்விறை-நேர்விடை
செறு-வயல்
செறுநர்-பகைவர்
செற்றம்-சினம்
சேமக்கலம்-சேகண்டி
சேல்-கெண்டைமீன்
சைவலம்-நீர்ப்பாசி
சொல்-நெல்
சோரி-இரத்தம்
சோறு-மரஉள்வீடு-மரச்சோறு

ஞாட்பு-போர்
ஞாயில்-மதில்
ஞாய்-தாய்
ஞாலுதல்-தொங்குதல்
ஞான்ற-தொங்கிய
ஞான்று-நாள்
ஞாற்றி-தொங்கவிட்டு
தகர்-செம்மறிக்கிடாய்
தகைந்து-நெருங்கி
தஞ்சம்-பற்றுக்கோடு-அடைக்கலம்
தடம்-வழி, குளம்
தணத்தல்-பிரிதல்
தண்டுதல்-நீங்குதல்
தபுதல்-நீங்குதல்
தரித்தல்-தழைத்தல், நிலைத்தல்
தலைப்பெய்தல்-ஒன்று கூடுதல்
தலையுறை-தலைக்கவசம்
தவவா-நீங்கா
தவளம்-வெண்மை
தழங்குதல்-முழங்குதல்
தழன்று-சினந்து
தறுகண்-அஞ்சாமை
தறுதலை-குறும்புக்காரி
தனிப்படர்-மிக்க துன்பம்
தா-குறைபாடு
தாது-பூந்தாது
தாளம்-12 விரலளவு
தாற்றுக்கோல்-ஒரு முனையில் இருப்பு முள் அடித்த சாட்டைக்கோல்
திருந்தலர்-பகைவர்
தீ-பசி
துப்பு-வலி, பவளம்
தும்பை-போர்ப்பூ
துரத்தல்-செலுத்தல்
துவர்-பவளம்
துறுகல்-உருண்டைக்கல், பாறை
துன்னுதல்-அணுகுதல், பொருந்துதல்
தூக்கு-பாட்டு

தூங்குதல்-தொங்குதல்
தூசி-புழுதி, முன்னணிப்படை
தூசு-சேத்தை-முன்னணிப்படை
தூது-பருக்கைக்கல்
தூறு-புதர்
தெங்கு-தென்னை
தெருட்டிய-தெளிந்த
தெருளுதல்-தெளிதல்
தெவ்வர்-பகைவர்
தெளித்தல்-விளக்கிக் கூறுதல்
தெறுதல்-சுடுதல், அழித்தல்
தெறுழ்—ஒரு படர்கொடி
தென்—அழகு
தென்கால்-தென்றல்
தையிய-பொருந்திய
தையுற—அழகான
தொடக்கு—கட்டு, பற்று
தொடி-வளையல்
தொடை-மாலை, மோனை முதலிய பாத்தொடை
தொய்யில், தோட் கோலம்
தொழுத்தை—பணிப்பெண், அடிமை
தோல்-கேடயம்
தோற்றரவு-தோற்றம்
நகுதல்-விளங்குதல், நகைத்தல்
நசை-விருப்பம், விரும்பி
நடைப்பாடு—உலக நடை
நண்ணுர்-பகைவர்
நவிலுதல்-விரும்புதல் சொல்லுதல்
நளி-மிக்க
நன்னர்-நன்கு
நாகு—இளமை
நாண்—நாணம், கயிறு
நாப்பண்-நடு
நாம், நாம—அச்சம்
நாலுதல்—தொங்குதல்
நாவாய்-கப்பல்
நாளவை—, நாளோலக்கம் —அரசவை
நிரல்—வரிசை
நிரை—மாட்டுக்கூட்டம்
நிவப்பு—உயர்ச்சி
நிறம்-மார்பு
நீர்-தன்மை
நீள்வு-நீளம்
நுடங்குதல்—துவளுதல்
நூறுதல்-கொல்லுதல்
நெட்டு-நீளம்
நெட்டுயிர்ப்பு-பெருமூச்சு
நென்னல்-நேற்று
நேரார், நேரலர் -பகைவர்
நெருநல்-நேற்று
நொடித்தல் ஒடித்தல், அழித்தல்
நோனு-பொருத, ஆற்றுத
நோனுர்-பகைவர்
பகடு-பெருமை, யானை
படர்-துன்பம்
படர்தல்-செல்லுதல்
பட்டறிவு-பகுத்தறிவு
பட்டாங்கு-உண்மையாக
பணை-முரசு, வயல்
பண்ணை-வயல், மகளிர் விளையாட்டு
பண்-இசை
பதர்-பயனற்றது
பம்புதல்-செறிதல், பரவுதல்
பரி-குதிரை, பருத்தி
பரிசு-தன்மை
பரித்தல்-தரித்தல், தாங்குதல்
பரிநூல்-குதிரையிலக்கண நூல்
பரிவு-இரக்கம், அன்பு
பரீஇ-வருத்தி
பழனம்-வயல், பொய்கை
பழுனிய-முதிர்ந்த, மிக்க
பற்றலர்-பகைவர்
பனித்தல்-நடுங்கல், குளிர்தல்
பாகு-யானைப்பாகன்
பாடு-பெருமை, வேலைப்பாடு
பாரித்த-பெரிய

பார்ப்பு-பறவைக்குஞ்சு
பாறுதல்-அறுதல், சிதறுதல்
பிணை-பெண்மான்
பிறக்கிடல்-பின்வாங்கல்
பிறங்குதல்-விளங்குதல்
பீடு-பெருமை
புகல்-விருப்பம், அடைக்கலம்
புடை-பக்கம்
புதவம்-கதவு
புரத்தல்-காத்தல்
புரிசை-மதில்
புலத்தல்-வெறுத்தல்
புல்லரித்தல்-வருந்துதல், ஒருநிலைப் படாமை
புல்வாய்-மான்
புள்ளரசு-பருந்து
புறங்கொடுத்தல்-தோற்றல்
புறந்தருதல்-பாதுகாத்தல்
புறம்-முதுகு
புற்புதம்-நீர்க்குமிழி
புனம்-கொல்லை, தோட்டம்
புன்கண்-துன்பம்
புன்கன்-பொடியன்
பூசல்-போர்
பூசல்மயக்கம்-கூடியழுதல்
பூசுதல்-தடவுதல், படுதல்
பூசை-பூனை
பூட்கை-மேற்கொண்டது
பூழ்-காடை
பெண்ணை-பனை
பேணார்-பகைவர்
பேதுறுதல்-மனங்கலங்குதல்
பேரிய-பெரிய
பொங்கு-பறவையிறகு
பொங்குவேள்-மிக்க விருப்பம்
பொச்சாப்பு-மறதி
பொதினி-பழனி
பொய்தல்-மகளிர் விளையாட்டு
பொலம்-பொன்
பொலிதல்-விளங்கல், துளித்தல்
பொறை-பொறுமை, பாறை
பொன்றுதல்-இறத்தல்
போக்கு-குற்றம், நீளம்
போர்-வைக்கோற்போர்
போழ்தும்-எப்போதும்
மங்குல்-முகில்
மஞ்சன்-மைந்தன்
மஞ்சு-முகில்
மஞ்ஞை-மயில்
மடை-ஏணியின் அடியில் பொருத்தப்பட்ட பலகை
மட்டு-தேன், அளவு
மண்டுதல்-மிகுதல்
மண்ணுதல்-குளித்தல்
மண்ணுறுத்தல்-தூய்தாக்கல்
மரம்-ஒருவகைப் பறை
மரீஇ-பொருந்தி
மரு-மணம்
மருள்-போல
மலிதல்-நிறைதல்
மலைப்பு-மாறுபாடு
மல்குதல்-நிறைதல்
மல்-வலி, மற்போர்
மழவன்-இளைஞன்
மறுகு-தெரு
மறை-கலப்பு நிறமுடையது
மன்பதை-மக்கள்
மன்றல்-மணம், திருமணம்
மன்னோரனைய-தங்களைப்போன்ற மன்-தலைவன்
மால்-விருப்பம்
மாறு-பகை
மாற்றலர்-பகைவர்
மான-போல
மான அரி-மானமுடைய சிங்கம்
மிஞ்சுதல்-செருக்குறுதல்
மிடல்-வலி
மிடுக்கு-வலி
மீக்குறுதல்-மேலே தூக்குதல்
மீயுற-மேலே தூக்கி
முகவாய்-தாழ்வாய்

முகிழ்த்தல்-தோன்றுதல்
முக்குதல்-உண்ணுதல்
முடித்தலை-உச்சந்தலை
முட்டாக்கோடு-கிளை
முட்டு-தடை, இடையூறு
முதை-முற்றிய, பழங்கொல்லை
முப்பொருள்-அறம்பொருளின்பம்
முரண்-வலி
முரலுதல்-ஒலித்தல், முழங்குதல்
முழவு-மத்தளம்
முளிதல்-முதிர்தல்
முரஞ்செவி-யானை
முற்றில்-சிறுமுறம்
முனம்-முன்னம்-குறிப்பு
முனை இ-முனைந்து
முனை-பகைப்புலம், போர்
முனைப்பு-செருக்கு, முழுமுயற்சி
முன்பு-வலி
மூசுதல்-மொய்த்தல், தடவுதல்
மூவர்-சேர சோழ பாண்டியர்
மூவினம்-ஆடு மாடு எருமை
மெய்பிறிதாதல்-இறத்தல்
மெய்யுறை-கவசம்
மென்பால்-மருத நிலம்
மேயிலீர்-வாரீர்
மேலை-முன்னையது, பழையது
மேவார்-பகைவர்
மேவுதல்-பொருந்துதல்
மேற்கட்டு-பந்தலின் உட்புறம் மேலே கட்டுஞ்சீலை
மோடு-மிகுதி
மோவாய்-தாடி
யவனர்-மேனாட்டினர்
யா-ஒரு மரம்
யாப்பு-உறுதி, அமைப்பு
யாக்கை-உடம்பு, கட்டுக்கோப்பு
யாணர்-புதுவருவாய்
வகுந்து-வழி
வஞ்சி-மேற்சேறல்
வடி-கூர்மை
வடு-தழும்பு, இழிவு
வட்கார்-பகைவர்
வட்டு-சூதாடுகருவி
வண்மை-வளமை, கொடை
வண்ணம-அழகு. இதழ்ப்பூச்சு
வம்பலர்-பகைவர்
வம்பு-மணம், புதிய, வழக்கு
வயம்-வெற்றி
வரி-இசைப்பாடல்
வரையா-நீக்கா, ஒழியா
வலத்தல்-சொல்லல்
வலவை-நாணிலி
வளி-காற்று
வளித்தென-காற்றைப்போல
வள்ளை-ஒரு கொடி
வள்-கூர்மை
வன்பால்-வறண்ட நிலம்
வாகை-வெற்றி
வாங்குதல்-வளைதல்
வாடை-மண்ம்-வடகாற்று
வாட்டுரு-வாள்துரு; துரு-இரும்புக்கறை
வாய்-உண்மை
வாரம்-பின்பாட்டு
வாரிய-நீண்ட
வால்-வெண்மை
வாளா-சும்மா
வாளி-அம்பு
வாள்வரி-புலி
வான்-வானம், சிறப்பு
விஞ்சிய-மிக்க
விண்டு-நீங்கி
விண்மணி-ஞாயிறு
விதப்பு-சிறப்பு
விதிர்தல்-சிதறுதல்
விதிர்ப்பு-நடுக்கம்
விதுக்கென-திடீரென
விரல்-விரலளவு

விரவலர்-பகைவர்
விரை-மணம்
விழுக்கு-கொழுப்பு
விழுமம்-சிறப்பு, துன்பம்
விழைதல்-விரும்புதல்
விள்ளுதல்-செல்லாலுதல்
வீவுறல்-இறத்தல்
வீழ்தல்-விரும்புதல்
வீறு-பெருமை, சிறப்பு, வெற்றி
வெஃகுதல்-விரும்புதல்
வெதிர்-மூங்கில்
வெந், வெரிந் -முதுகு
வெம்மை-கொடுமை-விருப்பம்
வெய்யவர்-பகைவர்
வெருகு-பூனை
வெருவுதல்-அஞ்சுதல்
வெளிறு-உள்ளீடின்மை
வெல்குதல்-நாணுதல்
வெள்வேல்-வெற்றி
வெறி-மணம், யானைமதம்
வேட்டல், வேட்கை, வேள் - விருப்பம்
வை-கூர்மை, வைக்கோல்
வைகுதல்-தங்குதல்



—: o :—

# புலவர் குழந்தையின் நூல்கள்

## செய்யுள் நூல்கள்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1. | இராவண காவியம் (இரண்டாம் பதிப்பு) | 12 | 00 |
| 2. | அரசியலரங்கம் (அகம் புற வாழ்வும், அரசியலும்) | 5 | 00 |
| 3. | நெருஞ்சிப் பழம் (காதற் பனுவல்) | 1 | 00 |
| 4. | உலகப் பெரியோன் கென்னடி | 1 | 00 |
| 5. | திருநணுச் சிலேடை வெண்பா | 1 | 50 |
| 6. | புலவர் குழந்தை பாடல் (12ஆம் பருவத்திலிருந்து 1972 வரை பாடியன) | 5 | 00 |

## உரை நூல்கள்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 7. | திருக்குறள்—குழந்தையுரை | 5 | 00 |
| 8. | தொல்காப்பியம்-பொருளதிகாரம் குழந்தையுரை | 7 | 00 |
| 9. | நீதிக்களஞ்சியம் உரை (நாலடியார் முதலிய 21 நூல்கள்) | 10 | 00 |

## யாப்பிலக்கணம்-உரைநடை

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 10. | யாப்பதிகாரம் | 3 | 00 |
| 11. | தொடையதிகாரம் | 7 | 00 |

## உரைநடை நூல்கள்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 12. | தொல்காப்பியர் காலத் தமிழர் (பொருளதிகார விளக்கம்) | 5 | 00 |
| 13. | திருக்குறளும் பரிமேலழகரும் (ஆராய்ச்சி நூல்) | 2 | 00 |
| 14. | கொங்கு நாடு (சீரிய வரலாற்று நூல்) | 6 | 00 |
| 15. | தமிழக வரலாறு (புதிய முறையில்) | 4 | 00 |
| 16. | பூவா முல்லை (ஆராய்ச்சிக் கட்டுரைகள்) | 3 | 50 |
| 17. | தமிழெழுத்துச் சீர்திருத்தம் | 1 | 00 |
| 18. | தமிழ் வாழ்க—நாடகம் (கி. மு. 1000இல் தமிழர் நிலை) | 2 | 00 |

பாரி நிலையம் - சென்னை 1.